உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸ்ரீ க்ருஷ்ண நமஸ்காரம்

ப்ரசுரம் 1

ஆடி-மீ 24உ வெள்ளிக்கிழமை

8—8—1947

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,
( Regd )
கும்பகோணம்.

(விலை அணா ஒன்று)

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸ்ரீ க்ருஷ்ண நமஸ்காரம்.

---

𑌨𑌮𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌦𑍇𑌵𑌾𑌯 𑌗𑍋𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌹𑌿𑌤𑌾𑌯 𑌚 ।
𑌜𑌗𑌦𑍍𑌧𑌿𑌤𑌾𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥

**நமோ ப்ரஹ்மண்யதேவாய கோப்ராஹ்மண ஹிதாய ச. ஜகத்ஹிதாய க்ருஷ்ணாய கோவிந்தாய நமோ நம:.**

இந்த சுலோகம் ஸ்ரீ மகாபாரதம் சாந்திபர்வத்திலிருக்கிறது. காலையில் எழுந்தவுடன் இந்த சுலோகத்தை ஸ்மரிக்க வேண்டுமென்று தெரிவித்துக்கொள்ளப்படுகிறது.

## இந்த சுலோகத்தைப்பற்றிய சில விவரங்கள்.

---

ஜகத்தின் முழுவதுக்கும் ஹிதத்தைக்கோறுவதே நமது முதற் கடமை.

ஸ்வஸ்திப்ரஜாப்ய: என்கிற சுலோகத்திலும் லோகா: ஸமஸ்தா: ஸுகினோ பவந்து என்று முடித்திருக்கிறது.

இந்த சுலோகத்தில் பொதுவாக உலக க்ஷேமத்தைக் கோறியிருந்தும், பசுக்களையும், ப்ராம்மணர்களையும் ரக்ஷித்து அவர்கள் க்ஷேமமாய் இருக்கவேண்டும் என்று ஏன் சொல்ல வேண்டும். அவைகளும், அவர்களும் உலகத்தில் அடங்கினவர்கள்தானே. ஆகையால் இதன் காரணம் நன்றாய் விளங்கவில்லை என்று சொல்லக்கூடும். "வையகம் துயர் தீர்கவே" என்று பொதுவாக முடியும் ஸம்பந்தஸ்வாமி பாடலிலும், "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்" என்று

சிறப்பாக கூறப்பட்டிருக்கிறது. இப்படிச்சொல்வதற்கு காரணம் என்ன வென்பதை நாம் விசாரிக்கவேண்டும்.

சைவர்கள், வைஷ்ணவர்கள், வேதாந்திகள் ஆகிய நம்மெல்லோருக்கும் இது பொதுக்கொள்கையாக காணப் படுகிறது.

இப்போது ஸந்தேகத்தைப் பற்றி நாமெல்லோரும் விசாரித்து தத்வத்தை அறிந்துகொள்ளக் கடமைப்பட்டுள் ளோம்.

உலகத்தில் யார் எவ்விதக்கேள்விகேட்டாலும் அதற் கெல்லாம் தகுந்த பதில் கீதா சாஸ்த்ரத்தில் சொல்லப்பட் டிருக்கிறது.

𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍋 𑌗𑌾𑌵𑍋
𑌦𑍋𑌗𑍍𑌧𑌾 𑌗𑍋𑌪𑌾𑌲𑌨𑌨𑍍𑌦𑌨𑌃 ।
𑌪𑌾𑌰𑍍𑌥𑍋 𑌵𑌤𑍍𑌸𑌃 𑌸𑍁𑌧𑍀𑌰𑍍𑌭𑍋𑌕𑍍𑌤𑌾
𑌦𑍁𑌗𑍍𑌧𑌂 𑌗𑍀𑌤𑌾𑌮𑍃𑌤𑌂 𑌮𑌹𑌤𑍍 ॥

(கீதா மங்களாசரணம் 4)

எல்லா உபநிஷத்துக்களும் பசுக்களாம். அவைகளைக் கறக்கும் இடையன் ஸ்ரீகிருஷ்ணபகவான், அப்பசுக்களின் கன்று அர்ச்சுனன். அப்பசுக்களிடம் கறந்தபால் கீதை என் பதாகும். பாலைக் குடிப்பவர்கள் வித்வான்கள்.

லோகத்தில் ஓர் இடையன் பால் கறக்கவேண்டுமானால் மாட்டுடன் கன்றையும் கொண்டுபோகவேண்டும். பால் கன்றுக்கும் மற்றவர்களுக்கும் உபயோகப்படுவதுபோல், கீதா சாஸ்திரம் யாருக்கு எவ்வித சந்தேகம் உதித்தாலும்

அதைப்போக்கும், யார் எவ்விதக் கேழ்வி கேட்டாலும் அதற்குப்பதில் அதில் இருக்கும்.

அநேக க்ரந்தங்கள் இருந்தாலும் சில எடுத்துக்கொள்ள முக்கியமான காரணம் உண்டு. இக்காலத்தில் எல்லோரும் கீதை உயர்ந்த தத்வ கிரந்தம் என்று ஒப்புக்கொள்கிருர்கள் அல்லவா? அதில் சொல்லும் தத்வங்கள் என்ன என்பதில் விவாதம் இருந்தாலும், கீதை உயர்ந்த கிரந்தம் என்பதில் ஒருவருக்கும் ஆட்சேபம் இல்லை

இப்படிப் பெரியவர்கள் ஒப்புக்கொண்ட புஸ்தகத்தி லிருந்து முன்சொன்ன சந்தேகத்திற்கு தகுந்த பதில் கிடைக்குமானல் எல்லோருக்கும் நிச்சயமான நம்பிக்கை ஏற்படும்.

இவ்வுலகில் மனிதர்களாகிய நம்முடைய ஜீவன் ரீதியை கவனிப்போம். ஓர் ஊரில் ஒரு சாமான் அதிகமாய் விளைந் தால் அதை அந்த ஸாமான் விளையாத ஊருக்கு அனுப்பி, நம் ஊரில் விளையாததும் அந்த ஊரில் விளைவதுமான மற்ருெரு சாமானை வாங்கி வருகிருேம். தச்சன், கொல்லன் முதலிய வர்கள் நமக்காக சில காரியங்களைச் செய்கிருர்கள். அதற் காக நாம் அவர்களுடைய காலக்ஷேபத்திற்கு வேண்டிய திரவியம் கொடுக்கிருேம். பசுக்களுக்குப் புல் போடுகிருேம். அவை நமக்குப் பால் கொடுக்கின்றன நாம் ராஜாங் கத்திற்கு வரி கொடுக்கிருேம். அவர்கள் நமக்குத் தீங்கு வராமல் காவல்கட்டுச் செய்கிருர்கள். இப்படி உலக முழுவதுமே பரிவர்த்தனைக் கிரமத்தில் நடந்துவரு கிறது இப்படியே நாம் லோகாந்திரங்களுடன் சில பரிவர்த் தனை ஏற்பாடு செய்துகொண்டிருக்கிருேம். இஞ்சினீர்

முதலியவர்கள் பெய்த மழைநீரை ஒழுங்காகப் பிரித்து ஆறு, வாய்க்கால் முதலியவைகளில் பாயும்படி விடுவார்களே தவிர மழை பெய்யும்படி செய்ய அவர்களால் முடியாது. மழை பெய்யவேண்டுமானால் நாம் சில ஸாமான்களை தேவ லோகத்திற்கு அனுப்பவேண்டும்.

மழை என்றால் மழைக்காக மாத்திரமில்லை. மழையின் சக்திக்கு மீறி மனிதர்களுடைய உபயோகத்திற்காக வேண்டிய எல்லா சக்திகளும் நம் அறிவிற்கெட்டாத ஒரு இடத்திலிருந்துதான் வருகின்றன. அவை எங்கிருந்து வருகின்றனவோ அந்த இடத்திற்கு நாம் செலுத்தும் கடமை வேதமென்னும் சட்ட முறைப்படி நாம் அர்ப்பணம் செய்யும் கர்மானுஷ்டானம். இதையே கீதை சொல்லி இருக்கிறது.

𑌸𑌹𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍁𑌰𑍋𑌵𑌾𑌚 𑌪𑍍𑌰𑌜𑌾
𑌪𑌤𑌿𑌃 । 𑌅𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌸𑌵𑌿𑌷𑍍𑌯𑌧𑍍𑌵𑌮𑍍 𑌏𑌷 𑌵𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌷𑍍
𑌟𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ॥ 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌭𑌾𑌵𑌯𑌤𑌾𑌨𑍇𑌨 𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾
𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 𑌵𑌃 । 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌮
𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥 ॥ (கீதை III 10-11)

இதன் அர்த்தம்

முதல் முதல் ப்ரம்மா பிராணிகளை சிருஷ்டிக்கும்போது யக்ஞத்தையும் சிருஷ்டித்தார். அப்பொழுது அவர்களைப் பார்த்து இந்த யக்ஞத்தைச் செய்து நீங்கள் க்ஷேமத்தை அடையுங்கள். இந்த யக்ஞம் உங்களுடைய இஷ்டங்களைப் பூர்த்திசெய்து வைக்கட்டும். இந்த யக்ஞத்தினால் நீங்கள் தேவர்களைத் திருப்தி செய்து வையுங்கள். அந்தத் தேவர்கள் உங்களுக்கு வேண்டிய க்ஷேமத்தைக் கொடுக்கட்டும். இப்

படியே நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொண்டு மேலான க்ஷேமத்தை அடையுங்கள்'' என்றார், என்று பகவான் சொல்லுகிறார்.

யக்ஞம் என்பது மந்த்ரம், தேவதை, ஹவிஸ் என்ற மூன்று ஸ்வரூபமாக உள்ளது. அவைகளுள் மந்த்ரம் என்பது ப்ராம்ஹணனால் சொல்லப்படவேண்டும். தேவதையை மனஸால் த்யானம் செய்யவேண்டும். ஹோமம் செய்வதற்கு முக்யமாய் வேண்டியது பசுவின் நெய். இந்தக் காலத்தில் ப்ராம்மணர்கள் பெரும்பாலும் ஆங்கிலம் படிக்கிறார்கள். அவர்கள் வேதாத்யயனம் செய்யவில்லை. இங்லீஷ் படித்தவர்களுக்கு பிறகு வேதாத்யயனம் செய்யவேண்டுமென்று நினைத்தாலும் சரியான உச்சாரணம் செய்ய முடிவதில்லை.

ஆகையால் தற்காலத்தில் ப்ராம்மணர்களிடம் மந்த்ர சக்தி இல்லை. கர்மாக்களை ஒருவரும் ஒழுங்காகச் செய்யாததால் தேவதாத்யானம் சரியாய் இல்லை. பசுவின்பால் பெரும்பாகம் காப்பிக்கு உபயோகப்பட்டுவிடுகிறது. ஆகையால் சுத்தமான பசு நெய்யும் கிடைப்பதில்லை. ஆதலால் திரவிய சக்தியும் இல்லை.

யக்ஞத்திற்கு முக்யமான மந்திரத்தை அத்யயனம் செய்வதால் ப்ராம்மணனையும், ஹோமத்ரவியமான நெய் கொடுப்பதால் பசுவையும், எல்லாவிடத்திலேயும், மேல்கண்ட சுலோகங்களிலும், திருஞானஸம்பந்தர் பாசுரத்திலும் தனியாகச் சிறப்பித்துக் கூறியதாக எண்ணவேண்டியிருக்கிறது. யக்ஞத்தினால் ஏற்படும் க்ஷேமம் ப்ராம்மணர்களுக்கும் பசுக்களுக்கும்மட்டும் இல்லை. லோகத்தில் எல்லாருக்குமே க்ஷேமத்தைக்கொடுப்பது யக்ஞம். யக்ஞங்கள் செய்தால்

தான் லோகம் க்ஷேமமாய் இருக்கும். யக்ஞம் ஒழுங்காக நடக்கவேண்டுமானால் ப்ராம்மணர்களும் பசுக்களும் க்ஷேமமாய் இருக்கவேண்டும்.

இதுவே ஜகத்தின் க்ஷேமத்திற்கு உண்மையான காரணம். தன்னலம் கருதாமல் ஜகத்தின் ஹிதத்தையே நாடுவது ப்ராம்மணர்களின் கடமை.

தான் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் வேதம் உபதேசிக்கும் விதியைத் தழுவி தான் அனுஷ்டித்து, அதன்மூலம் ஜகத்தின் உண்மையான ஹிதத்திற்குப் பாடுபடுவதே உண்மையான லோக ஸேவை. இவ்விதத்தொண்டு புரியும் பகவானுடைய அருளே அவ்திவாரம். அதை ஆதாரமாகக் கொண்டு புரியும் கர்மானுஷ்டானத் தொண்டே தற்போது உலகத்தில் உள்ள கலக்கத்தைத் தெளியவைக்கக்கூடியது.

இதுவே சைவ, சாக்த, வைஷ்ணவ முதலிய எல்லா ஆஸ்திக மதங்களுக்கும் பொதுவான கொள்கை. ஆகையால் முதலில் பகவான் கிருபைவேண்டும். ஒவ்வொரு நாளும் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவுடன்

𑌨𑌮𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌦𑍇𑌵𑌾𑌯 𑌗𑍋𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌹𑌿𑌤𑌾𑌯 𑌚 ।
𑌜𑌗𑌦𑍍𑌧𑌿𑌤𑌾𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥

**நமோப்ரஹ்மண்யதேவாய கோப்ராஹ்மணஹிதாய ச,**
**ஜகத்ஹிதாய க்ருஷ்ணாய கோவிந்தாய நமோ நம:**

என்பதை ஸ்மரித்து பகவானிடத்தில் திரிகரணங்களையும் அர்ப்பணம் செய்யவேண்டும்.

இப்படிக்கு,
**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Sarada Press, Kmu. P. I. C. No. TE 21, 9-8-47, Cps 5000.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேதமே ரக்ஷை.

ப்ரசுரம் 2

ஆடி-மீ 31வ, வெள்ளிக்கிழமை

*15—8—1947*

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,
( Regd. )
கும்பகோணம்.

(விலை அணா ஒன்று)

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேதமே ரக்ஷை.

---

பதினான்கு உலகங்களும் ஒரு ராஜ்யம். இந்த ராஜ்யத்திற்கு ஒரு சக்கரவர்த்தி. அந்தச் சக்கரவர்த்திக்கு எல்லா ஜீவராசிகளும் பிரஜைகள். ராஜ்யமும் அனாதி. சக்கரவர்த்தியும் அனாதி. ஆனால் ராஜ்யமும், சக்கரவர்த்தியும், பிரஜைகளும் இருந்தால் அதற்கு ஒரு சட்டம் வேண்டும் இவைகள் எல்லாம் அனாதியானால், சட்டமும் அனாதி. அந்த அனாதி சட்டமே வேதம். உலகம் உற்பத்தி ஆகிறது, வளர்கிறது, பிரளயம் அடைகிறது. திரும்பவும் உற்பத்தி ஆகிறது, ப்ரளயம் அடைகிறது. இப்படியே சுற்றிச் சுற்றிக்கொண்டிருக்கிறது. சக்கரவர்த்தியும் சட்டமும் மாத்திரம் ஸ்திரம். ஒவ்வொரு ஸ்ருஷ்டியின் ஆரம்பத்திலும் அந்தச் சக்கரவர்த்தி அதிகார புருஷர்களைச் சிருஷ்டி செய்கிறான். அந்த அதிகாரிகளுக்குவேண்டிய யோகசக்தியைக் கொடுக்கிறான். அந்த யோக சாஸ்திரத்தில் தன் ச்ரோத்திரத்திற்கும் வெளி ஆகாசத்திற்கும் அபேதமான ஒரு ஸம்யமும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அதை அனுஷ்டிக்கும்போது திவ்ய ச்ரோத்திரம் கிடைக்கிறதாம். அந்த திவ்ய ச்ரோத்திரத்தைக்கொண்டு வெளி ஆகாசத்தில் ஸ்திரமாய்க் கிடக்கும் அநாதி சப்த அலைகளை ஈசனுடைய அருள் ஸகாயத்தால் அந்த அதிகார புருஷர்கள் அடைகிறார்கள். அவர்களே முதல் முதலில் வேதத்தை அறிந்தவர்களாகிறார்கள். அவர்களே மந்திரத்திற்கு மகரிஷிகள். வேதாத்யயனம் ஒரு மந்திர யோகம். ஒவ்வொரு நாடி அசைவதினால் சித்தத்திற்கு ஒவ்வொரு விதமான விகாரங்கள் ஏற்படுகிறது. சில நாடிகளால் காம விகாரங்களும், சில நாடிகளால் சோம்பல் விகாரங்களும், சில நாடிகளால் சோகவிகாரங்களும் உண்டாகின்றன. இதை மாற்றிச்சொல்லின், காம விகாரம் ஏற்படும்போது சில நாடிகளில் அசைவும், போகவிகாரத்தினால் சில நாடிகளில் அசைவும், அனுபவத்தில் காணப்படுகின்றன. சாந்தம் ஏற்படும்போது முகத்தில் ஒரு களை உண்டாகிறது. அந்தக்களை சில நாடிகள் குளிர்ந்ததின் பயன். இவ்விதம் மனோ விகாரங்களால் நாடிகளில் சில விகாரங்கள் ஏற்பட்டால், மனோ விகாரத்தின் சாந்தத்தால் குளிர்மை ஏற்பட்டால், அந்த நாடிகளை வசப்படுத்தி விட்டால், காமக்குரோதங்

களேயோ, சாந்தத்தையோ நமது இஷ்டப்படி வரவழைத்துக்கொள் ளலாம். அதற்கு வெளிப்பொருள்கள் தேவை இல்லை. இப்படி நாடிகளை ஸ்வாதீனப்படுத்த ப்ராணயாமத்தை முக்கியமாகக் கொண்ட ஹடயோகம் ஒரு மார்க்கம். அதேவிதமாய் மந்திர யோகமும் ஒரு மார்க்கம். ஒரு எழுத்தை நாம் உச்சரிக்கும்போது நமது நாக்கு, உதடு, மேல்வாய், கீழ்வாய், கண்டம் முதலியவைகளில் இடைவெளி வழியாக ப்ராணவாயு வெளிப்படுகிறது. அப்பொழு துதான் அக்ஷரத்வனி உண்டாகிறது. அந்த அக்ஷரத்வனிக்குக் கார ணமாக எந்தெந்த உறுப்புகளில் ப்ராணவாயு ஸஞ்சரிக்கிறதோ அந்தந்த இடம் ஸம்பந்தப்படும் நாடிகளில் சலனம் ஏற்படுகிறது. எந்தெந்த நாடிகளில் சலனத்தினால் மனதின் எவ்வெவ்விதமான விருத்திகள் ஏற்பட்டு இகலோக க்ஷேமமும், பரலோக க்ஷேமமாகிய மோக்ஷம் முதலிய புண்யமும், சாசுவதமான பலன் ஏற்பட வேண்டுமோ அதற்கு அனுகுணமாக உச்சாரணங்களை மாத்திரம் வைத்துக்கொண்டு வேறு விதமாக உச்சாரணங்களை விலக்கி அமைந் தனவே வேதமந்திரங்கள்.

அவைகளின் ஆவ்ருத்தியால் எந்தெந்த நாடிகளில் திருப்பித் திருப்பிச் சலனம் ஏற்பட்டு ஆத்ம க்ஷேமம் கிட்டுமோ அந்த க்ஷேமத்தைத் தானும் அடைந்து, தன் மந்திரசக்தியால் உலகத் தோரும் க்ஷேமம் அடையச் செய்வதே வேதியரின் கடமை. இதுவே அவர்களின் பிறவிக் கடமையும் கூட. ஒவ்வொருவருக்கும் ஒரு பிறவிக்கடமை இருக்கிறது. ஒவ்வொருவரும் தம் பிறவிக்கட மையைத் தவறாமல் செலுத்தி, அதன் பயனைமாத்திரம் எல்லோரும் அடையும்படிச் செய்வதே சாஸ்திர முறை.

## ஏன் வேதாத்யயனம் செய்யவேண்டும்?

மற்றெல்லாக் காரியங்களையும் காரணத்தைக் கேட்டுக் கேட்டுச்செய்கிறோமா? காரணத்தைக் கேளாமல் பிறப்புரிமையாய் ஒரு காரியத்தையாவது செய்வோமே. அப்படிச் செய்யவேண்டிய காரியந்தான் வேதாத்யயனம். "ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்", என்றுள் ஒளவை தினம் வேதியர்கள் ப்ரம்மயக்ஞம் செய்யவேண்டியதைப்பற்றி ஏற்பட்டது இந்த வசனம். "ஓதல்"

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# தேஹமே தேவாலயம்.

ப்ரசுரம் 3

ஆவணி-மீ 6௳, வெள்ளிக்கிழமை

22—8—1947


**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,**

( Regd )

**கும்பகோணம்.**

(விலை அணா ஒன்று)

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# தேஹமே தேவாலயம்.

---

𑌦𑍇𑌹𑍋 𑌦𑍇𑌵𑌾𑌲𑌯𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋 𑌜𑍀𑌵𑍋 𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ॥

தேகம் ஒரு தேவாலயம். ஜீவன் ஈச்வர ஸ்வரூபம். ஆலயத்தில் அசுத்தியோடு போகக்கூடாது. அங்கே அசுத்தமான பதார்த்தங்களைக் கொண்டுபோகக்கூடாது. மாம்ஸம், சுருட்டு முதலியவைகளைக் கொண்டுபோனால் அசுத்தம் உண்டாகும். ஆகம சாஸ்திரங்களில், தீட்டோடும், தேக அசுத்தத்தோடும் போகக்கூடாது, என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே, தேகம் ஒரு தேவாலயமானால், அதிலும் அசுத்தமான பதார்த்தங்களைச் சேர்க்கக்கூடாது. மந்திர சக்தி இருக்கிற தேகத்தில் அசுத்தியானவைகளைச் சேர்த்தால், அது கெட்டுப்போய் விடும். வீட்டிற்கும் தேவாலயத்திற்கும் வித்யாசம் இருக்கிறது. வீட்டிலும் அசுத்தம் பண்ணக்கூடாது; ஆனாலும் தேவாலயத்தைப் போல அவ்வளவு கடுமையாக அசுத்தம் வராமல் வைத்துக்கொள்ள வேண்டியதில்லை. தேஹங்களுக்குள் சில தேஹங்கள் தேவாலயத்தைப்போல் இருக்கின்றன. பிராஹ்மணதேகங்கள் வேதமந்திரசக்தியை ரக்ஷிக்க வேண்டியவைகளாதலால், அதிகமான பரிசுத்தமாய் இருக்க வேண்டும். அந்தத்தேகங்கள் மற்ற தேகங்களைவிட அதிகமான பரிசுத்தியோடு இருக்கவேண்டும். அசுத்தமான பதார்த்தங்களை உள்ளே சேர்க்கக்கூடாது. மந்திரசக்தியை ரக்ஷித்து, அதனால் லோகத்திற்கு நன்மையை உண்டாக்க வேண்டியது பிராஹ்மணன் கடமை. அவனுடைய தேகம் தேவாலயத்தைப்போல் சுத்தமாக வைத்துக்கொள்ளப்படவேண்டும். அதனால்தான் அவனுக்கு அதிகமான நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் அது பண்ணுகிறார்கள், நாமும் ஏன் பண்ணக்கூடாது, என்று அசுத்தியைத் தரும் காரியங்களை பிராஹ்மணன் பண்ணக்கூடாது. அவர்கள் எல்லாம் சரீரத்தை வைத்துக்கொண்டு ஸந்தோஷமான அனுபவங்களை அடைகிறார்களே, என்று நாமும் நமக்குத் தகாதவற்றைச் செய்யக்கூடாது. பிராஹ்மணனுக்குத் தேஹம் ஸந்தோஷத்தை அனுபவிப்பதற்காக ஏற்பட்டதல்ல. வேதத்தை ரக்ஷிக்கிற தேகம்

அது. அதற்காகத்தான் செலவுபண்ணி உபநயனம் முதலியவை களைச் செய்துகொள்கிறோம் வேதமந்திரங்களை ரக்ஷிப்பதற்காக அதை வைத்துக்கொள்ளவேண்டும். தேகத்தை தேவாலயமாக வைத்து, அதற்குள் ஆசாரத்தை வைத்துக்கொள்வதானால் எல்லா ருக்கும் சௌக்கியம் உண்டாகும். எல்லோரும் தொழில் பண்ணு கிறார்களே! பணம் ஸம்பாதிக்கிறார்களே! ஏன் நாம் செய்யக் கூடாது, என்று பிராஹ்மணன் நினைக்கக்கூடாது நம்முடைய தொழிலை நன்றாகச்செய்துவிட்டு. அதனோடுகூடக் கொஞ்சம் பிரயத்தனப்படவேண்டியதுதான். நிரம்ப ஸம்பாதிக்க வேண்டு மென்று அனுசார வழியில் பிரவேசிக்கக்கூடாது. பிராஹ்மணர் களுக்கும் திரவியம் வேண்டியதுதான். ஆனால் கண்ட தேசங் களுக்குச் சென்று, ஆசார அனுஷ்டானங்களை விட்டுவிட்டு, ஸம்பா திக்கிற ஐசுவரியம் நமக்கு வேண்டாம். அப்படி ஸம்பாதிக்கா விட்டால் ஒன்றும் முடியாது என்பது இல்லை. நம்முடைய மந்திரசக் தியைக் காப்பாற்றிக்கொண்டு, நம்முடைய தர்மத்தை அனுஷ்டிப்பது முதல் கடமை. பணம் ஸம்பாதிப்பது இரண்டாவது (Secondary) தான்.

மந்திரசக்தி என்ற அக்னியை நாம் காப்பாற்றிக்கொண்டு வந்தால் அது எல்லோருக்கும் க்ஷேமத்தை உண்டாக்கும். எல்லோ ருக்கும் கஷ்டம் வந்தால் நிவர்த்திக்கும் சக்தி இருக்க வேண்டும். யாராவது கஷ்டகாலத்தில் வந்து பிரார்த்தித்தால், "நீ பண்ணு வதைத்தான் நானும் பண்ணுகிறேன். உனக்கு இருக்கிற சக்தி தான் எனக்கும் இருக்கிறது," என்று சொன்னால் அவன் பிரார்த் தித்ததற்குப் பிரயோஜனம் இல்லை. மந்திரசக்தியாகிய அக்னி இப் பொழுது அணைந்திருக்கிறது. தேஹம் விகாரம் ஆகிவிட்டது. அசுத்தமான பதார்த்தங்கள் சேர்க்கப்படுகின்றன. ஆனால் ஒரு பொறிபட்டும் அணையாமல் இருக்கிறது. அதை விருத்தி பண்ண வேண்டும். அப்படிச்செய்தால் எப்பொழுதாவது பற்றிக்கொள்ளும். அந்த நெருப்புப் பொறிதான் **காயத்ரீ.** அது பரம்பரையாக வந்தி ருக்கிறது. மூன்று தலைமுறையாக காயத்ரியை விட்டு விட்டால் அவன் பிராஹ்மணனாகமாட்டான். அப்பேர்ப்பட்டவர்கள் இருக்கிற தெரு அக்கிரஹாரம் ஆகாது

஗ாயஂதஂ த்ராயதே யஸ்மாத் ஗ாயத்ரீ த்வம் ததஃ ஸ்ம்ருதா ॥

வரவேண்டும். காலத்திலும் செய்யவேண்டும். பாரத யுத்தத்தில் ஜலம் அகப்படாமல் தூளியை வைத்துக்கொண்டு காலம் தவறாமல் அர்க்கியம் கொடுத்தார்கள், என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அஸ்தமன காலத்திலும், உதய காலத்திற்கு முந்தியும், உச்சி காலத்திலும் அர்க்கியம் கொடுக்கவேண்டும். இடைக்காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஆடு மேய்த்தார். அவர் "காணாமற் கோணாமற் கண்டு கொடு, ஆடுகாண்போகுதுபார்" என்று சொல்லி இருக்கிறார். 'காணாமல்' என்று ஸூரியனைக் காண்பதற்கு முன் என்று அர்த்தம். அதாவது, ஸூரியோதயத்திற்கு முன் காலே அர்க்கியம் கொடுக்கவேண்டும் 'கோணாமல்' என்பதற்குத் தலைக்கு நேரே ஸூரியன் இருக்கும்பொழுது என்று அர்த்தம். அதாவது, ஸூரியன் மேற்கே போவதற்கு முன் உச்சி காலத்தில் மாத்யான்ஹிக அர்க்கியம் கொடுக்கவேண்டும். 'கண்டு' என்பதற்கு ஸூரியன் இருக்கும்பொழுது என்று அர்த்தம். ஸூரியன் அஸ்தமிப்பதற்குமுன்பு, மலைவாயில் இருக்கும்பொழுது, ஸாயங்கால அர்க்கியம் கொடுக்கவேண்டும். இந்த விஷயங்களைத்தான் இடைக்காட்டுச்சித்தர் லேசாகச் சொல்லியிருக்கிறார். 'ஆடு' என்றால் நீராடு கங்கையில் ஸ்நானம் பண்ணு என்று அர்த்தம். 'காண்' என்றால் ஸேதுதரிசனம் பண்ணு என்று அர்த்தம். 'போகுது' என்றால் மேற்படி கங்கா ஸ்நானத்தாலும், ஸேது தரிசனத்தாலும் நம் பாபம் தொலைகிறது. இதைப்பார் என்று சொன்னார்.

காயத்ரியைச் சரியாகப் பண்ணினால்தான் வேத மந்திர ஸித்தி உண்டாகும். அர்க்கியத்தையும், காயத்ரியையும் தவறாமல் செய்து கொண்டுவரவேண்டும். ஜன்மத்தில் ஒருதரமாவது கங்காஸ்நானம், ஸேது தரிசனம் பண்ணவேண்டும் ஸந்த்யாவந்தனத்தைத் தவறாமல் செய்துவரவேண்டும். அங்கபுஷ்கலமாகப்பண்ணினால்தான் பிரதானமாவது நன்றாக இருக்கும்.

ஜ்வரம் வந்தால் கூட இருக்கிறவர்கள் அவர்களுக்காக ஸந்தியாவந்தனம் பண்ணித் தீர்த்தத்தை ஜ்வரம் வந்தவர்வாயில் விடவேண்டும். இப்பொழுது நமக்கு நித்தியப்படி ஜ்வரம் வந்தது போலத்தான் இருக்கிறது. ஜ்வரம் வந்தால் அதற்கு மருந்து அவசியம்; அதுபோல ஆத்மாவுக்கு உபயோகமான காயத்ரியும்

முக்கியமானது. அதை எந்தக் காலத்திலும் விடக்கூடாது. மருந்தை விட அதுதான் முக்கியமானது. ஒரு நாளாவது ஸந்தியாவந்தனத்தை விட்டுவிட்டோமென்று இருக்கக்கூடாது. கண்டபடி அனாசாரம் பண்ணக்கூடாது. இதுவரையில் பண்ணின அனாசாரத்திற்குப் பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ள வேண்டும். காயத்ரீ ஜபம் பண்ணுவது எல்லோராலும் ஆகிற காரியந்தான். ஆயுள் இருக்கும் வரைக்கும் ஸந்தியாவந்தனத்திற்கு லோபம் வராமல் பண்ணவேண்டும். காயத்ரியை மாத்ரு ரூபமாக உபாஸிக்க வேண்டும். பகவான் பலவிதமான ரூபங்களில் வந்து பக்தர்களுக்குக் கிருபை செய்கிறார். நம்மிடம் எல்லோரையும்விட அன்பாக இருப்பது மாதாதான். தாயாரிடம் எதைவேண்டுமானாலும் பயம் இல்லாமல் சொல்லலாம். பகவான் எல்லா ரூபமாக இருந்தாலும், மாதா ரூபமாக வந்தால் நல்லது. காயத்ரியை மாதாவென்று வேதம் சொல்லுகிறது.

புருஷனுக்குத்தான் காயத்ரீ இருக்கிறது. ஸ்திரீக்கு எந்த காயத்ரீ இருக்கிறதென்றால், புருஷன் காயத்ரியை அனுஷ்டித்தால் ஸ்திரீகளுக்கு க்ஷேமம் உண்டாகும். அதனால் மற்ற ஜாதிகளுக்கும், லோகத்திற்கும் க்ஷேமம் உண்டாகும்.

பலவித மந்திரங்கள் இருக்கின்றன. அவைகளை ஜபம் பண்ணுவதற்கு முன்பு இன்ன இன்ன பலனை உத்தேசித்துப் பண்ணுகிறேன் என்று சொல்லுகிறோம். காயத்ரீ மந்திரத்தினுடைய முக்கிய பலன் சித்த சுத்திதான். மற்ற மந்திரங்களால் உண்டாகிற பலன்கள் எல்லாம் கடைசியில் சித்த சுத்தி உண்டாகத்தான் இருக்கின்றன. அதுவே காயத்ரீக்கு நேரான பலன்.

“த்ரய்யா ஏவ தத் வேதஸ்ய ஸாரம் ஸாரோத்தமம் ஸ்ம்ருதம்”

காயத்ரீ மூன்று வேதங்களிலிருந்தும் எடுத்தது. அதனால் மூன்று வேதங்களைச் சேர்ந்தோர்களுக்கும் காயத்ரீ பொதுவானது. அதர்வ வேதத்திற்கு மாத்திரம் வேறு காயத்ரீ உண்டு. அந்த வேதத்தை அத்தியயனம் பண்ணுகிறவர்கள் வேறு உபநயனம் பண்ணிக்கொண்டு, வேறு காயத்ரீ உபதேசம் செய்துகொள்ள வேண்டும். அப்படியே அதர்வ வேதி மற்ற வேதங்களை அத்திய

யனம் பண்ணவேண்டுமென்றாலும் மறுபடியும் உபநயனம் செய்து கொள்ளவேண்டும்.

இந்தக் காலத்தில் காலையிலும் ஸாயங்காலத்திலும் எல்லோரும் காலந் தவறாமல் ஸந்தியாவந்தனம் செய்யலாம். சீக்கிரம் ஆபீசுக்குப் போகவேண்டியவர்கள் கௌண காலத்தில் காலை ஸந்தியாவந்தனம் செய்யவேண்டும். மாத்தியான்ஹிக அர்க்கியத்தை ஸங்கவ காலத்திலாவது கொடுக்கவேண்டும். ஜ்வரம் வந்தால், மற்றவர்களிடம் கஞ்சி கொடு, தீர்த்தம் கொடு என்று சொல்வதைப்போல் எனக்காக ஸந்தியாவந்தனம் பண்ணு என்று சொல்லவேண்டும். ஆகாரத்தில் நியமமாக இருக்க வேண்டும். அசுத்தமான ஆகாரத்தை சாப்பிடக்கூடாது. அசுத்தமானவர்களோடு சாப்பிடக்கூடாது. அவர்களை நாம் தூஷிக்க வேண்டாம், வெறுக்கவும் வேண்டாம். நாமாக நம்மை விலக்கிக்கொள்ள வேண்டும். அவர்கள் இருக்கும் பந்தியில் உட்கார்ந்து சாப்பிடக்கூடாது. இவ்வளவும் நம்முடைய தேஹ பரிசுத்தியை ரக்ஷிப்பதற்காகத்தான் ஏற்பட்டவை தேஹ சுத்தியைக் காப்பாற்றினால்தான் மந்திரசக்தி இருக்கும் அப்பொழுதுதான் நமக்கும் மற்றவர்களுக்கும் க்ஷேமம் உண்டாகும். மந்திர சக்தியானது அணையாமல் விருத்தியாகக் கிருபை செய்யவேண்டுமென்று பகவானை எல்லோரும் பிரார்த்திப்போமாக.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Sarada Press. Kmu. P. I. C. No. TE 21. 26-8-47. Ops 5000.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸம்ஸ்காரங்கள்

ப்ரசுரம் 4

ஆவணி-மீ 13உ, வெள்ளிக்கிழமை
29—8—1947

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,**
( Regd. )
கும்பகோணம்.

( விலை . அணு ஒன்று )

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நமஃ

# ஸம்ஸ்காரங்கள்

——o——

நாம் வஸிக்கும் இந்த லோகத்திற்கு மிச்ரலோகம் என்று பெயர். மிச்ரம் என்றால் கலந்தது என்று அர்த்தம். எவை கலந்தது? ஸுகம், துக்கம் இரண்டும் கலந்தது. ஸுகமே இல்லாமல் துக்கமே இருக்கும் ஒரு லோகம் இருக்கிறது. அதுபோல், துக்கமே இல்லாமல் ஸுகமே இருக்கும் ஒரு லோகமும் இருக்கிறது. இரண்டும் கலந்த லோகம் இது. பிரம்மலோகம், அதாவது ஸத்ய லோகம், வைகுண்டம், கைலாஸம் முதலியவைகள் ஸுகமே இருக்கிற லோகங்கள். துக்கமே இருக்கிற லோகம் நரகம். அதில் அநேக பேதங்கள் உண்டு. ரொம்ப கோரமான நரகம் ரௌரவ நரகம் என்பது. நரகலோகத்தைத் தவிர பாக்கி லோகங்களில் பிதிருக்கள் இருந்தால் அமாவாசை தர்ப்பண பலன் அவர்களுக்குப் போய்ச் சேரும்; நரகலோகத்தில் இருப்பவர்களுக்குச் சேராது. அவர்களுக்கு உபயோகப்படுபவைகளும் இருக்கின்றன. அழுக்கு வேஷ்டியில் உள்ள ஜலம், தலைமயிர் ஜலம், கை அலம்புகிற ஜலம் இவைகளை அவர்களை உத்தேசித்துக் கொடுத்தால் அவர்களுக்குத் திருப்தியுண்டாகும். அதனால்தான் வேஷ்டி பிழிய ஒரு மந்திரம் இருக்கிறது. சிகோதகத்தைப் பிழிய ஒரு மந்திரம் இருக்கிறது. ஆந்திர தேசத்தில் உத்திராபோசனத்திற்குப் பின்பு பாக்கியுள்ள ஜலத்தை எச்சில் இலைக்கு வலது புறத்தில் ஒரு மந்திரம் சொல்லி விட்டுவிடுகிற ஸம்பிரதாயம் இருக்கிறது.

ரௌரவேऽபுண்யநிலயே பத்மார்புதநிவாஸிநாம் ।

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ரௌரவம் ஒரு கடுமையான இடம். பாபத்திற்கு இருப்பிடம். பத்மம் என்பது ஒரு எண்ணிக்கை. அற்புதம் என்பதும் ஒரு எண்ணிக்கை. பலகோடி பத்மம், பல கோடி அற்புதம் எவ்வளவு வருஷங்களோ அவ்வளவு காலம் அந்த ரௌரவத்தில் இருந்து கஷ்டப்படுகிறவர்களும் இருக்கிறார்கள். 'அவர்களுக்கு இந்தத் தீர்த்தம் கொடுக்கிறேன்; அவர்களுக்குள்ள அக்ஷயமான தாகம் தீரட்டும்', என்று அந்தத் தீர்த்தத்தை விட வேண்டும்.

நாம் வைச்வதேவம் பண்ணுகிறோம். அதற்குப் பதிலாக ஆந்திரர்களில் சிலர் போஜன காலத்தில் ஐந்து பலி வைப்பார்கள். அதற்குச் சித்ராதி பலி என்று பெயர். அதாவது அன்னத்தை எடுத்துவைப்பார்கள். ஆபோசனத்திற்கப்புறம் ஒரு மந்திரத்தைச் சொல்லி ஜலத்தை விட்டு உபஸம்ஹாரம் செய்வார்கள்.

இந்த லோகத்தில் ஸந்தோஷம் இருக்கிறது. துக்கமும் இந்த லோகத்தில் இருக்கிறது. நாம் பிரயத்தனம் பண்ணினால் ஸுகம் அதிகமாய் இருக்கிறது. ஸுக துக்கங்கள் ஒவ்வொருவருக்கும் ஏற்றக் குறைவாக இருக்கின்றன. சிலருக்கு ஸுகம் அதிகமாயிருக்கிறது; சிலருக்குக் குறைவாயிருக்கிறது. மனதைக் கட்டுப்படுத்தி துக்கப்படாதவர்களும் இருக்கிறார்கள். எப்பொழுதும் துக்கப்படுகிறவர்களும் இருக்கிறார்கள். மற்றப் பிராணிகளிலும் இப்படி உள்ளவை இருக்கின்றன. ஒவ்வொருவருக்கும் மாத்திரைக் கணக்கில் (degree) வித்யாஸம் இருக்கிறது. ஸுக துக்கங்கள் சீதோஷ்ணத்தைப்போல இருக்கின்றன. லோகங்களெல்லாம் தர்மாமீட்டர் (Thermometer) போல இருக்கின்றன. அந்தத் தர்மாமீட்டரில் கொதிக்கும் இடம் (Boiling point) தான் நரகலோகம். உறையும் இடம் (Freezing point) தான் ஸ்வர்க்கலோகம். இந்த இரண்டையும் மாற்றியும் வைத்துக்கொள்ளலாம். கொதிக்கும் இடத்தில் (Boiling point) குளிர்ச்சி இல்லை. உறையும் இடத்தில் (Freezing point) உஷ்ணமே இல்லை. மொத்தத்தில் மூன்று தினுசுகள் இருக்கின்றன. உறையும் இடம் (Freezing point), கொதிக்கும் இடம் (Boiling point), இந்த இரண்டுக்கும் நடுவில் டிகிரிகள் (Degrees) உள்ள இடம், ஆக மூன்று உள்ளன. இந்த மூன்றையும் மூன்று லோகங்களுக்கு உபமானங்களாகச் சொல்லலாம். மேல் லோகம் ஒரு வகை. அவை ஸத்யலோகம், வைகுண்டம், கைலாஸம் என்பவைகள். உபநிஷத் இவைகளை ஒன்றாகச் சொல்லும். புராணங்கள் பிரித்துச் சொல்லும். கீழே இருப்பது நரகலோகம். மத்தியில் இருப்பது மிச்ரலோகம்.

நம்முடைய சாஸ்திரப்படி மற்ற லோகங்களைவிட இந்த லோகந்தான் உயர்ந்தது. ஏன்? மிச்ரலோகத்திலிருந்து எந்த லோகத்திற்கு வேண்டுமானாலும் போகலாம். மற்ற லோகங்களுக்குப் போனால் இஷ்டப்படி அவ்விடம் விட்டுப் போகமுடியாது. தர்ம

ராஜா இவ்வளவு காலம் இருக்கவேண்டுமென்று எழுதிவைத்திருப்பான். அதுவரையில் இருந்துதான் தீரவேண்டும். நாமாக ஒன்றும் செய்யமுடியாது. இங்கே நமக்கு ஒரு தனி ஸ்வாதந்திரியம் இருக்கிறது. புண்யம் பண்ணலாம். பாபமும் பண்ணலாம். கையினால் பூஜையும் பண்ணலாம், அல்லது அடிக்கலாம். நாக்கினால் நாம பாராயணம் பண்ணலாம், அல்லது யாரையாவது வையலாம். இரண்டுக்கும் நமக்குச் சக்தியிருக்கிறது. இப்படி ஒவ்வொரு இந்திரியத்திற்கும் இரண்டு வித சக்தியைப் பகவான் கொடுத்திருக்கிறார். இந்த ஸ்வாதந்திரியம் மற்ற இடங்களில் இல்லை. அவைகளெல்லாம் போக பூமிகள். மாடாகப் பிறந்தால் புண்யம் பண்ண முடியுமா? தேவர்களும் அந்த மாட்டைப் போன்றவர்கள்தான். மாட்டுக்குப் பாபமும் இல்லை; புண்யமும் இல்லை. இந்த லோகத்தில் கர்மானுஷ்டானம் செய்து நல்ல கதி அடையலாம். தேவலோகத்தில் அது முடியாது. க்ருஷி பண்ணுகிற பூமிஸ்தானம் இது. பாக்கி எல்லாம் வயிற்றுக்குச் சாப்பிடுகிற ஸ்தானம், உற்பத்தி ஸ்தானம் அல்ல. அங்கே பலன்களை அனுபவிக்கலாம். எவ்வளவு புண்ய பாபம் செய்திருக்கிறோமோ அவ்வளவு பலன்களை அனுபவிக்கலாம். அதனால் அவைகளுக்குப் போக பூமி யென்ற பெயர் ஏற்பட்டது. பண்ணுகிற சக்தி இங்கேதான் உண்டு. இங்கு மனுஷ்ய ஜன்மத்திற்குத்தான் உண்டு. இந்த லோகத்தில்தான் உண்டு. மற்றவைகள் எல்லாம் போக பூமிகளே. குணத்தில் நல்லது கெடுதல் இருக்கலாம். கர்மாவைப் பண்ண மற்ற லோகங்களிலிருப்பவர்களுக்கு அதிகாரம் இல்லை. கர்மா ஒன்று, குணம் ஒன்று. ஆக இரண்டும் சேர்ந்து ஜீவனை மற்ற லோகங்களுக்கு அழைத்துக் கொண்டு போகின்றன. வேலை செய்து பரலோகத்திற்குப் போவதற்கு இந்தக் கர்மபூமியைத் தவிர இதர பூமிகளில் ஸாத்தியமில்லை. ஒரு கர்மாவைச் செய்யவேண்டுமென்றால் அதற்குக் கால தேசம் வேண்டும். சிராத்தம் அர்த்தராத்திரியில் பண்ணலாமா? வழக்கம் இல்லை. அதற்கு ஏற்பட்ட காலம் உண்டு. அப்படியே அந்தக் கர்மா உத்தேசிக்கப்பட்ட தேசம் ஒன்று இருக்கிறது. அந்தக் கர்மாவைப் புண்யபூமியில்தான் பண்ணவேண்டும். முக்கியமாகப் பாரதவர்ஷத்தில் வைதிக கர்மாக்கள் பண்ணப்படவேண்டும். மற்றவைகள் எல்லாம் போக பூமிகள். இந்தத் தேசத்திலும் சில காலங்கள் நிஷித்தமானவை. சில கர்மாக்களுக்குச் சில இடங்களும்

நிஷித்தமானவை. பரிசுத்த இடத்தில், பரிசுத்த காலத்தில் கர்மாக்களைப் பண்ணவேண்டும். கர்மா என்றால் என்ன? கர்மா என்பது காரியம். ஒரு வேஷ்டியை உண்டாக்குவதற்கு எவ்வளவு காரியங்கள் செய்யவேண்டியிருக்கின்றன! அதைப்போல அநேக காரியங்கள் பண்ணி ஒருவனை ஆத்மவித்தாக்கவேண்டும். குணத்தினாலும் கர்மாவினாலும் வேலை செய்யவேண்டும். கர்மாவுக்கு ஸம்ஸ்காரங்கள் என்று பெயர். ஒரு பதார்த்தத்திற்கு உள்ள தோஷத்தைப் போக்குவது எதுவோ, குணத்தைப் புகட்டுவது எதுவோ, அதுதான் ஸம்ஸ்காரம். ஜீவாத்மாவுக்குத் தோஷங்கள் இருக்கின்றன. தோஷத்தை நிவர்த்தி பண்ணிக் குணத்தை நிரப்பவேண்டும். வயலில் சில ஸம்ஸ்காரங்கள் செய்யப்படுகின்றன. முதலில் காயப்போடவேண்டும்; பின்பு உழவேண்டும்; ஜலம் விட்டுப் பரம்படிக்கவேண்டும்; பிறகு விதைக்கவேண்டும்; நாற்றுப் பிடுங்கவேண்டும்; நடவேண்டும்; களை பிடுங்கவேண்டும்; ஜலம் பாய்ச்சவேண்டும்; அதிக ஜலம் இருந்தால் வடியவிடவேண்டும்; விளைந்தால் அறுவடை செய்யவேண்டும்; களத்தில் அடிக்கவேண்டும்; பதர் தூற்றவேண்டும்; நெல்லைக் காயப்போட்டுக் கோட்டை கட்டவேண்டும்; பின்பு நெல் புழுகவேண்டும்; அப்புறம் அதை உபயோகிக்கவேண்டும். இவ்வளவு காரியங்கள் இருக்கின்றன. இப்படியே நூலை வேஷ்டியாகச்செய்யவேண்டுமென்றால் பல காரியங்கள் பண்ணவேண்டியிருக்கின்றன. பஞ்சு யந்திரசாலையில் எவ்வளவு காரியங்கள் செய்யப்படுகின்றன? நம்முடைய ஆத்மாவானது சிக்கலாக இருக்கிறது. சிக்கலை எடுத்து எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கச் செய்யவேண்டும். அப்படிச் செய்வதற்குச் சில தடைகள் இருக்கின்றன. சில ஸமயங்களில் ஆனந்தம் உண்டாகிறது. வலி இருந்தும் இவ்வளவையும் மீறிக்கொண்டு கொஞ்சம் ஆனந்தம் உண்டாகிறது. அந்த ஆனந்தம் எப்பொழுதும் இருக்கவேண்டும்.

ஜீவனைப் பிரம்மலோகத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும். ஈச்வர ஸன்னிதியில் சேர்த்துவிட்டால் அப்புறம் துன்பமே இராது. மகாப் பிரளயத்திற்கு அப்புறம் ஐக்கியம் உண்டாகும். அங்கே சேர்க்கத் தயார் பண்ணவேண்டும். அதற்கு 40 ஸம்ஸ்காரங்களும் 8 ஆத்ம குணங்களும் ரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள். பல தர்ம ஸூத்ரங்களை அவர்கள் செய்து ஸம்ஸ்காரங்களைச் செய்யும் முறைகளைச் சொல்லியிருக்கிறார்கள். அவைகள்தாம்

ஸ்ம்ருதிகள். 28 ஸ்ம்ருதிகள் இருக்கின்றன. அவைகளில் 18 ஸ்ம்ருதிகள் பிரதானமானவை. மற்றப் பத்து உப ஸ்ம்ருதிகள். மனு, யாக்ஞவல்கியர், ஹாரீதர், பராசரர் முதலியவர்கள் ஸ்ம்ருதி செய்திருக்கிறார்கள். இந்த ஸ்ம்ருதிகளைத் தவிர தர்ம ஸூத்ரங்கள் பொதுவாகச் சிலர் சொல்லியிருக்கிறார்கள். அவர்களுக்குள் கௌதமர் ஒருவர். விசேஷமாகச் சொல்லப்பட்ட ஒவ்வொரு கல்ப ஸூத்ரத்திலும் ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் ஒன்றுக்கொன்று வித்தியாசமுள்ளனவாக இருக்கும். ஆபஸ்தம்பரும் கௌதமரும் எல்லோருக்கும் பொதுவானவைகளை எழுதியிருக்கிறார்கள். ஆபஸ்தம்பர் தனியாகவும் எழுதியிருக்கிறார். கௌதமர் 40 ஸம்ஸ்காரங்களையும் 8 ஆத்ம குணங்களையும் சொல்லியிருக்கிறார்.

ஜீவன் உடம்பை விட்டுப் பிரிந்தவுடன் நேரே பிரம்மலோகத்திற்குப் போய்ச்சேர இந்த நாற்பத்தெட்டும் காரணங்களாக இருக்கின்றன. இவைகளால் அந்த ஸன்னிதானத்தில் இருக்கலாம். அது பரம ஞானியினுடைய ஸன்னிதானத்திலிருப்பதுபோல் இருக்கும். அசையாமல் ஆனந்தமாக இருக்கலாம். அவன் ஸ்வரூபமாகிற பொழுது நாமும் கலந்துவிடலாம்.

இந்த 40 ஸம்ஸ்காரங்கள் கை கால் முதலியவைகளை ஆட்டிச் செய்யவேண்டும். ஓர் உத்தியோகம் செய்யவேண்டுமென்றால், கையைக் காலை ஆட்டியும், வாயை அசைத்தும் செய்கிறோமல்லவா? நாற்பது கர்மரூப ஸம்ஸ்காரங்களும் எட்டு ஆத்ம குணங்களும்

𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿𑌂𑌶𑌤𑍍 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌾𑌃 𑌅𑌷𑍍𑌟𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾𑌃
𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌂 𑌸𑌲𑍋𑌕𑌤𑌾𑌂 𑌜𑌯𑌤𑌿 ।

யார் இந்த நாற்பத்தெட்டையும் அனுஷ்டிக்கிறானோ அவன் நேராகப் பிரம்மலோகத்திற்குப் போகிறான்; கஷ்டம் ஸுகம் இல்லாத ஊருக்குப் போகிறான். கஷ்டமும் ஸுகமும் எப்பொழுது இல்லாமலிருக்கும்? எல்லாவற்றையும் ஏற்படுத்தினவனிடம் போனால் அப்படி இருக்கலாம்.

நிஷேகாதி ச்மசானாந்தம் 40 ஸம்ஸ்காரங்கள் சொல்லப்படுகின்றன. அதாவது தாயார் வயிற்றில் எந்தத் தினத்தில் தேஹ காரணமான பதார்த்தம் இருக்க ஆரம்பிக்கிறதோ அதுமுதல் தேஹம் அக்னிக்கு ஆஹுதி ஆகிற வரைக்கும் நாற்பது காரியங்கள் செய்ய வேண்டும். எல்லாக் கர்மாவும் அக்னி பூர்வமாகச் செய்யப் படுகிறது. விவாகமும் அக்னிபூர்வமாகச் செய்யப்படுகிறது. அன்று முதல் அக்னியை அணையாமல் காத்துவரவேண்டும். பிரம்மசாரி ஸமிதாதானம் தினந்தோறும் செய்து, அக்னி காரியம் செய்ய வேண்டும். கிருஹஸ்தன் ஔபாஸனம் செய்யவேண்டும். வானப் பிரஸ்தனுக்குக் கக்ஷாக்னி என்று ஓரக்னி சொல்லப்பட்டிருக்கிறது. அது காட்டிற் செய்வது. ஸந்நியாஸாசிரமத்தில் தான் அக்னி இல்லை. ஆனால் அவனிடம் ஞானாக்னி இருக்கிறது. அவனுடைய தேகத்திற்கு அக்னி ஸம்ஸ்காரம் கிடையாது. புதைப்பது மரியாதைக்காகச் செய்வது. அவனுடைய சரீரத்தை நாலாக வெட்டிக் காட்டில் நாலு திக்கில் போடலாம். அது அங்கே உள்ள பிராணிகளுக்கு ஆகாரமாகும். ஜனங்களுக்கு உபத்திரவம் இல்லாமலிருப்பதற்காகக் காட்டில் போடவேண்டுமென்று சொல்லப் பட்டிருக்கிறது. அப்படிச் செய்யாவிட்டால் புதைத்து அதன்மேல் மரம் செடிகளை வைக்க வேண்டும். காட்டில் போட்டால் பிராணிகளுக்கு ஆகாரம் ஆகிறது. இப்படிச் செய்தால் மரங்களுக்கு எருவாக ஆகிறது. பில்வம், அசுவத்தம் முதலிய பெரிய மரங்களை வைக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

விவாஹ காலத்து அக்னியை ஒவ்வொருவரும் அணையாமல் வைத்துக்கொண்டு அந்த அக்னியிலேயே தன் தேஹத்தையும் திரவ்யமாக ஆஹுதி செய்யவேண்டும். எல்லோருக்கும் அக்னி உண்டு. விவாஹ காலத்தில் எல்லா வருணத்தாரும் ஔபாஸனம் பண்ணவேண்டும். எல்லாரும் அந்த அக்னியைக் காப்பாற்றி வர வேண்டும். இப்பொழுது பாரஸீகர்கள் தான் அக்னியைக் காப் பாற்றிவருகிறார்கள். அவர்களுடைய மதம் நம்முடையதிலிருந்து பிரிந்ததுதான். அவர்களுடைய மதக்கிரந்தத்திற்கு 'ஜெண்டவஸ்தா' என்று பெயர்; சந்தோவஸ்தை என்பது அப்படி வந்திருக்கிறது. ஜொராஸ்த்ரர் என்பவர் அவர்களுடைய ஆசார்யர். அப்பெயர் ஸௌராஷ்ட்ரர் என்பதின் சிதைவுதான். இரான் தேசம் அவர்

களுடையது. ஆர்ய தேசம் என்பது அப்படி மாறிவிட்டது. அவர்கள் அக்கினி அணைந்துபோனால் அதிகச் செலவு செய்து பெரிய பிராயச்சித்தம் பண்ணிக்கொள்கிறார்கள். நம்மிடத்தில் அக்னி காரியம் 40 வருஷ காலமாகக் குறைந்துவிட்டது. வாழ்க்கை மாறிவிட்டது. அதிக சிரத்தை இருந்தால் இப்பொழுதும் வைத்துக் கொண்டிருக்கலாம். சிரத்தை இல்லாததற்கு இந்தக் காலப் படிப்பு ஒரு காரணம். காரணம் ஏதாயிருந்தாலும், க்ஷேமம் அடைய வேண்டுமானால் சாஸ்த்ரத்தில் சொல்லிய பிரகாரம் நாம் செய்தே தீரவேண்டும். எல்லாருக்கும் சௌக்கியமாயிருக்கவேண்டுமென்ற எண்ணமிருக்கிறதே தவிர அதை அடையவேண்டிய காரியங்களைச் செய்வதில்லை. மதுரை போகவேண்டியவர்கள் மதராஸ் போகும் ரயிலில் ஏறிக்கொண்டால் எப்படி மதுரை சேர முடியாதோ அப்படியே சாஸ்த்ர நிஷித்த காரியத்தைச் செய்து வந்தால் க்ஷேமத்தை அடைய முடியாது.

ஆகையால் எவ்வளவு சிரமமும் கஷ்டமும் இருந்தாலும் சாஸ்த்ர விருத்தமான காரியத்தை விட்டு, சாஸ்த்ரோக்தமான காரியத்தைச் செய்து, எல்லாரும் க்ஷேமத்தை அடையவேண்டுமென்று பிரார்த்திக்கப்படுகிறது.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

Sri Mahabharatham Press, Kumbakonam, PIC. TE. 4/6-9-47,
C. 5000

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஆரம்ப ஸம்ஸ்காரங்கள்

ப்ரசுரம் 5

ஆவணி-மீ 20உ, வெள்ளிக்கிழமை

5-9-1947

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,**

( Regd. )

கும்பகோணம்.

( விலை அணா ஒன்று )

# ஆரம்ப ஸம்ஸ்காரங்கள்

—o—

ஜீவாத்மாவுக்குப் பரிசுத்தி ஏற்படுவதற்காக 40 ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாதகர்மா, நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம், பிராஜாபத்தியம் முதலிய வேதவிரதம் 4, ஸ்நானம், விவாஹம் அல்லது ஸஹதர்மசாரிணீஸம்பிரயோகம், பஞ்சமகா யக்ஞங்கள் ஆகப் பத்தொன்பதும், பாக யக்ஞங்கள் ஏழு, ஹவிர் யக்ஞங்கள் ஏழு, ஸோம யக்ஞங்கள் ஏழு ஆக இருபத்தொன்றும் மொத்தம் 40 ஆகின்றன. அஷ்டகை, அன்வஷ்டகை, பார்வணம், சிராவணி, ஆக்ரஹாயணி, சைத்ரி, ஆச்வயுஜீ என்ற ஏழும் பாக யக்ஞங்கள். அக்கினியாதானம், அக்கினிஹோத்திரம், தர்சபூர்ண மாஸம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஸௌத்திராமணி என்ற ஏழும் ஹவிர் யக்ஞங்கள். அக்கினிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தோர்யாமம் என்னும் ஏழும் ஸோம யக்ஞங்கள். இவ்வளவும் சேர்ந்து 40 ஸம்ஸ்காரங்கள் ஆகின்றன. இந்த ஸம்ஸ்காரங்களில் தினந்தோறும் பண்ணவேண்டியவை சில இருக்கின்றன. சிலசில காலங்களில் பண்ணவேண்டியவை சில. ஆயுளில் ஒரு தரம் பண்ண வேண்டியவை சில. இவைகளுக்குள் நன்றாகத் தெரிந்துகொண்டு செய்யவேண்டிய முக்யமான ஸம்ஸ்காரங்கள் பஞ்ச மகா யக்ஞங்கள். அவை தினந்தோறும் செய்யவேண்டியவை.

பஞ்ச மகா யக்ஞங்கள்: பிரம்ம யக்ஞம், தேவ யக்ஞம், பித்ரு யக்ஞம், மனுஷ்ய யக்ஞம், பூத யக்ஞம் என்பவை. மற்றவைகளில் அநேகம், ஜன்மத்தில் ஒரு தரம் பண்ணவேண்டியவைகளாக இருக்கும். ஔபாஸனம், அக்னிஹோத்திரம் ஒவ்வொரு நாளும் பண்ண வேண்டும். தர்சபூர்ணமாஸம் பதினைந்து நாளைக்கு ஒருதரம் பண்ண வேண்டும். இவைகளில் ஔபாஸனம் பாக யக்ஞங்களைச் சேர்ந்தது; மற்ற இரண்டும் ஹவிர் யக்ஞங்களைச் சேர்ந்தவை. பாக யக்ஞங்கள் எல்லாம் வருஷத்திற்கு ஒருதரம் செய்யவேண்டும். ஏழு ஸோம யக்ஞங்களும் மற்ற ஸம்ஸ்காரங்களும் ஜன்மத்தில் ஒருதரம் பண்ணி னால் போதும். இவைகளை வேறு விதமாயும் வகுத்துச் சொல்லலாம்.

நித்தியம் செய்யவேண்டியவை ஏழு; அவை பஞ்சமஹாயக்ஞங்கள், அக்கினிஹோத்திரம், ஔபாஸனம் என்பவை. ஒரு போகம் விளையும் நிலங்களில் அறுப்பறுக்கிறது வருஷத்திற்கு ஒரு தரம். ஜலம் தினந்தோறும் பாய்ச்சவேண்டும். இவைகள் எல்லாம் ஸம்ஸ்காரங்கள் ஆனாலும் அவைகளுக்குள் வித்தியாஸம் இருக்கிறது. அவைகளைப் போன்றவைதான் இந்த ஸம்ஸ்காரங்களும்.

கர்ப்பாதானம் முதற்கொண்டு ஸம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. தாயார் வயிற்றில் தேஹம் ஏற்படுகிற க்ஷணம் முதல் ஸம்ஸ்காரங்கள் ஆரம்பமாகின்றன. சரீர பிண்டமானது மந்திரபூர்வமாக உற்பத்தியாகவேண்டும். கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம் என்பவை தாயார் தேஹத்திற்கு ஏற்பட்ட ஸம்ஸ்காரமென்று நினைக்கிறார்கள். அது தவறு. அவை உள்ளே இருக்கும் ஜீவனைக் குறித்தவை. அந்த ஜீவனுடைய பரிசுத்திக்காக ஏற்பட்டவை. கர்ப்பத்திலுள்ள வேறொரு ஜீவனை உத்தேசித்துப் பண்ணப்படுபவைகளாதலினால் அந்த ஸம்ஸ்கார விஷயத்தில் தாயார் முதலியவர்களுக்குப் பொறுப்பு அதிகம். தங்களுக்காக என்றால் வேண்டாமென்று எண்ணலாம். வேறொரு ஜீவனுக்காக இருப்பதால் அனாதரவு பண்ணக்கூடாது.

தேஹம் வெளியில் வருவதற்கு முன்பு பண்ணப்படுபவை கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம் என்ற மூன்று ஸம்ஸ்காரங்கள். பும்ஸவனம் மூன்றாவது மாத கர்ப்பத்தில் செய்யவேண்டும். ஆறு அல்லது எட்டாவது மாதத்தில் ஸீமந்தம் பண்ணவேண்டும். இவ்வளவு ஸம்ஸ்காரங்களையும் பரமேசுவரப் பிரீதிக்காகப் பண்ணுகிறேன் என்று ஸங்கல்பம் செய்துகொண்டு பண்ணவேண்டும். இவ்வளவும் அவருடைய கிருபையைப் பெறுவதற்காகத்தான் பண்ணுவது.

நம்முடைய ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் கைலாஸத்திற்குப் போகும் பொழுது சிஷ்யர்கள் எல்லாம் பரமேசுவரனுடைய கிருபையைப் பெற ஸுலபமான வழி ஒன்று சொல்லவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். இதுவரையிலும் சொன்ன வேதாந்த விஷயங்களில் ஒன்றும் புரியவில்லை. ஸுலபமாக ஒன்று சொல்லவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள். அப்பொழுது ஸ்ரீ ஆசார்யாள் ஐந்து சுலோகங்களைச் சொன்னார்கள்.

𑌵𑍇𑌦𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌧𑍀𑌯𑌤𑌾𑌂 𑌤𑌦𑍁𑌦𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌤𑌾𑌂
𑌤𑍇𑌨𑍇𑌶𑌸𑍍𑌯 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑌾𑌮𑌪𑌚𑌿𑌤𑌿𑌃 𑌕𑌾𑌮𑍍𑌯𑍇 𑌮𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌯𑌜𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 ।
𑌪𑌾𑌪𑍌𑌘𑌃 𑌪𑌰𑌿𑌧𑍂𑌯𑌤𑌾𑌂 𑌭𑌵𑌸𑍁𑌖𑍇 𑌦𑍋𑌷𑍋𑌽𑌨𑍁 [𑌸𑌨𑍍𑌧𑍀𑌯𑌤𑌾𑌂
𑌆𑌤𑍍𑌮𑍇𑌚𑍍𑌛𑌾 𑌵𑍍𑌯𑌵𑌸𑍀𑌯𑌤𑌾𑌂 𑌨𑌿𑌜𑌗𑍃𑌹𑌾𑌤𑍍𑌤𑍂𑌰𑍍𑌣𑌂 𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌗𑌮𑍍𑌯𑌤𑌾𑌮𑍍

என்பது அவைகளில் ஒன்று. 'நித்தியம் வேதாத்தியயனம் செய்ய வேண்டும். கர்மாவைத் தவறாமல் அனுஷ்டானம் பண்ணு அந்தக் கர்மாதான் ஈச்வர பூஜை. அவர் எந்தெந்தக் காரியத்தை, எப்பொழுது பண்ணச் சொல்லியிருக்கிறாரோ அப்படிச் செய்துவருவது தான் பூஜை' என்ற கருத்து இதில் இருக்கிறது. சில பேர் உத்ஸவம், பூஜை, பஜனம் முதலியவை பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். வேறு சில பேர் ஔபாஸனம், அக்கினிஹோத்திரம் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களைப் பார்த்துப் பூஜை பண்ணிக்கொண்டிருப்பவர்கள், "இவர்கள் என்ன பண்ணி என்ன பிரயோஜனம்? கொஞ்சங்கூடப் பக்தி கிடையாது" என்று தூஷிக்கிறார்கள். அவர்கள் இவர்களைப் பார்த்து, "கொஞ்சங்கூட ஆசார அனுஷ்டானங்கள் இல்லை. தாளம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள், அஹங்காரந்தான் இருக்கிறது" என்று சொல்லுகிறார்கள். நியாயமாகவும் மத்யஸ்தமாகவும் பார்த்தால் கர்மானுஷ்டானம் பண்ணுவதுதான் பெரிய பக்தி என்று தெரியவரும். அதுதான் பஜனை.

ஒரு பிரபுவிடம் இரண்டு வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஒருவன் எப்பொழுதும் எதிரில் நின்றுகொண்டு பிரபுவை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டே இருக்கிறான். மற்றொருவன் பேசவே மாட்டான்; எதிரில் வரமாட்டான். பிரபு எந்தக் காரியத்தைச் செய்யவேண்டுமென்று மனதில் நினைக்கிறாரோ அந்தக் காரியத்தைச் செய்வான். பொது ஜனங்கள் ஸமீபத்தில் இருக்கிறவனிடத்தில் தான் பிரபுவுக்குப் பிரியம் என்று நினைத்துக்கொண்டிருப்பார்கள். ஆனால் வேலை செய்கிறவனிடம்தான் பிரியம் இருக்கும். அசடாக இருந்தால்தான் ஸ்தோத்திரம் செய்கிறவனிடத்தில் அதிகப் பிரியமாயிருப்பார். அவனைப்போல் ஈச்வரன் அசட்டுப்பிரபுவாக இருந்தால் வெறும் ஸ்தோத்திரம் செய்பவனிடத்தில் அதிகப் பிரியமாய் இருப்பான். அவன் விதித்த கர்மானுஷ்டானங்களைச் செய்வதுதான் பூஜை. அதனால்தான் 'ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம்' என்று

ஸங்கல்பம் செய்துகொண்டு கர்மாக்களைச் செய்யவேண்டும். வாஸ்தவமான கர்மாநுஷ்டானம், பக்தியும் கர்மாவும் கலந்தது தான். அதனால்தான் நம்முடைய ஸ்ரீ ஆசார்யாள் கர்மாநுஷ்டானம் செய்வதுதான் பரமேச்வர பூஜை என்று சொல்லியிருக்கிறார்.

இவ்வளவுக்கும் அஸ்திவாரம் பரமேச்வரனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டுவது. கடைசியில் ஸ்ரீ க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம் என்று சொல்லுகிறோம். எல்லா ஸம்ஸ்காரத்திற்கும் தனித்தனி யாக மந்திரங்களையும் அர்த்தத்தையும் சொல்லுவது என்பது முடியாத காரியம். எல்லாவற்றிற்கும் முதலில் ஸங்கல்பமும் கடைசியில் அர்ப்பணமும் செய்கிறோம். இந்த இரண்டும் இன்னவை, இன்ன அர்த்தம் உடையவை என்று தெரிந்தால் நல்லது.

லௌகிகர்களுக்கு ஸங்கல்பம் முதலியவைகளில் நிரம்ப அசிரத்தை இருக்கிறது. ஏதோ உபாத்தியாயர் சொன்னாரென்று நினைக்கிறார்கள்; அசட்டை செய்கிறார்கள். அவற்றின் அர்த்தம் தெரிந்துகொள்வது கஷ்டமான காரியம் அல்ல. சிரத்தையிருந்தால் தெரிந்துகொள்ளலாம். அமெரிக்காவில் நடக்கிற பரீக்ஷைக்கு என்ன பாடம் (Syllabus) என்பதைத் தெரிந்துகொள்ளுகிறார்கள். எதையும் சிரத்தை இருந்தால் தெரிந்துகொள்ளலாம்.

யதேவ வித்யயா கரோதி ச்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம் பவதி ।

(சாந்தோக்யோபநிஷத்)

யதேவ வித்யயேதி ஹி ।

(ப்ரும்மஸூத்ரம்)

ஒரு கர்மாவை அர்த்தம் அறிந்துகொண்டு பண்ணினால் அது வீர்யவத்தரம் ஆகிறது. தரம் என்பதனால் அறிவில்லாமல் பண்ணினால் வீர்யவத் ஆகிறதென்று தெரிகிறது என்று ஸ்ரீ ஆசாரியர்கள் சொல்லியிருக்கிறார்கள். தெரிந்துகொள்ளாமல் பண்ணினால் அதிகப் பிரயோஜனம் உண்டு; தெரிந்தால் அவ்வளவு இல்லை என்று தோன்றுகிறது. அது எப்படி?

ஒரு கலெக்டர் இருக்கிறார். அவருக்கு ஒருவர் வக் கைவத்து, மனு எழுதுகிறார். ஒரு குடியானவன் யாராவது ஒருவ

ரிடம் எழுதி, கலெக்டரிடம் நேரில் கொடுக்கிறான். அவனுக்கு ஓரெழுத்துக்கூடத் தெரியாது. 'எப்படியாவது நல்லது பண்ண வேண்டும்' என்று மனுவைக் கொடுக்கிறான். கலெக்டர் பார்த்தால் 'பாவம்! ஒன்றும் தெரியாது! நம்பிக்கை மாத்திரம் இருக்கிறது' என்று எண்ணி நல்லது பண்ணுவார்.

அதைப் போன்றதுதான் மந்த்ரமும். மந்த்ரத்துக்கு அர்த்தம் ஈச்வரனுக்குத்தான் தெரியும். நாம் போக்கிரித்தனமாக இருக்கக்கூடாது. வக்கீல் வைத்துத் தவறுதலாய்ப் பேசினால் கலெக்டர் கோபித்துக்கொள்வார். தெரிந்து தப்பாகப் பண்ணினால் அதிகக் கோபம் உண்டாகும். தெரியாமல் தப்பாக இருந்தால் தெரியாமல் பண்ணுகிறான் என்று மன்னிப்பு ஏற்படும். 'ஏன் ஸார்! அர்த்தம் தெரியவில்லை. அதைப்பண்ணி என்ன பிரயோஜனம்?' என்று சொல்வது தப்பு. அர்த்தம் தெரியாமல் பண்ணுவதுதான் வீர்யவத்தரமாகத் தோன்றுகிறது.

எல்லா ஸம்ஸ்காரங்களுக்கும் ஆரம்பத்தில் பரமேச்வரப் பிரீதிக்காக என்ற ஸங்கல்பமும், கடைசியில் 'ஜனார்த்தனப் பிரீயதாம்' என்பதும் சொல்லவேண்டும். அந்த இரண்டினுடைய அர்த்தங்களையும் தெரிந்துகொள்ளலாம். ஸங்கல்பத்தில் முதலில் தேச காலக் கணக்குச் சொல்லப்படும்.

மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா பரமேச்வரப்ரீத்யர்த்தம் என்று முன்பு சொல்லுகிறோம்.

'என்னால் ஸம்பாதிக்கப்பட்ட எல்லா பாபங்களையும் போக்கிப் பரமேச்வரனுடைய பிரீதி உண்டாகும்பொருட்டு' என்பது இதன் அர்த்தம். இன்று வரையில் நாம் நிறைய பாபத்தை ஸம்பாதித்திருக்கிறோம். அந்த ஸாமான் கஷ்டமானது. அதைப் போக்க வேண்டும்; அலம்பவேண்டும். அதனால் என்ன பிரயோஜனம்? நம்முடைய ஹ்ருதயம் பரமேச்வரனுடைய ஸ்தானம். அதில் குப்பை நிறைய இருக்கிறது. நாம் இங்கே பூஜை செய்கிறோம். அப்பொழுது அங்கே குப்பை நிறம்ப இருந்தால் மிகவும் வருத்தமாக இருக்கும். குப்பையை எடுத்துவிடவேண்டும். நம்முடைய ஹ்ருதயத்திலுள்ள குப்பையைப் போக்கவேண்டும். அப்பொழுது தான் ஸ்வரூபம் தெரியும். இப்பொழுது பிரகாசம் தெரியாமல்

ஆபாஸமாய் இருக்கிறது. வந்து உட்காரவேண்டுமானாலும் குப்பை யைப் போக்கவேண்டும். எந்த விதத்திலும் குப்பைகள் போக வேண்டும். நமக்கோ குப்பையைச் சேர்க்கிறதே தொழிலாக இருக் கிறது. துரித க்ஷயத்வாரா, அதாவது பாபம் போன வழியாகப் பரமேச்வரனுடைய பிரீதி உண்டாகும். எல்லாவிதக் கர்மாக்களும் அதற்காகத்தான் ஏற்படுகின்றன. மற்ற மந்த்ரங்களுக்கு எவ்வளவு அர்த்தம் இருந்தாலும் இந்த மந்த்ர அர்த்தம் தெரிந்து பரமேச் வரப் பிரீதியை உத்தேசித்துச் சொன்னால்தான் பிரயோஜனப்படும்.

ஒரு காரியத்தில் தவறிப்போனால் பிராயச்சித்தம் பண்ணு கிறோம். அகால ஸந்தியாவந்தனத்திற்காகப் பிராயச்சித்த அர்க் கியம் ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பிராயச்சித்தத்திலும் தப்பு வந்தால் என்ன செய்கிறது? அதற்காக எல்லாவற்றிற்கும் சேர்த்து ஒரு பிராயச்சித்தம் இருக்கிறது. ஹேமாத்ரி என்று ஒரு புஸ்தகம் இருக்கிறது. அது பிராயச்சித்தங்களைப்பற்றிச் சொல்லுகிறது.

எல்லாப் பிராயச்சித்தங்களிலும் மேலான பிராயச்சித்தம் ஸ்ரீ கிருஷ்ண ஸ்மரணம். முதலில் பரமேச்வர ஸ்மரணம்; கடைசி யில் கிருஷ்ண ஸ்மரணம் செய்யவேண்டும். இவை சிவ விஷ்ணு அபேதத்தையும் காட்டுகின்றன. இப்படி நினைத்து உற்பத்தி முதல் அவஸான காலம் வரையில் பரமேச்வரனுடைய ஞாபகத்தோடு கர்மாக்களைச் செய்யவேண்டும்.

ஒவ்வொரு மந்த்ரமும் ஒவ்வொரு தேவதையின் த்வாரா அர்ப் பணம் பண்ணப்படுகிறது. நாம் வரி செலுத்துகிறோம். அவைகள் எல்லாம் ஒரே ராஜாங்கத்திற்குப் போகின்றன. தொழில் வரி, மோட்டார் வரி, நிலவரி முதலிய பல வரிகள் இருக்கின்றன. ஒவ் வொன்றுக்கும் ஒவ்வோரிடம் உண்டு. ஒவ்வொரு முத்திரைக் கடு தாசு உண்டு. அதுபோல் ஒவ்வொரு கர்மாவுக்கும் காலம், மந்த்ரம், தேவதை, திரவியம் என்று தனித்தனியே பிரிவுண்டு. ஒவ்வொன் றுக்கும் கிரமம் வேறாக இருந்தாலும் எல்லாவற்றிற்கும் பரம தாத் பர்யம் பரமேச்வரனுக்கு அர்ப்பணம் பண்ணுவதுதான். நாம் செலுத்துகிற வரிகளைப்பற்றியும், வரி செலுத்துகிற நம்மைப்பற்றி யும் நம்மைப்பற்றிய அரசனுக்கு நன்றாய்த் தெரியாது. ஆனால் பரமேச்வரனாகிய அரசனுக்கு ஒவ்வொருவருடைய விஷயமும் நன் றாகத் தெரியும்.

ஒவ்வொரு கர்மாவுக்கும் மந்த்ரம், திரவியம், தேவதை என்று மூன்று கிரமங்கள் உண்டு. பிறப்பதற்கு முன்பு செய்யவேண்டிய மூன்று கர்மாக்களை முன் சொல்லப்பட்டது. பிறந்தவுடன் ஜாத கர்மா செய்யவேண்டும். அப்புறம் பதினோறாவது நாள் நாமகரணம் செய்யவேண்டும். ஆறாவது மாஸம் அன்னப்பிராசனம் செய்ய வேண்டும். முதலில் அன்னத்தை ஊட்டுகிற கர்மா அது. அதுவும் பரமேச்வரப் ப்ரீதியாகச் செய்யவேண்டும்.

கர்ப்பாதானம் முதல் நாமகரணம் பரியந்தம் உள்ளவை குழந்தைக்காகப் பெற்றோர்கள் பண்ணுபவை. தாயார் மருந்து சாப்பிட்டால் குழந்தைக்குத் தேஹ பரிசுத்தி ஏற்படுகிறது. அதைப் போலவே தாயார் தகப்பனார் சித்தசுத்தி எப்படி இருக்கிறதோ, அப்படியே உள்ளே இருக்கும் ஜீவனுக்கும் ஸாத்வீக ஸ்வபாவமோ, பாப அபிவிருத்தியோ உண்டாகும். மனது சாந்தமாக இருந்து ஒரு ஸமாசாரம் எழுதி அதைப் படித்துப் பார்த்தால் நன்றாயிருக்கும். கோபமாக இருக்கும்பொழுது எழுதி அப்புறம் பார்த்தால் நன்றாக இருப்பதில்லை. சரீரத்திலும் அப்படியே குணதோஷங்கள் ஏற்படுகின்றன. அவயவ ஸந்நிவேசம் உண்டாகும்பொழுது தாய் தகப்பனுக்கு எந்தக் குணம் ஏற்படுகிறதோ அது உள்ளே இருக்கும் ஜீவனுக்கும் உண்டாகும். மனோபாவனையை அநுஸரித்துக் குணங்கள் ஏற்படுகின்றன.

இத்தகைய கர்மாக்களைப் பணக்காரர்கள் உரிய காலத்தில் பண்ணாமல் சேர்த்துப் பண்ணிவிடுகிறார்கள். வைதிகர்கள் கிரமமாகப் பண்ணுகிறார்கள்; ஆனால் அவர்கள் அதையே ஜீவனமாக வைத்துக்கொள்கிறார்கள். மற்றவர்கள் எதையும் கவனிப்பதில்லை. அந்தந்தக் காலத்தில், அந்தந்த மந்த்ரத்தைச் சொல்லி, அந்தந்த திரவியங்களைக்கொண்டு, அந்தந்த ஸம்ஸ்காரங்களைச் செய்யவேண்டும். எல்லாவற்றிற்கும் பெரிய காரியம் பரமேச்வரார்ப்பணம் பண்ணிச் செய்வது.

அன்னப்பிராசனத்திற்கப்புறம் சௌளம் செய்யவேண்டும். அது சிகை வைக்கிறது. அந்தக் கர்மாவும் பகவானுக்கு அர்ப்பணம் பண்ணப்படவேண்டும். ஸத்கர்மாவுக்கு உபயோகமாக இருக்க அது பண்ணவேண்டும். சிகை எடுப்பது மந்த்ரபூர்வமாக எடுக்க வேண்டும். ஸந்யாஸிகள் மந்த்ரபூர்வமாகத்தான் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

மந்திர பூர்வமாக வைத்துக்கொண்ட சிகையைப் பரமேசுவர னுக்கு முன்பு பண்ணின பிரதிக்ஞைக்கு விரோதமாக இஷ்டப்படி எடுத்துவிடுவது தப்பு. சிகையை எடுப்பது ஒரு பெரிதா என்று கேட்கலாம். பொய் சொல்லுகிறது தப்பு அல்லவா? அது எவ்வளவு தப்போ அவ்வளவு தப்பு இதுவும். பரமேச்வரப் பிரீதியாக ஸங்கல்பம் பண்ணிக்கொண்டு ஸம்ஸ்காரம் பண்ணி வைத்துக் கொண்டதைக் கிள்ளுக்கீரையாக எண்ணி மனம் போனபடி எடுக்கக் கூடாது. சிவலிங்கப் பிரதிஷ்டை செய்கிறார்கள். வேல், ஸாளக்கிராமம் வைத்துப் பூஜை செய்கிறார்கள். பிறகு கோபித்துக் கொண்டு எடுத்து எறிந்துவிடலாமா? அகஸ்மாத்தாகப் போனால்— திருடன் கொண்டுபோனால் பாதகம் இல்லை. நாமாக வைத்ததை, நாமாக வேண்டுமென்று மாற்றுவது பெரிய தப்பு. சௌளத்தை மட்டும் ஸங்கல்பத்தோடு பண்ணிக்கொண்டு அப்புறம் இஷ்டப்படி பண்ணுவது தப்பு. இப்படிப் பண்ணுகிறவர்கள் முதலில் அதைப் பண்ணாமல் இருக்கவேண்டும். மந்திரபூர்வமாக வைத்த சிகையை இஷ்டப்படி எடுப்பது தப்புத்தான். அதற்காகத்தான் ஸன்னியாஸாசிரமத்தில் அதை எடுக்கும்பொழுது மந்திர பூர்வமாக எடுக்கிறார்கள்.

ஜாதகர்மா முதலியவற்றை இனிமேல் பண்ண முடியாது. புனர் உபநயனம் பண்ணலாம். அதற்குக் கீழே இருப்பவற்றைச் செய்ய முடியாது. உபநயனம் அறிவு வந்தபோது செய்வது. 'பிக்ஷாசர்யம் சர'—அதாவது 'பிக்ஷை எடு' என்று ஆசாரியன் சொன்னால் 'பாடம்' என்று அவன் பதில் சொல்லுகிறான். உபநயன காலத்திற்கு முன்பே ஸம்ஸ்கிருத ஞானம் இருக்கவேண்டும். அப்பொழுது உபநயன மந்திரம் சொன்னால் அர்த்தம் தெரியும். குழந்தைக்குத் தெரிந்தால் நிரம்ப பக்தி உண்டாகும். குழந்தைப் பருவத்திலேயே நமது மனதில் நாஸ்திக்யம் வந்துவிட்டது. அதனால் அது பலமாக இருக்கிறது. ஆஸ்திகத்தை அப்படியே போதித்தால் அதுவும் பலமாக நிற்கும்.

உபநயனம் முதல் பண்ணப்படும் ஸம்ஸ்காரங்கள் அறிவு வந்த பிறகு ஏற்படுபவை. எந்த ஸம்ஸ்காரத்தையும் உரிய காலத்தில் பண்ணவேண்டும். அதனால் பாப பரிஹாரம் ஏற்படுகிறது. வேறொரு காரியம் பண்ணிப் பாபம் சம்பாதிக்கிறோம். அதை நீக்க மனோ வாக்காயங்களால் ஸம்ஸ்காரம் பண்ணவேண்டும். நாம் பாபம் அந்த

மூன்றினாலேயும் பண்ணியிருக்கிறோம். மனதால் கெட்ட எண்ணம் நினைத்திருக்கிறோம். வாக்கால் பொய் பேசியிருக்கிறோம். தேகத்தால் பொய் பண்ணியிருக்கிறோம். பொய் பண்ணுவது என்ன? பாசாங்கு பண்ணுவதுதான் பொய் பண்ணுவது. மனோவாக்காயங்களால் பண்ணிய பாபங்களை அவைகளாலே காரியங்களைப் பண்ணிப் போக்கிக்கொள்ளவேண்டும்.

மனதினால் பரமேசுவரத் தியானம்பண்ணி அர்ப்பணம் பண்ணவேண்டும். வாக்கினால் மந்திரம் சொல்லவேண்டும். காயத்தால் காரியம் பண்ணவேண்டும். இந்த மூன்றினாலும் ஸம்ஸ்காரம் பண்ணி, மூன்றினாலும் பண்ணின பாபத்தைத் தீர்த்துக்கொள்ள வேண்டும். எல்லாம் பரமேசுவரப் பிரீதிக்காக என்று எண்ணிச் செய்யவேண்டும். எல்லாவற்றையும் பரமேசுவரார்ப்பணம் பண்ண வேண்டும். எதையும் காலத்தில் பண்ணவேண்டும்.

ஸம்ஸ்காரங்களைச் செய்து வந்தால் நல்ல சந்ததி உண்டாகும். வைதிக சந்ததியார் சிஷ்டர்களாய் அநேகர் இருக்கிறார்கள். புத்தி அவர்களுக்கு அதிகமாயிருக்கிறது. அது ஸம்ஸ்காரப் பிரயோஜனந்தான். முன்பு இருந்தவர்கள் செய்தது இரண்டு அல்லது மூன்று தலைமுறைக்கு அஸ்திவாரமாயிருக்கிறது. அந்த எல்லைத் தாண்டிப் போனால் அப்புறம் கஷ்டந்தான். வைதிக சந்ததியிற் பிறந்த குழந்தைகள் லௌகிகத்தில் பிரவேசித்தால் அதிகமாகக் கீழே போகிறார்கள். மடை அடைத்துவைத்ததைத் திறந்துவிட்டால் வெகு வேகமாக ஜலம் போகிறமாதிரி அவர்கள்தாம் லௌகிகத்தில் இறங்கிவிடுகிறார்கள். நம்முடைய முன்னோர்கள் ஸம்ஸ்காரங்கள் பண்ணவில்லை. அதனால் நமக்கு நன்மை உண்டாகவில்லை என்ற குறை இருக்கலாம். அதைப்போல் நம்முடைய குழந்தைகள் குறை கூறாமல் நாம் நல்ல ஸம்ஸ்காரங்களைப் பண்ணிவைக்க வேண்டும்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Sri Mahabharatham Press, Kumbakonam, PIC. TE. 4/12-9-47, C. 5000

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேற்றுமையில் ஒற்றுமை

ப்ரசுரம் 6

ஆவணி-ஸ்ரீ 27உ, வெள்ளிக்கிழமை

12—9—1947

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

( Regd. )

கும்பகோணம்.

( விலை அணா ஒன்று )

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீசுவராய நம:

# வேற்றுமையில் ஒற்றுமை.

நமது மதம் விசித்திரமானது. மற்றைய மதங்களில் யாவர்க்கும் ஒரே விதமான விதி விலக்குகள் இருக்கின்றன. நமக்குள்ளோ ஒரே மதமாக இருந்தாலும் விதிகளும், நிஷேதங்களும் பலவகைகளாக இருக்கின்றன. ஒரு காரியத்தை ஒருவன் செய்தால் தர்மமாகிறது; அதையே வேறொருவன் செய்தால் அதர்மம் என்கிறோம். வேதத்தை விட்டால் சிலருக்குப் பாபம்; வேதம் சொன்னால் சிலருக்குப் பாபம்.

நாம் எல்லாரும் மரணம் அடைவது ஆச்சர்யமன்று; இந்த உடம்பில் இருக்கிற ஒன்பது ஓட்டைகளுக்குள்ளே உயிரானது போகாமலிருக்கிறதே அதுதான் பெரிய ஆச்சர்யம், என்று ஒருவர் சொல்லியிருக்கிறார். அதைப்போலவே, பலவிதமான ஸந்தேகங்களுக்கும், வித்யாஸங்களுக்கும் இடமான இந்த மதமானது எவ்வளவோ வருஷங்களாயிருக்கிறதே என்பதை நினைத்து ஆச்சர்யப்படவேண்டியிருக்கிறது. பல நல்ல அம்சங்களையுடைய நமது மதத்திற்கு, அநேக வித்தியாஸங்களிருப்பது களங்கமாக இருக்கிறதென்றும், நல்ல அம்சம் ஒன்றுகூட இல்லையென்றும், சிலருக்கு இந்த மனஸ் உறுத்திக்கொண்டேயிருக்கிறது. தெரிந்து சில பேர் ஏதாவது ஸமாதானம் செய்துகொள்ளுகிறார்கள். அடிக்கடி இந்த மாதிரி வித்யாஸங்களை எடுத்துக்காட்டி உறுத்தி உறுத்திச் சொல்லுகிறபோது நம்முடைய மனஸ் மிகவும் கஷ்டப்படுகிறது. சில பேர் அவர்களோடு சேர்ந்தேவிடுகிறார்கள்.

மதமென்றால் என்ன? ஆத்மா கடைத்தேறுவதற்கு என்ன வழியோ அதுதான் தர்மம்; அதுதான் மதம் எனப்படுகிறது. உடம்பின் வியாதிக்குத் தகுந்த மருந்து இன்னதென்று வைத்தியனுக்குத்தான் தெரியும். நமக்கு உடம்பே வராமல் இருந்திருந்தால் வியாதியே வந்திருக்காது. வியாதிக்குக் காரணமும் இடமுமாகிய உடம்பே வராமல் இருக்க ஒரு வழி இருக்கிறது. அந்த வழியைச்

சொல்லும் ஒரு வைத்தியர், தான் சொல்வதை நம்பு, என்று சொல்லுகிறார். அவர்தாம் தர்மசாஸ்த்ரக்காரர்.

மற்ற மதங்களிலுள்ள விதி விலக்குகள் பொதுவானவை என்று சொன்னோம். நமக்குள்ளும் அப்படிப் பொதுவான விதிவிலக்குகளிருக்கின்றன. அவைகளுக்குப் பொது தர்மம் அல்லது ஸாமாந்ய தர்மம் என்று சொல்லப்படுகிறது. அஹிம்சை, ஸத்யம், திருடாமை, சௌசம், இந்திரியநிக்ரஹம் முதலியவை பொதுவாக யாவர்க்கும் ஜாதி, வர்ணாச்ரம வித்யாசமின்றி சொல்லப்பட்ட தர்மங்கள். இவைகளைத்தவிர விசேஷ தர்மங்கள் என்று சில உண்டு. ஈச்வரன் நம்மை எந்த ஜாதியில், எந்தக் குடும்பத்தில், எந்த இடத்தில், எந்த நிலைமையில் பிறப்பித்திருக்கின்றாரோ, அதற்காகச் சில தர்மங்கள் உண்டு. ஒவ்வொருவருக்கும் தனிப்பட்டு அதிகப்படியான சில ஸௌகர்யங்களும் அதற்கனுகுணமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. டிக்கெட்டு கொடுக்கும் இடத்தில் எல்லோரும் புகுந்துவிட்டால் டிக்கெட்டு கொடுப்பவன் என்ன செய்வான்? ஒவ்வொருவருக்கும் தங்கள் தங்கள் கடமைகளைச் செய்யச் சில ஸௌகரியங்கள் இருக்கவேண்டும். மற்றவர்களுக்கும் அப்படி வேண்டுமென்பது நியாயமா? வாஸ்தவத்தில் ஸௌகர்யங்களல்ல. அவர்களுக்குள்ள அந்த விசேஷ தர்மத்தையும், அதற்கு வேண்டிய சில ஸ்வதந்த்ரங்களையும் எல்லோரும் அங்கீகாரம் செய்யவேண்டும். ஏன்? அவர்கள் செய்வது தங்களுக்காக மட்டுமல்ல. எல்லோருக்கும் சௌக்கியம் உண்டாவதற்காகவே அவரவர் தம் தம் விசேஷ தர்மங்களை அநுஷ்டிக்கவேண்டும். ஒரு வீட்டில் நான்கு ஸகோதரர்கள் இருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். மூத்தவன் வீட்டிலிருந்துகொண்டு பூஜை செய்கிறான். அடுத்தவன் பண வரவு செலவுகளைக் கவனித்துக்கொண்டுவருகிறான். மற்றொருவன் வீட்டிற்கு வேண்டிய ஸாமான்களை வாங்கிப்போடுகிறான். கடைசி ஸகோதரன் வயலுக்குப் போய் விவஸாயத்தைக் கவனித்துவருகிறான். இப்படி வீட்டுக் காரியங்களைப் பிரித்து நடத்துதல் எல்லாருடைய க்ஷேமத்திற்காகவே. அத்துடன் வீட்டுக் காரியங்களும் ஸுலபமாகவும் ஸரியாகவும் நடக்கின்றன. இப்படியில்லாமல் எல்லாரும் எல்லாக் காரியத்தையும் செய்ய ஆரம்பித்தால் என்ன பிரயோஜனம்? வீணாகக் கஷ்டந்தான். குடும்பமே நடக்காது. வர்ண தர்மமும்

அதைத்தான் அடிப்படையாகக் கொண்டது. ஆகவே, தர்மங்களில் வேற்றுமையும் வேண்டும்; ஒற்றுமையும் வேண்டும். சிலர் ஒரே யடியாகப் பிரிக்கப் பார்க்கிறார்கள். சிலர் ஒரேயடியாகச் சேர்க்கப் பார்க்கிறார்கள். இரண்டும் வேண்டாம் என்று தர்மசாஸ்த்ரம் சொல்லுகிறது.

உண்மையில் எவ்வளவு வேற்றுமை இருந்தாலும் அன்பு இருந்தால் சாந்தம் இருக்கும். எவ்வளவு கூடியிருந்தாலும் அன்பு இல்லாவிட்டால் கலகந்தான். எல்லா ஜாதியிடத்திலும் ஒரேவிதமான அன்பு இருக்கவேண்டும். அந்த அன்பும் தர்ம மார்க்கத்திற்கு விரோதமில்லாமல் இருக்கவேண்டும். இன்றைக்குத் தனக்குத் தோன்றியதென்று ஒன்று சொல்லுகிறவர்களே, மறுபடி வேறு காலத்தில் மாறி வேறு சொல்லுவார்கள். கலப்புச் சாப்பாடு, கலப்பு மணம், தீண்டாமை ஒழித்தல் முதலியவைகளை ஒப்புக்கொண்டவரே இவைகள் அனாவசியம் என்று சொல்லுங் காலம் வந்தாலும் வரும். ஒன்றாகச் சாப்பிட்டுக்கொண்டும், ஒன்றாகக் கல்யாணம் பண்ணிக்கொண்டும், ஒன்றாகத் தொட்டுக் கட்டிப் புரண்டுகொண்டுமிருக்கும் மேல் நாட்டு ஜாதிகளில் எவ்வளவு அநீதியான போட்டிகளும் சண்டை சச்சரவுகளும் காணப்படுகின்றன என்பதைக் கவனிக்கவும். ஆகையால் அவரவர் தர்மங்களைச் சாந்தமாகவும் உறுதியாகவும் காப்பாற்ற வேண்டும். ஈசன் அருள்புரிவாராக!

இப்பொழுது தேசத்தில் ஜாதி வித்யாசமோ ஏற்றத் தாழ்வோ கூடாது என்றும், மனித ச்ருஷ்டியில் எல்லோரும் ஸமம் என்றும் சொல்லிவருகிறார்கள். ஆனால், ஆழ்ந்து யோஜித்துப் பார்ப்போமானால், நாம் எவ்வளவு முயற்சி செய்தாலும் அது ஸாத்தியமில்லை என்றும், கடவுள் எண்ணமும் அப்படி இல்லை என்றும் தோன்றுகிறது. . லா காலேஜை எடுத்துக்கொள்வோம். ஒரே பள்ளிக்கூடத்தில், ஒரே வாத்தியாரைக்கொண்டு, ஒரே புஸ்தகத்தை அநேகர் படித்துவருகிறார்கள். ஆனாலும், எல்லோரும் பரீட்சையில் தேறுவதில்லை. தேர்ந்தாலும் அவர்களுடைய சக்தியும், புத்தியும் ஒரேமாதிரி இருக்கிறதில்லை. ஒரு குடும்பத்தை எடுத்துக்கொள்வோம். அந்தக் குடும்பத்தில் நான்கு சகோதரர்கள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவர்கள் தகப்பனார் தமது சொத்தை எல்லோருக்கும் ஸமமாகவேதான் பிரித்துக்கொடுக்கிறார். ஆனால்,

அதை ஒருவன் விருத்திசெய்கிறான்; மற்றொருவன் அழித்துவிடு கிறான்; மற்றொருவன் ஏற்றத்தாழ்வு இல்லாமல் அதே ஸ்திதியில் வைத்துக்கொண்டிருக்கிறான். இதையெல்லாம் பார்க்கும்பொழுது, மனிதப்பிரயத்தினத்தினால் சமப்படுத்தமுடியாது, என்று தோன்று கிறது. ஒரே பசுமாடு ஒரு வீட்டில் நிறையப் பால் கறக்கிறது; மற்றொரு வீட்டிற்கு வந்தவுடன் கறப்பதில்லை. அப்பொழுது நமக்குப் பால் ராசி இல்லையென்று நினைக்கிறோம். இப்படியே அநேக திருஷ்டாந்தங்கள் சொல்லலாம். கடைசியாக இதற்கெல்லாம் காரணம் ஒன்று இருக்கவேண்டும். அந்தக் காரணத்தை நாம் சௌக்கியமாயிருப்பவரைப் பார்த்து அதிர்ஷ்டசாலி என்றும், கஷ்டப்படுபவனைப் பார்த்துத் துரதிருஷ்டசாலி என்றும் சொல்லு கிறோம். அதிர்ஷ்டமும் துரதிர்ஷ்டமும் எப்படி உண்டாகிறதென்று யோஜித்தால், அதற்கு ஏதாவது ஒரு காரணம் இருந்தே தீரவேண் டும். அந்தக் காரணத்தைத்தான் நமது வேதங்கள், சாஸ்த்ரங்கள் கர்மாநுஸாரம் என்று சொல்லுகின்றன. அந்தக் கர்மாவென்பது பலவிதம். அதில் ஒவ்வொருவரும் அவசியம் செய்யவேண்டியவை சில. நமக்கு வேண்டிய பலனை உத்தேசித்துச் செய்யவேண்டியவை சில ஸந்த்யாவந்தனம், ச்ராத்தம், அதிதிஸத்காரம் முதலியவை அவசியம் செய்யவேண்டிய காரியங்கள். ஸ்வாமி தர்சனம், தீர்த்தா டனம், தானம் செய்வது முதலியவை பலனை உத்தேசித்துச் செய்ய வேண்டியகாரியங்கள். கிருஷிகள் செய்வதில் எவ்வளவுக்கெவ்வளவு சிரத்தையாகச் செய்வதற்குத் தகுந்தபடி பலனைக் கொடுக்கிறதோ அதுபோல், நாம் கர்மாக்களை சிரத்தையாயும், விதிப்படி ஸரியாகவும் செய்தால் கோரிய பலனும் நிச்சயமாய்க் கிடைக்கும். சாதாரண மாக சொத்து சுதந்திரத்துடன் பெண்சாதி, புத்திரன் முதலிய வர்கள் அந்நியோன்யமாய் இருந்தால் அவர்களைப் பார்த்துப் பூர்வ ஜன்மத்தில் புண்யம் செய்திருக்கிறார்கள், ஆகையால் ஸௌக்கியமாய் இருக்கிறார்கள் என்று சொல்லுகிறோம். மேலே கண்ட திருஷ்டாந் தத்தைக் கொண்டும், அநுபவத்தைக்கொண்டும் யோசித்துப் பார்ப் போமானால் பூர்வஜன்மம் ஒன்று உண்டென்றும், இப்பொழுது இந்த ஜன்மத்தில் செய்யும் (கர்மாக்கள்) காரியங்களுக்குத் தகுந்தபடி மறு ஜன்மம் எடுத்து அனுபவிக்கவேண்டுமென்பதும் நிதர்சனமாகத் தெரிகிறது, நம்மெல்லோருக்கும் எண்ணம் ஒன்றாகவேதானிருக்

கிறது. அதாவது ஸௌக்கியமாயும் கஷ்டமில்லாமலும் இருக்க வேண்டுமென்ற எண்ணமேதான் இருக்கிறது. ஆனால் அப்படி ஸௌக்கியமாயிருப்பதற்கு என்ன செய்யவேண்டும், எப்படி நடக்க வேண்டும், என்று ஆலோசிப்பதில்லை. எந்த விஷயமும் காரண மில்லாமல் காரியம் உண்டாவதில்லை. எல்லாம் ஸமமென்று நினைப் பது ஸரியாயிருந்தால் ஒருவன் கஷ்டப்படுவானேன், மற்றவன் சுகப் படுவானேன் ? இருவருக்கு ஜுரம் அடிக்கிறது. அந்த இருவருக் கும் ஒரே டாக்டர் ஒரே மருந்துதான் கொடுக்கிறான். ஆனால் அதில் ஒருவன் பிழைத்துக்கொள்கிறான், மற்றவன் இறந்துவிடுகிறான். இதிலிருந்து ஏற்படுவதென்ன ? அவனவன் கர்மாக்களுக்குத் தகுந்தபடி நடந்தே தீரும், என்பது ஏற்படுகிறது. ஆகையால் நாம் ஸௌக்கியமாக இருக்கவேண்டுமானால், அதற்கு வேண்டிய காரியம் செய்து ஆகவேண்டு மல்லவா ? நன்றாக விளையவேண்டுமென்று நினைத்தால் விளைந்துவிடுமா ? நாம் ஸௌக்கியமாய் இருக்கவேண்டு மென்று நினைத்தால் மாத்திரம் போதுமா ? நன்றாக விளையவேண்டு மானால், வயலை நன்றாக உழுது, எருப் போட்டு, நீர் பாய்ச்சி, நல்ல விதையாக விட்டு, நட்டு, ஜலம் பாய்ச்சி, களை பிடுங்கி, விளையும்வரை கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வந்தால் மாத்திரம் நன்றாக விளையுமே தவிர, ஏதோ வயலில் விதைத்து, நட்டு, ஜலம் பாய்ச்சி விட்டால் மாத்திரம் எப்படி நன்றாக விளையாதோ, அதேமாதிரி நாம் சௌக்கியமாய் இருக்கவேண்டுமானால், சாஸ்த்ரங்களில் சொல் லிய விதிப்படி ஒவ்வொரு காரியத்தையும் செய்துவந்தால் நிச்சய மாய் சௌக்கியத்தை அடையமுடியும். ஆனால், ஒரு காமனை உத் தேசித்து ஒரு கர்மாவைச் செய்துவிட்டு, உடனே பலனை எதிர் பார்த்து, அது கிடைக்கவில்லையே என்று ஆதங்கப்படுவதில் பிர யோஜனமில்லை. சித்திரை மாதத்தில் ஆற்றில் ஜலம் வருவதாக வைத்துக்கொள்வோம். அந்த ஜலத்தை வயலில் பாய்ச்சி, விதை விட்டு, நடவு நட்டுவிட்டால் எப்படி ஸரியாக விளையாதோ, அது போல் கால தேச வர்த்தமானத்தை அறிந்து, நம்மை முதலில் பரி சுத்தி செய்துகொண்டு, பக்தியாயும், சிரத்தையாயும் ஒரு கர்மா வைச் செய்தால் பலன் இல்லாமல் போகாது. சிலர் விஷ திருஷ்டங் களுக்கு மந்திரித்துக் குணப்படுத்திவருவதைப் பிரத்யக்ஷமாய்ப் பார்த்துவருகிறோம். அதே மனிதர் தனது மந்த்ர சக்தியைச் சரிவரக் காப்பாற்றிவராவிட்டால் பிறகு பலிப்பதில்லை. நமது

முன்னோர்கள் சாஸ்த்ர விதி தவறாமல் ஒவ்வொரு காரியத்தையும் செய்துவந்தார்கள். ஆகையால் அவர்கள் நோய் நொடி இல்லாமலும், திடகாத்திரர்களாயும் வெகு காலம் ஜீவித்துவந்தார்கள். ஆனால் நாம் செய்யக்கூடாத காரியங்களைச் செய்துகொண்டும், சாப்பிடக் கூடாத பதார்த்தங்களைச் சாப்பிட்டுக்கொண்டும் இருந்துவருகிற நிலைமையில் உடனே பலனை எப்படி எதிர்பார்க்க முடியும்? வெகு காலமாய்த் தரிசாய்க் கிடந்த நிலத்தில் சாகுபடி செய்தால் முதல் வருஷமே எப்படிப் பூரா நல்ல பலனையுமடையமுடியாதோ, அதுபோல் நாம் வெகு காலமாய் ஸம்ஸ்காரங்களை விட்டு, தரிசு நிலம் போல் இருந்துவருகிறோம். சாஸ்த்ர விதிப்படி ஸம்ஸ்காரங்களைச் செய்து, நமது சரீரத்தைப் பரிசுத்தி செய்துவந்தால் நிச்சயமாய் நாளடைவில் நல்ல பலன் இல்லாமல் போகாது. "அவசரக்காரனுக்கு புத்தி மட்டு" என்ற பழமொழிபோல், நமக்கு ஏற்பட்டிருக்கிற பல விதக் கஷ்டங்களுக்கு மூலகாரணத்தை ஆழ்ந்து யோசித்துக் கண்டு பிடிக்காமல், சொத்துக்களை எல்லோருக்கும் ஸமமாய் நிரவியும், ஜாதி வித்தியாசத்தை ஒழித்துவிட்டால் சகல ஸௌக்கியமும் உடனே வந்துவிடுமென்று சிலர் நினைக்கிறார்கள். இப்போதைவிட 40, 50 வருஷங்களுக்கு முன், வர்ணாச்ரம தர்மங்களை அனுஷ்டித்துவந்த காலத்தில், இவ்வளவு சண்டை சச்சரவுகளும், ஜாதிப் பூசல்களும் இல்லை என்பது இப்பொழுதும் வயதுசென்ற அநேகருக்கு நன்றாகத் தெரியும். அவர்கள் நினைக்கிறபடி வர்ணாச்ரம தர்மங்களை ஒழித்து, சொத்து சுதந்திரத்தையும் ஸமனாக்கிவிட்டால் சண்டை சச்சரவு ஒழிந்து, தேசமக்கள் சௌக்கியமடைந்துவிடுவார்கள் என்பது என்ன நிச்சயம்? ஒரே தொழிலைச்செய்கிற தொழிலாளியை எடுத்துக் கொள்வோம் ஒரு தச்சன் மற்றொரு தச்சனைக்கண்டு அசூயைப்படு கிறான். ஒரு கொல்லன், ஒரு கொத்தன், ஒரு பாடகன் இப்படியே ஒருவன் மற்றொருவனைப் பார்த்து அசூயை, சண்டை சச்சரவு செய் கிறான். ஒரு கிராமத்தில் அக்ரஹாரத்தில் ஒரே ஜாதிப் பிராம்மணர் கள் வசிப்பதாக வைத்துக்கொள்வோம். அவர்களுக்குள்ளாவது ஒற்றுமை, அன்பு, மரியாதை, விசுவாசம் ஏதாவதிருக்கிறதா? ஒரு குடும்பத்தையாவது எடுத்துக் கொள்வோம். அங்கேயாவது அண் ணன் தம்பிக்குள்ளாவது, அக்கா தங்கைக்குள்ளாவது, அந்யோன்ய மாவது, அன்பாவது இருக்கிறதா? இதையெல்லாம் பார்க்கும் பொழுது வர்ணாச்ரமம் ஒழிந்தால் மாத்திரம் அந்யோன்யமும்

அன்பும் ஏற்பட்டுவிடாது என்று நிச்சயமாகத் தெரிகிறது. அப்படி இருந்தபோதிலும், நம்மில் அநேகர் வர்ணாச்ரமம் ஒழிந்துவிட்டால் எல்லாம் சரியாய்விடும் என்று நினைக்கிறார்கள். அந்தந்த ஜாதி ஆசாரங்களை அவரவர்கள் அனுஷ்டிப்பதில் ஒருவரையொருவர் அடக்கி ஆள்வது எங்கிருக்கிறது? உலகமே ஒன்றையொன்று ஆதாரமாகத் தொக்கி நிற்கிறது. உலகத்திலுள்ள எந்தப் பிராணியையும் அவசியமில்லாமல் ஈச்வரன் சிருஷ்டிக்கவில்லை. நமக்கு அதனுடைய தத்துவங்களை அறியச் சக்தியில்லாவிட்டால், அது தவறுதல் என்று தீர்மானித்துவிடக்கூடாது. ஒவ்வொரு பிராணியையும் பரஸ்பர ஸகாயத்திற்காகவேதான் ஈச்வரன் சிருஷ்டித்திருக்கிறார், என்கிற தத்துவத்தை உணர்ந்துவிட்டால் சண்டை சச்சரவுக்கும் இடமில்லை; ஏற்றத் தாழ்வுக்கும் இடமில்லை. ஆகையால்,

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுணஃ பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத்।
ஸ்வதர்மே நிதநம் ச்ரேயஃ பரதர்மோ பயாவஹஃ॥

[கீதை, அத்தியாயம் 3-35]

என்றபடி அவனவன் தன்தன் தர்மத்தை அனுஷ்டித்து வந்தால் எல்லோரும் க்ஷேமத்தை அடையலாம் என்பது நிச்சயம். ஈசன் அருள்புரிவாராக!

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Sri Mahabharatham Press, Kumbakonam, PIC. TE 4/19-9-47,
C. 5000

உ
ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை (Regd.)

## கும்பகோணம்.

---

ப்ரசுரம்—7

# ஸைகிள் பெடல்

ஒருவன் ஸைகிள் விட்டுக்கொண்டு போகிறான். பெடலைச் சுற்றுகிறான். ஸைகிள் ஓடுகிறது. நன்றாகப் பழக்கப்பட்டவன் பெடலை வெகு தீவிரமாகக் காலால் சுற்றுகிறான். பின்பு கொஞ்சநேரம் பெடலைச் சுற்றாமலே சும்மா இருந்துவிடுகிறான். கைகளால் மாத்திரம் ஸைகிளின் பிடியைப் பிடித்துக்கொண்டிருக்கிறான். கால் சும்மாகவே இருக்கிறது. ஸைகிள் இப்போது பெடல் செய்யப்படாமல் இருந்தாலும், முன்பு தீவிரமாகச் சுற்றிய வேகத்தால் வெகு சுகமாகப் போய்கொண்டிருக்கிறது.



அரசாங்கத்தில் அனேக பரீக்ஷைகள் வைத்திருக்கிறார்கள். அந்தப் பரீக்ஷைகளில் ப்ராம்ஹணர்கள் அநேகமாக முதன்மையாகத் தேறுகிறார்கள். யோக்யதையை [Merit] அனுஸரித்துச் சிலரைக் கலாசாலைகளில் சேர்த்துக்கொள்வோமென்று அரசாங்கத்தில் சில காலம் அங்கீகரித்திருந்தபொழுதும், அந்த யோக்யதாம்சத்தில் ப்ராம்ஹணச் சிறுவர்களே அனேகமாக முன்வந்தனர்.

யோக்யதாம்சத்திற்கு எவ்வளவு மார்க்குகள் வேண்டுமோ அதைவிடப் பன்மடங்கு அதிகமாக மார்க்குகளையும் வாங்கி, யோக்யதாம்சத்தில் எவ்வளவு பேரை எடுக்கிறார்

களோ அவ்வெண்ணிக்கையைவிட எவ்வளவோ நூறு மடங்கு அதிகமாக முன்வந்து நிற்கிறார்கள்.

இதற்கெல்லாம் காரணம் ஒன்றிருக்கவேண்டும். இப்பொழுது அந்தக் காரணம் ஒன்றும் தெரியவில்லை. ஆசார அனுஷ்டான விஷயத்தில் ப்ராம்ஹண மாணவர்களுக்கும் மற்றைய மாணவர்களுக்கும் ஒரு வித்தியாஸமும் காணப்படவில்லை. சில விஷயங்களில் இவர்களைவிட மற்றவர்களை மேலாகவுங்கூடச் சொல்லலாம். அப்படியிருக்க, இவர்கள் விசேஷமாக 'பாஸ்' செய்யும் யோக்யதைக்கு மூலகாரணம் என்ன? அதையும் கண்டுபிடிக்கவேண்டும்.

பகவான் பக்ஷபாதம் செய்யமாட்டார். இன்று அந்தணரும், மற்றவரும் அனுஷ்டானத்தில் ஒரே விதமாய் இருந்தும், மற்றவரை விட சில விஷயங்களில் அனேகமாக அந்தணர் இன்னும் மோசமாக இருந்தும், அந்தணருக்கு மாத்திரம் இவ்விதம் அதிக மேதையை பகவான் அருளியிருப்பது ஏன்?

## முன்னோர்களின் பெடல்

இன்றைக்கு மூன்று தலைமுறைகளுக்கு முன்னிருந்த அந்தணப் பெரியோர்கள் தாங்கள் க்ருதார்த்தர்களாக வேண்டியதற்கு எவ்வளவு ப்ராம்ஹதேஜஸ் வேண்டுமோ அதைவிட அதிகமாகவே தம் புனித வாழ்க்கை என்னும் "ஸைகிளை" தீவிரமாகப் "பெடல்" செய்துவிட்டார்கள்.

இன்று நாம் ஒரு அனுஷ்டானமும் செய்யாமல், அவர்கள் பெயரென்னும் கைப்பிடியை மாத்திரம் பிடித்துக் கொண்டிருப்பதால் "பாஸ்" செய்கிறோம்.

அவர்கள் நான்கு மணிக்கு ப்ராம்ஹ முஹூர்த்தத்தில் எழுந்தார்கள்; நாம் அநேகமாக ஸூர்யன் எழுந்த பின்னரே எழுந்திருக்கிறோம்.

அவர்கள் காலத்தில், ஸந்த்யாவந்தனம் செய்யாதவனைத் தேடிக்கண்டுபிடிக்கவேண்டும்; நம் காலத்தில் செய்பவனைத் தேடிக் கண்டுபிடிக்கவேண்டும்.

அவர்கள் காலத்தில், காலையிலும் மாலையிலும் ஸந்த்யா வந்தன படித்துறைகளில் கூட்டம் சேரும்; நம் காலத்தில் காலை வேளைகளில் ஒருவிதமான "க்ளப்பி" லும், மாலை வேளைகளில் வேறு விதமான "க்ளப்பு" களிலும் கூட்டம் கூடுகின்றோம்.

ஆத்மாவுக்கு உணவு ஊட்டவேண்டிய ஸமயத்தில் அநாத்மாவுக்கு உணவு ஊட்டுகிறோம். ஆத்மாவைக் குற்றுயிராக்குகிறோம். ஆத்ம சக்தியை இழக்கிறோம்.

நம் நாட்டிலுள்ள இதர மதஸ்தர்கள் ஏதோ ஒரு முறைப்படியாவது மாலை நேரத்திலும், இதர சில குறிப்பிட்ட ஸமயங்களிலும் ஈசனை நினைக்கும் பலத்தினால், உலக ந்யாயம் ஒன்றும் ஸம்பந்தமில்லாமல், ஒரு ராஜ்யத்தையே பிடுங்கிக்கொண்டு போய்விட்டார்கள்.

புக்கராயனின் குருவான வித்யாரண்ய ஸ்வாமிகளும் சிவாஜியின் குருவான ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகளும் ஆசார சீலர்கள்; அநுஷ்டான தத்பரர்கள்; அநுபூதி நிஷ்டர்கள்; நம் தர்மத்தைப் பாழ் செய்த பிற நாட்டவரின் பேயாட்டத்தை ஒழித்து, தர்ம ஸாம்ராஜ்ய ஸ்தாபனம் செய்தவர்கள்.

## நாகரீகமா, ம்ருகத்தனமா ?

மூன்று தலைமுறைகளுக்கு முன்னிருந்த பெரியோர்களில் சரீரத்திலேற்படும் ஜல மல சுத்தி செய்யாதவர்கள் கிடையாது. மண்ணும் ஜல பாத்திரமும் அவர்களுடன் எப்பொழுதும் ஸித்தமாக இருக்கும். நாம் நாகரீகம்

அடைந்துவிட்டோம், ஜல மல சுத்தியைக்கூட விட்டுவிட்டோம். இதுவே நம் நாகரீகம்.

சௌசம் என்னும் முதல் ஆசாரத்தை விட்டவன் செய்யும் எந்தக் கர்மானுஷ்டானமும் வெறும் சாம்பலில் செய்யும் ஹோமமே.

மூன்று தலைமுறைகளுக்கு முன்பு இருந்தவர்கள் செய்த "பெடல்" இன்னும் எத்தனை நாளைக்கு ஓடும்? பெடல் செய்யப்படாத ஸைகிள் எவ்வளவு தூரம் ஓடும்? இப்பொழுதே மங்கிவிட்டது.

நமது பால்யத்தில் ப்ராம்ஹணச் சிறுவர்களின் முகத்தில் பார்த்த ப்ரம்ஹ தேஜஸ்கூட இத்தலைமுறைகளிலுள்ள குழந்தைகளின் முகத்தில் காணோம். படிப்புத் திறமையும் அப்படியேதான்.

ஆதலால், இனி நம் பின் தலைமுறைகள் ஈச்வர அனுக்ரஹத்திலும், ப்ரம்ஹ தேஜஸ்ஸிலும் உத்தமமேதையிலும் குறையாமலிருக்கவேண்டுமானால், இனி நம் வாழ்வில் வர வர இவ்விஷயங்களில் க்ஷீணமடையாமல் இருக்கவேண்டுமானால், **நாமும் தர்மசாஸ்த்ரம் என்னும் "ஸைகிளின்" கர்மானுஷ்டானம் என்னும் சக்ரத்தை ஆசரணத்தால் "பெடல்" செய்யவேண்டும்.**

தர்மசாஸ்த்ரரதாரூடா: வேதகட்கதரா த்விஜா: ।
க்ரீடார்தமபி யம் ப்ரூயு: ஸ தர்ம: பரம: ஸ்ம்ருத: ॥

இப்படிக்கு

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

---

Printed at Sarada Vilasa Press, Kumbakonam.
Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam. Copies, 2,000, 26—8—1952.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# I-அன்னிய அரசாட்சியின் முடிவு—

# நம் முடியை நாம் ஏற்பதே.

# II-நமது மதத்தில் அதிக நியமங்கள் ஏதனுல்?

ப்ரசுரம் 8

புரட்டாசிமீ 10௳, வெள்ளிக்கிழமை
26—9—1947


வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,
( Regd. )
கும்பகோணம்.


( விலை அணு ஒன்று )

# I-அன்னிய அரசாட்சியின் முடிவு—நம் முடியை நாம் ஏற்பதே.

அன்னிய அரசாங்கம் தலை மறைந்து கொண்டிருக்கிறது. அன்னிய அரசாங்கப் பட்டங்களை நம்மவர்கள் துறந்துகொண்டிருக்கிறார்கள். அன்னிய பாஷையின் மதிப்பையும் இறக்கிக்கொண்டிருக்கிறார்கள். அன்னிய ஆட்சிகாலத்தில், அன்னிய மோகத்தால், நம்மைப்பிடித்த பேய்கள் எல்லாவற்றிலும் தலையை மிதித்துக்கொண்டிருக்கும் மிகவும் முரடான பேய், அன்னிய அனுஷ்டானப் பேயே. பட்டங்களும் பாஷையும் போனதால் மாத்திரம் உண்மையில் அன்னியப்பேய் அகன்றுவிடவில்லை. அன்னிய மோகத்தை நாம் பாராட்டிக்கொண்டிருப்பது அன்னிய அனுஷ்டானங்களாலேயே. அவைகளில் ஒன்றை இங்கு ஆலோசிப்போம்.

நிஜாம் ராஜ்யத்தில் முகம்மதியர் ஆக்ஷியில் அகப்பட்டுக்கொண்ட நம்மவர்கள் நம் நாட்டுத்தலையணியைவிட்டு, குஞ்சம்கட்டிய துருக்கித் தொப்பியை அணிந்து, அவன் நாகரிகத்தை வேஷம் கட்டி ஆடுகிறார்கள். நிஜாம் ஹிந்து ப்ரஜை அன்னிய நாகரிகத்தின் தொப்பிபோட்டு திருப்தி செய்துவைப்பதோடு நிற்கிறான். வெள்ளையர் ப்ரஜைகளாயிருந்த நாமோ தொப்பிக்குக்கீழ் உள்ள நம் தேகத்தில் உள்ள ஒரு அம்சத்தையே அன்னிய நாகரிகத்திற்குப் பலி கொடுத்துவிட்டோம். அன்னிய நாகரிகத்தை தலையார வாழ்த்துகிறோம்.

சிகையைப் பலிகொடுத்துவிட்டோம். அன்னிய நாகரிகப்பேய் நம் தேகத்திலேயே ஒரு பாகமாய்விட்டது. இந்தப்பேயை விரட்டினாலொழிய அன்னிய ஆக்ஷியின் அடிமைத்தனம் உண்மையாய்ப் போனதாகஆகாது. இன்னமுமா 'கிராப்' என்று தீரமாக ஆலோசியுங்கள். நீங்களே ஒருமுடிவுக்கு வாருங்கள். பாரதமாதா உண்மை ஸ்வதந்திரத்தை அடையட்டும். அவள் உங்கள் மனதில் புகுந்து ஸ்வதர்மம் என்னும் உண்மை ஸ்வதந்திரத்தைப் புகட்டி கடைசிப்பேய் விரட்டப்படட்டும்.

இனி எந்த ஹிந்து மகஸ்தனும் தன்மதிப்பையும் தன்தர்மத்தையும் விட்டு பிறரைப்பார்த்து காபி அடிக்கும் வீண் துர்பாக்கியத்தை அடையவேண்டாம்.

ஜெய் ஹிந்து.

### சிகையை ஏன் எடுக்கக்கூடாது?

1. முடிந்த சிகையுடன் செய்யவேண்டிய சுபகர்மானுஷ்டானங் களும், அவிழ்ந்த சிகையுடன் செய்யவேண்டிய அசுபகர்மானுஷ்டா னங்களும் வீணுகாமலிருப்பதற்காக.

2. இறந்த உறவினர்களுடைய சாவு தீட்டுகளையெல்லாம் ஒருங்கே சேமித்து வைத்துக்கொள்ளாமல் இருப்பதற்காக விதி முறைப்படி க்ஷவரமும் தர்ப்பணமும் செய்தாலொழிய தீட்டு அகலாது.

3. வேதமந்த்ர பூர்வம் தெய்வ ஸாக்ஷியாகச் சௌளகர்மாவில் வைக்கப்பட்ட சிகையைத் திரும்பவும் வேத மந்த்ரபூர்வமாக ஸன் யாஸ ஸமயத்திலேயே எடுக்கவேண்டியிருக்க, இடையே இஷ்டப்படி எடுத்துவிடுவதால் வேத துரோகமும், தெய்வ துரோகமும் ஏற் படாமலிருக்க.

4. ஒரு மனிதன் ஸ்னானம் செய்தவுடன் அவன் மேல்வஸ் திரத்தைப் பிழிந்த ஜலமும், சிகையின் நுனியின் மூலமாய் கீழே விட்ட ஜலமுமே அவனுடைய வம்சத்தில் பிறந்த முன்னோர்களில் யாரேனும் அதிக பாதகங்கள் செய்து நரகத்தில் இருந்தால் அவர் களைப்போய்ச்சேரும் தர்ப்பணஜலமாகிறது. ஆகலால் அவர்களுக்குக் கொஞ்சமேனும் ஏற்படும் ஆறுதலையும் கெடுக்காமலிருப்பதற்காக.

5. கடைசியாக மேனாட்டு நாகரீகத்தைத் தலையார வாழ்த்தாம லிருப்பதற்காக.

## II- நமது மதத்தில் அதிக நியமங்கள் ஏதனால் ?

வினா:— ஈசனுடைய அரசாங்கத்தில் அதிகாரிகள் யார் ?

விடை:— முப்பத்து முக்கோடி தேவர்களும் பித்ருக்களும்.

வினா:— அவர்கள் இருப்பிடம் யாது ?

விடை:— முறையே வடக்கில் உள்ள தேவலோகமும், தெற்கு திக்கில் உள்ள பித்ருலோகமும், என்று மறைகள் கூறுகின்றன.

வினா:— இவ்வீசனது அரசாங்கத்திற்கு நாம் செலுத்தும் வரி யாது?

விடை:— தேவர் கடனும், பித்ருகடனும்.

வினா:— நம்மையெல்லாம் காப்பதற்காக அவ்வதிகாரிகளுக்கு ஈசன் எதை ஜீவனமாக ஏற்படுத்தி யிருக்கிறார்?

விடை:— தேவ யக்ஞங்களும், பித்ரு யக்ஞங்களுமே. திருவள்ளுவ நாயனாரும் திருக்குறளில்

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
ஐம்புலத்தா றோம்ப றலை"

என்று கிருஹஸ்தாச்ரமத்தைக் கூறுமிடத்துச் சொல்லியிருக்கிறார்.

வினா:— தென்புலத்தார் என்றால் யார்?

விடை:— தெற்கு திக்கில் உள்ள லோகத்தில் இருக்கும் பித்ருக்கள். ஆதலால்தான் வைதியர்கள் பித்ரு சடங்குகளைச் செய்யும் பொழுது தென்தோளான வலது தோளில் பூணூலைப் போட்டுக் கொள்வதையும், ஸந்த்யாவந்தனம், யாகம் முதலிய தெய்வச் சடங்குகளைச் செய்யும் பொழுது அதனை வடதோளாகிய இடது தோளில் போட்டுக்கொள்வதையும் பார்க்கிறோம்.

வினா:— லோக பொது க்ஷேமத்தின் பொருட்டு ஒவ்வொரு குலத்தோரும் செய்யவேண்டிய கடமைகளில் வைதியர்கள் செய்ய வேண்டிய கடமை எது?

விடை:— வேதமோதி, வெகு நியமத்துடன் மந்த்ர சக்தியை ரக்ஷித்து, உலகத்தில் உள்ள எல்லா ப்ராணிகளுக்கும் ப்ரதிநிதியாக ஈச்வரனால் அதிகாரம் கொடுக்கப்பட்ட இந்திரன், வருணன், வாயு, அக்னி முதலிய தேவர்களுக்குச் செலுத்தவேண்டிய கடமைகளைச் செலுத்தி, உலகத்திற்கு ஈசனது அருளைப் பெறுவிப்பதே. வருணங்களிலும் மற்ற அநுலோம, ப்ரதிலோம குலங்களில் பிறந்த மக்களுக்குக் கைத்தொழில்கள், வியாபாரம், விவசாயம், அரசு, முதலிய உலக வியல்பான காரியங்களில் விசேஷமாக ஈடுபட்டுச் செய்யுமாறு அறநூல் குறிப்பிடுவது போல், மந்த்ர சக்தியை முக்கிய காரியமாகக் கொண்டு, ஈசனது அரசாங்கத்திற்கு வரிக்கொப்பான தெய்வ கர்மங்கள், பித்ரு கர்மங்கள் என்ற கடமைகளைச் செலுத்தி, பிரபஞ்ச முழுவதிற்கும் தொண்டு புரிவதையே வைதியர்களின் விசேஷமான கடமையாக அறநூல் குறிப்பிடுகிறது.

வினா:— இக்கடமைகள் உலகினில் சரிவர நடை பெறாவிடில் என்ன ஏற்படும்?

விடை:— அரசாங்கத்திற்கு வரி கொடாப் பிரஜைகளின் கதியே உலகத்திற்கு ஏற்படும். ஆகையால் தான் இக்காலத்தில் அக்ரம யுத்தங்களும், வியாதிகளும், நாசங்களும், பஞ்சங்களும் இன்னும் மனித சக்திக்கு அடங்காத அநேக விதமான கஷ்ட நஷ்டங்களும் மலிகின்றன.

வினா:— வேதியர்கள் செய்யவேண்டிய தெய்வச் சடங்குகள் யாருடைய க்ஷேமத்திற்காக?

விடை:— உலகத்திலுள்ள ஈ, எறும்பு, எல்லாச் சமயங்களையும் சேர்ந்த மாந்தர்கள் உள்பட எல்லாப் பிராணிகளுடைய க்ஷேமத்திற்காகத்தான்.

வினா:—திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகத்திலிருந்து கூறப்பட்ட பரித காக்கையர், பாயுடுக்கையர் என்னும் பாசுரத்தில் உள்ள மறை வழக்கம் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

விடை:— வேதத்தின் கர்ம காண்டத்தில் ஆசாரம், அநுஷ்டானம் என்ற இரு வகைப்பட்ட தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஆசாரமாவது தனது உடலுக்கும் மனதுக்கும் தெய்வீகமான சுத்தியைத் தரும் நடத்தை. அநுஷ்டானமாவது வேத விதிப்படி தேவர்கள், பித்ருக்கள், மாதா, பிதா, ஆசார்யன், பெரியோர், அதிதிகள் இவர்களுக்கு நடத்தப்படவேண்டிய சடங்குகள். தமிழ் அற நூல்கள் ஆசாரத்தை ஒழுக்கம் என்றும், அநுஷ்டானத்தை வழக்கம் என்றும் சொல்லும். ஆதலால் மறை வழக்கம் என்பதே வைதீக அநுஷ்டானம் என்று பொருள்படும்.

வினா:— ஒருவன் வேதத்தின் ஆணையான தெய்வ பித்ரு கர்மங்களைச் செய்யாது, வேண்டுமென்றே மீறி, ஈசனிடத்தில் மாத்திரம் பக்தி செய்கிறேன், என்று சொன்னால் அவன் கதியாது?

விடை:— தன் கட்டளையைச் செய்யாது மீறி நடந்து தன்னை மாத்திரம் ஸ்துதி செய்யும் தன் வேலைக்காரனை ஓர் அரசன் எப்படி நடத்துவானோ அதே கதிதான் இவனுக்கும்.

வினா:— வேதத்தால் விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்யாது, ஈசனிடம் ஞானம், பக்திகளை மாத்திரம் யாராவது செய்யலாமா?

விடை:— செய்யலாம்.

வினா:— எவன் செய்யலாம்.

விடை:—துறவி.

வினா:— அவன் மாத்திரம் எப்படி இக் கடமைகளை விட்டு விடலாம்.

விடை:—நம் நாட்டுப் பிரஜைகளில், வீடு வேண்டும் என்பவன் வீட்டு வரி செலுத்தவேண்டும். நிலம் வேண்டும் என்பவன் நில வரி செலுத்தவேண்டும். வட்டி, லாபம் வேண்டும் என்பவன் வருமான வரி செலுத்தவேண்டும். வீடு, நிலம், வட்டி, லாபம் ஒன்றும் வேண்டாம் என்று ராஜீனமா கொடுத்து விட்டவன் ஒருவரியும் கொடாமலேயே அதிகாரிகளிடம் போய், நிர்பயமாய் உட்காரலாம். அது போலவே இல் வாழ்வான தனக்கும் தன்னை அண்டினவர்களுக்கும் நிழல் வேண்டும், பொருள் வேண்டும், ஸூர்யனது வெப்பம் வேண்டும், அக்னியினது உஷ்ணம் வேண்டும், வருணனது நீர் வேண்டும், இலை வேண்டும், காய்கறி வேண்டும் என்னும் அபேக்ஷைகள் இருக்கும் வரையில் தேவர் கடனைச் செலுத்தியே ஆகவேண்டும். இவ்வுலகிலுள்ள மாந்தர்களால் ஒரு வாழை இலையையாவது, தான்யத்தையாவது எவ்வளவு ரஸாயன விஞ்ஞானிகள் சேர்ந்தாலும் சிருஷ்டித்து விடமுடியாது. ஒரு முனிசிபாலிடியில் இருப்பதற்காக முனிசிபல் வரியும், ஒரு ஜில்லாவில் வசிப்பதற்காக ஜில்லா போர்டு வரியும், ஒரு நாட்டில் வசிப்பதற்காக அரசாங்க வரியும் செலுத்துவது போலவே, இப் பிரபஞ்சத்தில் நாம் வசிப்பதற்காக தேவர் கடமையையும் செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம். இதுவே ஹிந்து மதம் என்னும் வேத நெறியின் சிறப்பான கோள்கை. பரமஹம்ஸ ஸன்யாஸியோ, தனக்கு வீடும் வேண்டாம்; குழந்தைகளும் வேண்டாம்; பந்துக்களும் வேண்டாம்; உணவு கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் தான் சமையல் செய்து கொள்வதில்லை; வஸ்திரம் கிடைத்தாலும் கிடைக்கா விட்டாலும் தான் வாங்கிக் கொள்வதில்லை; உடல் இருந்தாலும் விழுந்தாலும் தான் கவலைப்படுவதில்லை; ஓர் இலையையும் கிள்ளுவதில்லை; என்று எல்லாவற்றையும் துறந்து விட்டபடியால், அவன் தேவர்களுக்கோ, பித்ருக்களுக்கோ செலுத்தவேண்டிய கடமை ஒன்றுமே இல்லை. ஈசனிடம் ஒன்றுபடுவதற்கு நிஷ்டை செய்வதைத் தவிர வேறு கடமை இல்லை. அவன் செய்யும் உலக ஸேவையும் அதுவேதான். அல்லும் பகலும் இறைவனையே நாடி, வேறு ஆசையையும் மறந்து, ஈசன் அருளைப் பெற்றவன் ஒருவன் இவ்வுலகில் இருந்தானேயானால் அவனது தர்சனத்தினால் உலகிலுள்ள மாந்தர் அடையும் நன்மையே பொருள்

முதலிய எல்லாவற்றையும் விட மேலானது. ஆதலால் தான் பரம ஹம்ஸ ஸன்யாஸி தேவயக்ஞத்துக்கும், பித்ருயக்ஞத்துக்கும் அவச்யமான யக்ஞோபவீதம், ப்ராசீனுவீதம் என்னும் பூணூலையும், சிகை என்னும் குடுமியையும், பஞ்சகச்சம் என்னும் ஆடை உடுக்கும் விதியையும் துறந்து, தன் ஆசையும் அதற்குரிய கடமையும் முடிந்தது என்ற நிலையை அடைகிறான்.

விசேஷமான பித்ரு கர்மங்களில் சிகையிலும், கச்சத்திலும், வேதவிதிப்படி தெய்வ கர்மத்தைக்காட்டிலும் சில மாறுபாடுகள் உள்ளன.

வி:—கிருஹஸ்தாச்ரமி ஏன் சிகை, கச்சம், உபவீதம் இவைகளைத்தரிக்கவேண்டும்?

விடை:—வேத விதிப்படி இவைகள் மூன்றும் தெய்வ பித்ரு கர்மங்களுக்குச் சாதனமாதலால்தான்.

வி:—தெய்வ பித்ருகர்மங்களை அவன் ஏன் செய்யவேண்டும்?

விடை:—நீர், வெப்பம், நிழல், உணவு, குழந்தை, பெண்டிர் முதலிய வேண்டுமென்ற ஆசையிருப்பதால்.

வி:—இவைகளுக்காக தேவர்கடன் செய்வானேன்?

விடை:—இப்பொருள்களில் ஒன்றையேனும் மனிதன் செய்ய முடியாது. மனித சக்திக்கும் எட்டாத தேவசக்தியினால் ச்ருஷ்டிக்கப்பட்ட பொருள்களை நாம் அநுபவித்துக்கொண்டு ப்ரபஞ்ச அரசாங்கத்தின் வேதச்சட்டப்படி அவைகளுக்குக் கைம்மாறான கடமைகளை நாம் செலுத்தாவிடின் நாம் திருடர்கள் ஆவோம். இதையே ஸ்ரீ க்ருஷ்ணபகவான் பகவத்கீதையில் 3-ம் அத்யாயம், 12-வது ச்லோகத்தில்,

"யக்ஞங்களால் ஆராதிக்கப்பட்ட தேவர்கள் திருப்தி அடைந்து, காற்று, வெப்பம், நீர், செடி, கொடி முதலியவற்றின் மூலமாக மாந்தர்களுக்கு இஷ்டமான போக சுகங்களைக் கொடுக்கின்றார்கள். அப்படி அவர்களால் தரப்பட்ட வஸ்துக்களில் அவர்களுக்கு உரிமையானவைகளைச் செலுத்தாமல் தான் மட்டும் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறவன் திருடனாகவே ஆகிறான்," என்று கூறியிருக்கிறார். மற்றும் பகவான் ஷை அத்தியாயம் 10, 11-வது ச்லோகங்களில்:—ஆதியில் சிருஷ்டிகாலத்தில் பகவான் யக்ஞத்தோடுகூடவே உலக மாந்தர்களை சிருஷ்டித்தார். பிறகு மாந்தர்களை நோக்கி இவ்விதம் கூறலானார்:—

"இந்த யக்ஞத்தைக்கொண்டு நீங்கள் அபிவிருத்தியை அடையுங்கள். உங்கள் அபிவிருத்திக்காக நீங்கள் வேண்டும் பொருள்களையெல்லாம் உங்களுக்கு ஓர் காமதேனுவாய் நின்று இது கொடுக்கட்டும். இந்த யக்ஞத்தைக்கொண்டு தேவர்களுக்கு க்ஷேமகாமான

*காரியங்களைச் செய்துவைப்பீர்களாக. அவர்கள் (நீர், வெப்பம் முதலியவற்றால்) உங்களுக்கு க்ஷேமகரமான காரியங்களைச் செய்து வைப்பார்களாக. (இவ்விதம் ஓர் நல்ல அரசனுடைய அதிகாரிகளும், பிரஜைகளும் போலப் பரஸ்பரம் க்ஷேமகரமான காரியங்களைச் செய்துகொண்டு க்ரமமாக ஈசனை அணுகுதல் என்பதீறாக உள்ள) பெரும் பேற்றை அடையுங்கள்" என்று கூறியிருக்கிறார்.*

தெய்வ கர்மங்களுக்கு வேதவிதிப்படி அவச்யமான மந்த்ர சக்தியும் ஆகார ஆசார சுத்தியும் கொஞ்சமாவது நிலைத்திருப்பதற்காகவே, உடலில் காம உணர்ச்சி உதிப்பதற்கு முற்காலமாகிய எட்டு வயதிலேயே கிரமமாக வர்ணாச்ரம தர்மங்கள் ஆரம்பிக்கப்பட்டு விதிக்கப்பட்டிருக்கின்றன. பித்ரு கர்மங்களுக்கு ஆதாரமான வம்ச சுத்திக்காகவே கன்னிப்பருவத்திலேயே மணத்தல், விதவைகள் விசேஷ நியமத்தோடு இருத்தல் முதலியன சிறப்பாக நமது வேதநெறியில் விதிக்கப்பட்டிருக்கின்றன. எந்தக் கஜானாவில் சட்ட முறைப்படி எதைச் செலுத்தினாலும், அது அரசனுக்கே உரித்தாவதுபோல், எத்தேவர்கட்கோ, எப்பித்ருகளுக்கோ, எப்பெரியோருக்கோ வேத நெறிப்படி அர்ப்பணம் செய்யினும் அது எல்லாம் வல்ல ஈசனுக்குத் திருப்பணியே.

*வேதவிதிப்படி அந்தணர் நியமத்துடன் ஓதிய மந்த்ரத்தைக் கொண்டு வானவரைக்குறித்து முக்கியமாய் ஆவின்பால், நெய், முதலிய த்ரவ்யங்களை ஹோமம் செய்தலென்னும் யக்ஞத்தினால் உலக சாம்ராஜ்யம் செழிக்கும். "ஹரஹரமகாதேவ" என்ற அரன் புகழ் ஒலிக்கும். ஆதலால் வேதநெறிப்படி ஒழுகும் அந்தணரையும் வேள்விக்காம் அவிநெய் பெய்யும் ஆனினத்தையும் குறித்தே ஸ்ரீ குமாரக்கடவுளின் அம்சமாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் கீழ்வருமாறு வாழ்த்துப்பதிகம் பாடியருளியிருகின்றார்.*

*"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்*
*வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக*
*ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே*
*சூழ்க வையக முந்துயர் தீர்கவே."*

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Sri Maha Bharatham Press, Kumbakonam. PIO. T8. 4, 1-10-47-C 5000

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம꞉

# மனுஷ்ய தர்மம்.



ப்ரசுரம் 9.

புரட்டாசிமீ 17உ, வெள்ளிக்கிழமை

3—10—1947

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

( Regd. )

கும்பகோணம்.

(விலை அணா ஒன்று)

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# மனுஷ்ய தர்மம்

—o—

உலகத்திலுள்ள ஜீவர்கள் பிராணிகளெனப்படும். பிராணனுடையவை பிராணிகள். பிராணன் என்பது உயிர். ஆகவே உயிருள்ளனவெல்லாம் பிராணிகள் என்று சொல்லப்படும். உயிருள்ள பிராணிகள் எல்லாம் எப்பொழுதும் காரியங்களைச் செய்துகொண்டேயிருக்கின்றன. ஒவ்வொரு பிராணியும் ஸதா ஏதாவது ஒரு காரியத்தைச் செய்துகொண்டேயிருக்கிறது. எறும்பு ஸதா ஊர்ந்துகொண்டேயிருக்கிறது. பறவை பறந்துகொண்டோ, உணவு தின்றுகொண்டோ இருக்கிறது. மனிதன் ஆபீசுக்குப்போய் வேலை செய்கிறான். இல்லையென்றால் உழுது பயிரிடுகிறான். இவற்றைப் போல வேறு பல காரியங்களைச் செய்துகொண்டேயிருக்கிறான். ஒருவராவது காரியம் செய்யாமல் இருப்பதேயில்லை. இந்த விஷயத்தையே பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார்:—

ந ஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் |

(கீதை, III-5)

ஒரு மனிதன்கூட ஒரு ஸமயத்திலாவது ஒரு காரியத்தையாவது செய்யாமலிருப்பது இல்லை, என்பது இதன் கருத்து.

இப்படி மனிதன் ஸதா காரியங்களைச் செய்துகொண்டே இருப்பதைப் பிரபஞ்சத்தில் நாம் பார்த்துவருகிறோம். சிறிய ஊரிலுள்ளவனுக்குக் கொஞ்சம்தான் காரியங்கள் இருக்கின்றன. பெரிய ஊரில் உள்ளவனுக்குக் கணக்கில்லாத காரியங்கள் இருக்கின்றன. ஏன் இவ்வாறு எல்லாரும் காரியங்களைச் செய்துகொண்டேயிருக்க வேண்டும்?

நாம் ஏதாவது ஒரு காரியத்தைச் செய்துகொண்டேயிருந்தால் தான் கஷ்டப்படாமல் இருக்கலாம். கஷ்டப்படாமலிருப்பதை உத்தேசித்துப் பல காரியங்களைச் செய்யவேண்டும். காரியங்கள் இல்லாமல் சும்மா இருப்பதைப்போன்ற கஷ்டம் வேறு இல்லை. இப்படிக் காரியஞ்செய்வதற்காக நம்முள்ளே ஒன்று தூண்டி வரு

கிறது. யாரோ ஒருவர் பசி என்று ஒன்றை எல்லாருக்கும் வைத்து விட்டார். அந்தப்பசி மனிதனை, "காரியஞ்செய்", "காரியஞ்செய்" என்று தூண்டிக்கொண்டேயிருக்கிறது. காரியஞ் செய்யாமல் இருந்துவிட்டால் வயிறு பக் பக்கென்று பசிக்கிறது. அந்தப்பசி யாகிய வியாதிக்கு மருந்து தேடி நாம் காரியங்களைச் செய்யவேண்டி யிருக்கிறது. தலைவலி நமக்கு வந்தால் உடனே மருந்துபோட்டால் போய்விடுகிறது. அப்புறம் எப்பொழுதாவது பலநாள் கழித்து வருகிறது. இந்தப் பசி என்கிற வியாதியானது அப்படியல்ல. மருந்து போட்டால் அப்புறம் பலநாள் வராமல் இருக்கும். மற்ற வியாதிகளுக்கும் இந்த வியாதிக்கும் நிரம்ப வித்தியாசம் உண்டு. இந்த வியாதிக்கு வேளைதோறும் மருந்து கொடுத்துக்கொண்டே யிருக்கவேண்டும். இந்த வியாதிக்கு மருந்து தேடித்தான் ஒவ்வொருவரும் காரியம் செய்யவேண்டும். புலி மானை அடிப்பதும், பூனை எலியைப்பிடிப்பதும், பாம்பு தவளையைப் பிடிப்பதும், இந்த பசியாகிற வியாதியைத் தீர்த்துக்கொள்வதற்காகவே. மனிதன் பலவகை வேஷங்களைபோட்டுக் கெட்டிக்காரத்தனம் எல்லாம் பண்ணி ஸம்பாத்யம் செய்வதும் இதற்காகவே. பசியாயிருந்தால் அரிசி தேடிச் சாதம் சமைத்துக்கொள்கிறான். அரிசிக்காக காரியம் செய்கிறான். உடம்பை வைத்திருக்கவேண்டுமானால் காரியம் செய்து கொண்டிருப்பதும் அவசியம். க்ஷணநேரமாவது காரியஞ்செய் யாமல் இருக்கமுடியாது.

வேலை செய்யாமலேயிருந்தால் இந்த உடம்பு ப்ரயோஜனமில்லா மல் போய்விடும். பணக்காரனாயிற்றே, வேலை ஏன் செய்யவேண்டும், என்பது இல்லை. அவனுக்குத்தான் அதிக காரியங்கள் இருக்கின் றன. பணம் கொடுத்த இடத்தில் அது ஜாக்கிரதையாயிருக்க வேண்டும், என்று அவனுக்கு ஸதா கவலை. ஆகையால் அதற்கு வேண்டிய காரியங்களைச் செய்துகொண்டேயிருக்கிறான். ஓர் உஞ்ச விருத்தி ப்ராஹ்மணனைக் காட்டிலும் பத்துலட்சரூபாய் சொத்து உடையவனுக்கு அதிக வேலை. அவன் செய்துகொண்டிருக்கிற வேலைக்கு முடிவேயில்லை.

இப்படி மனிதன் செய்யும் வேலைகள் பலவகையாக இருக்கின் றன. தன் உடம்புக்காக அவன் செய்யும்வேலைகள் ஒருவகை; தன்னைச்சேர்ந்தவர்களுக்காகச்செய்யும் காரியங்கள் மற்றொருவகை

குழந்தை, பெண்ஜாதி, தகப்பனர், தாயார் முதலிய சிலபேர் அவனிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்காகச் செய்யவேண்டிய சில வேலைகள் உண்டு. அவற்றிற்குப்பின், அவனுடைய சொந்த மாடு, சொந்த நாய், கொஞ்சம் அபிமானம் அதிகமானல்—ஒரு பூனை, அவனுடைய வேலைகளைப்பார்க்கும் குடியானவன், வேலைக்காரன் முதலியவர்களைப் போன்றவர்களுக்காகச் சில வேலைகள். இவற்றிற்கப்புறம், கிராமஸமுதாய ஸம்பந்தமான வேலைகள் வேறு இருக்கின்றன. வீட்டைச்சுத்தமாக மெழுகி நன்ருக வைத்துக்கொள்வது வீட்டிலுள்ளவர்கள் பொறுப்பு. பத்துப்பேர் சேர்ந்தது ஒரு குடும்பம். ஆயிரம்பேர் சேர்ந்தது ஒரு கிராமம். குடும்பக் காரியங்கள் எப்படி மனிதனுக்கு அவசியமோ, அப்படியே கிராம ஸமுதாய காரியங்களும் அவசியம். அப்புறம் தேச ஸமுதாயத்திற்காகச் செய்யும் காரியங்கள் பல.

இப்படிப் பிரிக்கப்பட்ட காரியங்களில் பல் தேய்த்தல், வேஷ்டி தோய்த்தல், ஸ்நானம் செய்தல், சாப்பிடுதல் முதலியவற்றைப் போன்ற காரியங்கள் தன் சொந்தப் பிரயோஜனத்தைப் பற்றிச் செய்யப்படுபவை. வீடுகட்டுதல், மெழுகுதல், வீட்டுக்கு வேண்டிய உபகரணங்களை ஸம்பாதித்தல் முதலியவை வீட்டுக்காகச் செய்யப்படுபவை; அதாவது தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்குமாகச் செய்யப்படுபவை. வாய்க்கால் வெட்டுதல், ஏரியைச் செப்பனிடுதல், கிராமத்தில் ஆஸ்பத்திரி கட்டுதல், வியாதியைப் போக்கத்தக்க ஏற்பாடுகள் செய்தல் என்பவற்றைப் போன்றவை கிராம ஸமுதாய ஸம்பந்தமான காரியங்கள். தேச ஸமுதாயமான காரியங்கள் இந்தக் காலத்தில் நன்ருகத் தெரியும்.

நாம் செய்யும் காரியங்களில் நம் வயிற்றுக்கு மாத்திரம் சாப்பாடு போடும் வகையையன்றி மற்றவர்களையும் ஸம்ரக்ஷிக்கும் காரியங்களும் உண்டு. சக்தி உள்ளவர்கள் அசக்தர்களைக் காப்பாற்றுவது உலக இயற்கை. அசக்தர்கள் சக்தியுள்ள வேருெருவர் கையில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறார்கள். குழந்தையை சக்தியுள்ள மனிதன் போஷித்து வருகிருன். அவன் கிழவனுகி அசக்தனுகும்பொழுது பெரியவனுகிய அந்தக் குழந்தையால் போஷிக்கப்படுகிருன். இப்படி மாறி மாறி வருவதே உலகத்தில் இயற்கையாக இருக்கிறது. இந்த ஸ்வபாவம் மனிதனிடத்தில் மட்டுமல்ல; பசு பக்ஷி முதலி

எல்லாப் பிராணிகளிடத்திலும் காணப்படுகின்றது. பக்ஷிகளும் மிருகங்களும் குஞ்சுகளையும் குட்டிகளையும் ஸம்ரக்ஷித்துக் கொள்ளு கின்றன. புழு, பூச்சி, பூனை, குரங்கு முதலிய எல்லாவகைச் சிறிய பிராணிகளிடத்திலும் இந்த ஸ்வபாவம் காணப்படுகிறது.

உலகம் முழுவதிலும் காரியங்கள் நடந்துகொண்டே இருக் கின்றன. பலவகையான காரியங்களை மனிதன் செய்கிறான்; ஒவ்வொன்றிலும் ஈடுபடுகிறான்; பணம் ஸம்பாதிக்கிறான்; கூட்டுறவு (Co-operation)• தேடுகிறான்; வாய்க்கால் வெட்டுகிறான்; தேஹ ஆரோக்யசாலைகளை அமைக்கிறான்; ராஜாங்கத்தைக்கவனிக்கிறான்; ஜனக்கஷ்டத்தைப் போக்க வழி தேடுகிறான். ஸ்வயநல பரித்யாகம் செய்து இப்படிப் பொதுவான காரியங்களோடு தனக்கு வேண்டிய காரியங்களையும் பார்த்துக்கொள்கிறான். வயலுக்குப் போகிறான்; ஆபீஸில் வேலைபார்க்கிறான். இப்படிப் பணம் ஸம்பாதிப்பதற்காகப் பல காரியங்கள் செய்கிறான்.

மனுஷ்யனுக்கு அவசியமாக வேண்டியிருப்பவை மூன்று வகைப்பொருள்களே. பசியைப் போக்கிக்கொள்ள ஆகாரம் வேண்டும். பின்பு வெயில், குளிர் இவைகளைத் தடுத்துக்கொள் வதற்கும், மானம் காப்பதற்கும் வஸ்த்ரம் வேண்டும். களைப்புத் தீர இருப்பதற்கு ஒரு ஆவரணம்—இடம் வேண்டும். இந்த மூன்றும் மற்ற எல்லாப் பொருள்களையும் விட மிகவும் அவசிய மானவைகள். இந்த அவசியமான பொருள்களுக்குமேல் அவன் சேகரிக்கும் பொருள்கள் குழந்தைகள் ரக்ஷணத்திற்கும், அவர் களுடைய விவாகம் முதலியவற்றிற்கும் உபயோகமாக இருக்கின்றன.

மனிதனுக்கு வேண்டிய அவசியமான பொருள்களைப் பெறுவ தற்கு அவன் செய்யும் காரியங்களைத் தவிர வேறு சில காரியங்களைச் செய்யவேண்டியிருக்கிறது. தினமும் ஆஹாரத்தை ஸம்பாதித்துக் கொள்வதும், வீடு இடிந்து விட்டால் அதைக் கட்டிக்கொள்வதும், வஸ்த்ரம் கிழிந்தால் தைத்துக் கொள்வதும் அவனுக்கு அவசிய மானவை. ஆனால் தன்பால் ஒப்படைக்கப்பட்ட வேறு சில ஆத்மாக் களுடைய அவசியப் பொருள்களையும் அவன் சம்பாதித்துத் தருகிறான்: அந்த நித்ய வியாதியாகிற பசிக்கு ஆஹாரம் ஸம்பாதித் துத் தானும் உண்டு பிறருக்கும் தருகிறான். பசியை வியாதியாகவும், சாப்பாட்டை மருந்தாகவும் சொல்வதில் ஒரு விசேஷம் இருக்கிறது.

க்ஷுத்வ்யாதிஶ்ச சிகித்ஸ்யதாம் ப்ரதிதினம் பிக்ஷௌஷதம்
புஜ்யதாம் ஸ்வாத்வன்னம் ந து யாச்யதாம் விதிவஶாத்
ப்ராப்தேன ஸந்துஷ்யதாம் । ஶீதோஷ்ணாதி விஷஹ்யதாம்
ந து வ்ருதா வாக்யம் ஸமுச்சார்யதாம் ஔதாஸீன்ய
மபீப்ஸ்யதாம் ஜனக்ருபா நைஷ்டுர்யமுத்ஸ்ருஜ்யதாம் ॥

(ஸாதன பஞ்சகம், 4-வது ச்லோகம்)

பசி என்னும் வியாதிக்கு வைத்தியம் பண்ணிக்கொள், என்று ஸ்ரீ ஆசார்யாள் இந்த ச்லோகத்தில் கட்டளையிடுகிறார்கள். வியாதி நிவ்ருத்திக்கு எவ்வளவு மருந்து அவசியமோ அவ்வளவுதான் வியாதியுடையவன் சாப்பிடுவான். நாக்குக்கு ருசியான மருந்தைத் தேடிச் சாப்பிட்டுக்கொண்டே யிருக்கமாட்டான். தவிர அதிக விலை கொடுக்காமல், குறைந்த விலையுள்ள மருந்து கிடைக்குமாகில் அதையே வாங்கிச் சாப்பிடுவான். அதைப்போல பசிக்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவே சாப்பிடவேண்டும். ஸாதாரணமான சாப்பாடு இருந்தால் போதும், என்பதே முன்சொல்லிய ச்லோகத்தின் உட்கருத்து.

இப்படி மனிதன் தனக்காகச் செய்துகொள்ளவேண்டிய பல காரியங்களையும், தன்னைச்சேர்ந்தவர்களுக்காகச் செய்யவேண்டிய பல காரியங்களையும் தவிர, வேறு சில விசித்ரமான காரியங்களைச் செய்து வருகிறான். அந்த அதிகப்படியான வேலைகளிற் சில வற்றைப்பற்றிக் கீழே சொல்லப்படுகிறது. ஒருவன் சிலுவை என்று ஒன்றை வைத்துக்கொள்கிறான். 'சர்ச்' (Church) என்ற ஓர் இடத்தைக் கட்டிக் கொள்கிறான். அங்கே இவனுடைய பசியைப் போக்கக்கூடிய பதார்த்தம் ஒன்றும் கிடையாது. மற்றொருவன் ருத்ராக்ஷம் அணிந்துகொண்டு, நிறைய விபூதியை பூசிக்கொள் கிறான். அவற்றால் அவனுக்குப் பசி நீங்குமா? வஸ்த்ரத்திற்கு ஏதாவது பிரயோஜனம் உண்டா? வேறொருவன் நாமக்கட்டியைக் குழைத்து வைத்துக்கொண்டு திருச்சூர்ணத்தை இட்டுக்கொள் கிறான். முன்பு சொன்ன அவசியமான காரியங்களில் இவை சேரா. இவற்றால் வயிற்றுக்கும் பிரயோஜனமில்லை; வஸ்த்திரத்திற்கும் பிர யோஜனமில்லை; வீட்டிற்கும் பிரயோஜனமில்லை; சேர்ந்தவர்களுக் கும் பிரயோஜனமில்லை, இவை அதிகப்படியான காரியங்கள்,

ஒருவன் ஏதோ ஒரு பஞ்சபாத்திரத்தையும் உத்தரணியையும் எடுத்துக்கொண்டு லொட லொட என்று சப்தம் பண்ணி ஏதோ செய்கிறான். ச்ராத்தம் என்று ஒன்று செய்கிறான். ப்ராஹ்மணர்களைக் கூட்டி வைத்துச் சாப்பாடு போடுகிறான். இவற்றால் அவன் பசி நீங்குமா? வயலுக்கு மழைவருமா? ஒன்றுமில்லை. மலையிலிருந்து கல்லை எடுத்துவந்து கோவில் கட்டுகிறான். அது இவன் தங்குவதற்குப் பிரயோஜனப் படுவதில்லை. ராத்திரியில் பூட்டிவிடுகிறார்கள். மழையில் ஒண்டுவதற்குக்கூட உபயோகப்படுவதில்லை. இதனால் என்ன பிரயோஜனம்?

இன்னம் சிலபேர்கள் மதம் மதம் என்று சொல்லிக்கொண்டு என்னென்ன காரியங்களோ செய்கிறார்கள். சிலபேர் மதத்திற்காக சண்டை போட்டுக்கொள்கிறார்கள். மண்டையை உடைத்துக் கொள்கிறார்கள். இந்தக் காரியங்கள் எல்லாம் மனிதனுக்கு அவசியமல்லாத அதிகப்படியான காரியங்களாகத் தோன்றுகின்றனவல்லவா?

விபூதி பூசுதல், ருத்ராக்ஷம் அணிதல், கோவில் கட்டுதல், ச்ராத்தம் செய்தல், பிராஹ்மணஸந்தர்ப்பணம் செய்தல் இவை எல்லாம் மனிதனுக்கு அதிகப்படியான காரியம் என்று சொல்லலாமல்லவா? இப்படிச் செய்யும் அதிகப்படியான காரியங்களால் என்னப் பிரயோஜனம்? போதாக் குறைக்கு பல இடங்களில் பஜனை என்று ஒன்று ஆரம்பித்துக் கூத்தாடுகிறார்கள். தொண்டை வற்றிப்போகிற வேலை. அந்த வேலைக்கும் ஆபீசு வேலைக்கும் ஸம்பந்தமே கிடையாது. அனாவசியமாக அந்த வேலை நடந்துகொண்டே வருகிறது. இவ்வளவு காரியங்களும் அனாவசியமாகவே தோன்றுகின்றனவல்லவா?

இவை அவசியந்தானா? ஏன் இவற்றைச் செய்யவேண்டும்? இவற்றால் வரும் பிரயோஜனம் என்ன? என்பவற்றை இனி ஆலோசித்துப்பார்க்கலாம்.

மனிதன் ரூபாய் ஸம்பாதிப்பானேன்? தினந்தோறும் பசியை ஆற்றிக்கொண்டாலே போதுமே? எங்கேயாவது போய்ச் சாதம் கேட்டால் போடுகிறார்கள்; சத்திரங்களிலும் சாப்பிடலாம். சாப்பாடு கிடைக்கிறதே, ஸம்பாதிப்பானேனென்று நினைத்துச் சும்மா இருப்

பதில்லை. ஒரு வயிறு சாதமும், ஒருபடி அரிசியும், பத்துரூபாய் பணமும் தனித்தனியே வைத்து, இவைகளுக்குள் ஏதாவதொன்றை எடுத்துக்கொள், என்றுசொன்னால் பணத்தைத் தான் ஒருவன் எடுத்துக்கொள்வான். ஏன்? சாதம்தானே வேண்டும்? பணம் எதற்காக? சாதம் ஒருவேளைக்குத்தான் பிரயோஜனம். அரிசி இரண்டு வேளைக்குத்தான் உதவும். பணம் பத்துவேளைக்கு உதவும். அதிக நாளைக்கு உதவக்கூடிய பொருளைத்தான் அவன் அதிகமாக விரும்புகிறான்.

பள்ளிக்கூடம் போகிற பையனுக்குத் தாயார் சாதம் கட்டிக் தருகிறாள். கொஞ்சம் தூரமான ஊருக்குப்போனால் அரிசி முதலிய ஸாமான்களைக் கட்டிக்கொண்டு போகிறோம்.

முன் காலத்தில் ரயில் கிடையாது. நினைத்தமாத்திரத்தில் போய்வரவேண்டிய சௌகரியங்கள் இல்லை. ஆனால் அந்த சௌகரியங்களால் நமக்கு நஷ்டம்தான் அதிகமாய் ஏற்படுகிறது. ரயில் சார்ஜ், சாப்பாட்டு ஹோட்டல் செலவு, பஸ், காபி முதலிய செலவுகள் உண்டு; இவற்றைபர்க்காமல் பெரிய ஊருக்குப் போனால் புது ஸாமான்கள் வாங்குவதில் செலவு. இவ்வளவு செலவும் இந்தக் காலத்தில் உண்டாகின்றன. பழைய காலத்தில் எவ்வளவு நாள் வெளியூரிற் பிரயாணம் செய்கிறோமோ அவ்வளவு நாள் அகத்துச் சாப்பாடு லாபம். நடப்பதால் காலுக்குப் பலம்.

இப்படிச் சிறிய செலவில் தந்திரமாகக் காலங்கழிக்கும் பழைய காலத்து மனிதர்களில் ஒருவரைப்பற்றி ஒரு கதை சொல்லுவதுண்டு. பாலக்காட்டுக்கருகில் உள்ள சித்தூர் என்னும் ஊரில் கிருஷ்ணய்யர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஒரு பெரிய பாங்கு வைத்தார். அந்த பாங்கு வட்டி வருமானத்தினால் 70 பிள்ளைகளுக்குமேல் வேத சாஸ்த்ரங்களைக் கற்றுக்கொடுக்க ஒரு பாடசாலை வைத்தார். அந்தக்காலத்தில் அங்கே படித்தவர்கள் பின்பு வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் வைத்திருக்கிற ஸம்ஸ்கிருத காலேஜில் வந்து படிப்பது வழக்கம். இப்படிப் பாடசாலை வைத்தவர்களுள் மற்றொருவராகிய முத்துகனபாடிகள் என்பவர் திருவையாற்றில் இருந்தார். அவர் நூறு நூற்றிருபது பிள்ளைகள் வரையிலும் வேதாத்யயனம் செய்யும் படி ஏற்பாடு செய்தார். எங்கேயாவது அவர்களுக்குச் சாப்பாட்டு

வசதிகள் செய்துகொடுத்தார். வேலையிற் பிசகினவர்களுக்கு அபராதம் போட்டு அதை வெட்டிக்குவிட்டு அந்தத் தொகையையே மூலதனமாக வைத்தார். தாமே சொல்லிக் கொடுத்தார். ஒரு நாள் ஒரு உத்தியோகஸ்தர் அந்தப் பாடசாலைக்கு வந்தார். அவர் அங்கே யுள்ள பிள்ளைகளைப் பார்த்துவிட்டு, "ஐயையோ, அனியாயமாக இவர்களை எல்லாம் குட்டிச்சுவராக்குகிறீர்களே! ஆட்டு மந்தை யைப்போலப் பத்து வருஷங்கள் அடைத்துவைத்து என்னப் பிர யோஜனம்? இவர்களுடைய ஜீவனத்திற்கு ஒருவழியும் செய்ய வில்லையே! இங்கிலீஷ் படித்திருந்தால் நல்லநிலைக்கு வந்திருக் கலாமே!" என்று சொன்னாராம். அப்பொழுது பக்கத்திலிருந்த ஒருவர், "இவர்களை இங்கிலீஷ் படிக்க அனுப்பாமல் இங்கே மந்தை போல அடைத்து வைப்பதனால் பாதிச்செலவு லாபமாகிறது. இங்கி லீஷில் போயிருந்தால் உடுப்பு, கிராப், ஸைக்கிள் முதலியவற்றிற் காக இவர்கள் செலவழிப்பது லாபந்தானே! அந்தச்செலவு அவர்கள் ஸம்பாதிப்பதில் பாதியை விழுங்கிவிடும். அந்தச்செலவு இவர் களுக்கு இல்லாமையால் அந்தப்பாதி ஸம்பாத்யம் இருக்கிறமாதிரி தான். மிச்சம் பாதி ஸம்பாதிக்க நாங்கள் சொல்லிக்கொடுத்திருக் கிறோம். இங்கே இவர்கள் வித்தை கற்றுக்கொள்ளாமற்போனாலும் இங்கிலீஷ் பக்கம் திரும்பாமல் இருப்பதனால் லாபம் உண்டு", என்றாராம், இவற்றால் அந்தக்காலத்தில் சுருக்கமாக செலவழித்துக் கொண்டு பெருக வாழ்ந்தவர்கள் இருந்தார்கள் என்பது தெரிய வருகிறது.

அந்தக்க த்தில்கூட 50 மைல் தூரம் உள்ள ஓரிடத்திற்குப் போக அரிசி கட்டிக்கொண்டு போனார்கள். பிரயாண தூரம் அதிகப் பட அதிகப்பட நாம் சேகரித்து வைத்துக்கொள்ளவேண்டிய பொருள்களும் அதிகப்படுகின்றன.

ஒரு நாள் சாப்பாட்டுக்கு ஸம்பாதித்தால் போதுமே! மறு நாள் சாப்பாட்டுக்கு இப்பொழுது என்ன கவலை, என்றிருப்பதில்லை. மறுநாள் அசௌக்கியம் வந்துவிட்டால் கஷ்டப்படவேண்டுமே யென்று, நாளைக்கும் சேர்த்து இன்றைக்கே சேகரித்துக்கொள்கி றோம். மறுநாள் சௌக்கியத்தைக் கவனிக்காவிட்டால் பணம் நமக்கு வேண்டாம். சிப்பந்திகளுக்கு சாதமாய்க் கொடுத்தபோது

திருப்தி ஏற்படவில்லை. அரிசியாகக் கொடுத்தால் நல்லதென்று எண்ணினார்கள். வேண்டிய அளவு உபயோகப்படுத்திக்கொண்டு மீதியை விற்றுக் கொள்ளலாமல்லவா? அசடாயிருப்பவன்தான் கொஞ்சநாளைக்குப் போதுமானவற்றைப் பெற்றுக் கொள்வான். புத்திசாலி பல நாளுக்கு உபயோகப்படக்கூடியவற்றைப் பெறு வான்.

இப்படியே முன்னாடியே பிற்காலத்திற்கு வேண்டியவற்றைச் சேகரித்து வைக்கிறதில பின்பு எவ்வளவுநாள் ஸௌக்கியமாயிருக்க வேண்டுமென்று எண்ணுகிறோம்? ஒரு நாளா? ஒரு மாதமா? ஒரு வருஷமா? எவ்வளவு சேகரித்து வைக்கிறோம்? ஆயிரமா? பதினா யிரமா? இன்னம் எவ்வளவு இருந்தாலும் நம் ஸௌக்கியத்திற்கு அனுகூலமே. எவ்வளவுநாள் ஸௌக்கியமாய் வாழவேண்டுமென் பது எல்லோருக்கும் தெரியாது. பரமேச்வரன் எழுதிவைத்திருக் கும் நாள்தான் அதற்கு எல்லை. ஆனால் நாம் எப்பொழுதும் ஸௌக்கியமாகவே இருக்க விரும்புகிறோம.

முன் சொன்ன எல்லைக்குப் பின்பும், எப்பொழுதும் ஸௌக் கியமாயிருக்க இந்தப்பணம் முதலிய உபகரணம் போதுமா? இவை உடம்பு உள்ளவரைக்கும்தான் உதவும். அப்புறம் இதனால் பிர யோஜனமில்லை. நாம் செய்யும் காரியங்களெல்லாம் பிற்காலத்தில் ஸௌக்கியமாயிருப்பதற்குச் செய்கிறோம். எப்பொழுதும் ஸௌக் கியமாயிருப்பதற்குத்தக்க காரியங்களை நாம் செய்யவேண்டும். இப் பொழுது செய்துகொண்டிருக்கும் காரியமும் செய்யவேண்டியவை தாம். அதோடு எப்பொழுதும் கஷ்டமில்லாமலிருக்க ஒருகாரியம் செய்யவேண்டும். நாம் எப்பொழுதும் சாவதில்லை. உடம்புதான் சாகிறது. ஆகையால் எப்பொழுதும் ஸௌக்கியமாயிருக்க ஒரு காரி யத்தை இப்பொழுதே செய்யவேண்டும். இறந்தபின்பு கரசரணாதி கள் இல்லை. பிற்காலத்திற்கு இன்ஷியூர் செய்வதைப்போல, இப் பொழுதே இந்தக் காரியங்களைச் செய்யவேண்டும்.

ஒரு மலையடிவாரத்தில் நாம் இருக்கிறோம். நம்முடைய கையில் ஆயிரம் ரூபாய் பணமிருக்கிறது. அவ்வளவும் சில்லறையாக இருக் கிறது. அப்பொழுது திருடர்கள் வருகிறார்கள். மலைமேல் ஏறி அப்புறம் போய்விட்டால் நமக்குப் பயமேயில்லை. அப்பொழுது

ஒருவன் வந்து இந்த ஆயிர ரூபாய்க்கும் நோட்டு வேண்டுமா வென்று கேட்கிறான். நாம் என்ன செய்வோம்? உடனே அவனிடம் சில்லறை, மூட்டையைத் தள்ளிவிட்டு ஆயிரம் ரூபாய் நோட்டு வாங்கிக்கொண்டு துள்ளிக் குதித்து மலைமேலேறி ஓடிப்போய் விடுவோம். ஆனால் அந்த நோட்டு மலைக்கு அப்புறமும் உள்ள தேசத்தில் செல்லும் நோட்டாக இருக்கவேண்டும். அதைப்போலத்தான் இப்பொழுது நம்முடைய கதையும் இருக்கிறது. நமக்கு உள்ள சக்தியைக்கொண்டு பிற்காலத்திற்கு உபயோகமான காரியங்களைச் செய்துகொண்டால் நமக்குக் கஷ்டமே இராது.

இங்கேதான் ஸௌக்யமாக இருக்கவேண்டும்; அப்புறம் நாம் இருப்பது என்ன நிச்சயம்? என்று ஒருவர் கேட்கலாம். இருந்து விட்டால் அப்புறம் அழுவதா?

நாஸ்தி வேஹாஸ்தி நோ ஹாநி: அஸ்தி வேஹாஸ்திகோ ஹத: ॥

இந்த ச்லோகத்தில் இந்த ஸமாசாரம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பிறப்புக்கு அப்புறமும் நாம் இருக்கிறோம்; அதனால் இப்பொழுதே நல்ல காரியங்கள் செய்யவேண்டுமென்று ஆஸ்திகன் சொல்லுகிறான். அப்புறம் இருப்பது என்ன நிச்சயம், என்று நாஸ்திகன் சொல்லுகிறான். இப்பொழுது நல்ல காரியங்களைச் செய்துவிட்டால் பின்பு இருந்தால் நன்மையுண்டு; இல்லாவிட்டால் நஷ்டம் ஒன்றுமில்லை. இரண்டு பக்ஷத்திலும் ஆஸ்திகனுக்குக் கஷ்டமே இல்லை. பின்பு நாம் இருப்பது உண்மையானால் சும்மா இருந்த நாஸ்திகன் பாடு தான் திண்டாட்டம்.

ஆகையால் நல்ல காரியங்களைச் செய்வது எப்பொழுதும் நல்லதுதான். நாம் ஓர் இடத்திற்குப் பிரயாணம் செய்யவேண்டுமானால் மனம் சந்தோஷமாக இருக்கவேண்டும். இந்தச் சரீரத்தை விட்டுவிட்டு ப்ரயாணம் செய்யும்பொழுது, வழியில் கஷ்டத்தைப் போக்கிக்கொள்ளும் காரியத்தைச் செய்யாமலிருந்தால், நமக்கு கஷ்டம் ஏற்படும். அவ்வாறு ஏற்படாமல் காத்துக்கொள்வதற்கு உரிய காரியங்களை ஞானமார்க்கத்தால் அறியலாம். இப்பொழுது செய்யும் கர்மாக்களுக்கு இப்பொழுது பலன் இல்லாவிட்டாலும், பின்பு உண்டு. நியூடன் [Newton] சொல்லிய உண்மையை

வெகு காலத்திற்கு முன்பே ஆத்மா விஷயத்தில் நம் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஒரு சக்திக்குப் பிரதிபலன் [Re-action] எப்பொழுதும் உண்டு, என்னும் கொள்கையை நம்முடைய சாஸ்த்ரங்கள் நன்றாகச் சொல்லுகின்றன.

கிறிஸ்துவர்கள் ஜன்மாந்திரத்தை ஒத்துக்கொள்வதில்லை. ஆனால் அவர்கள் சொல்லும் சில ஸமாசாரங்கள் அவர்கள் தங்களை அறியாமலே ஜன்மாந்திரத்தை ஒப்புக்கொண்டவர்கள் என்பதைக் காட்டுகின்றன. அவர்கள் இந்த உடம்பை விட்டு நீங்கிய பின்பு நியாயத் தீர்ப்பு ஒன்று நடக்கிறதாகவும், பின்பு ஜீவன் நரகத்தையோ, ஸ்வர்க்கத்தையோ, செய்த கர்மாக்களுக்குத் தக்கபடி அடைகிறானென்றும் சொல்லுகிறார்கள். ஸுகதுக்க அனுபவம் பெறுவதற்குரிய இந்தத் தேகம் இங்கே பெட்டியில் கிடந்தாலும், வேறொரு தேகத்தில் இருந்து அவற்றை அனுபவிப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள். அதைத்தான் நாம் ஜன்மாந்திரம் என்கிறோம். அந்தத் தேகத்தில் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்கு முன்பு, அவற்றிற்குக் காரணமான கர்மாக்களைச் செய்த இந்த ஜன்மம் எப்படி உண்டோ, அதேமாதிரி இந்த ஜன்மத்தில் ஸுக துக்கானுபவங்களுக்கு ஹேதுவான கர்மாக்களுக்குரிய ஒரு பிறப்பு இதற்கு முன்பும் இருக்கவேண்டுமல்லவா ?

இந்த ஜன்மத்திற்குப் பின்பும் உபயோகப்படக்கூடிய சில காரியங்கள் செய்யவேண்டுவது அவசியம். எப்பொழுதும் ஸௌக்கியமாக இருப்பதற்காகச் செய்யப்படும் காரியங்கள் தாம் முன்பு அதிகப்படியானவை என்று சொல்லியவை. விபூதி இட்டுக்கொள்ளுதல், ருத்திராக்ஷம் அணிதல், ச்ராத்தம் செய்தல் முதலிய காரியங்கள் நாம் எப்பொழுதும் ஸௌக்கியமாக இருப்பதற்கு உதவும் காரியங்கள். இவற்றைப் போன்ற காரியங்களை எவ்வளவு நாம் அதிகமாகச் செய்கிறோமோ அவ்வளவு அவைகள் நன்மையை உண்டாக்கும்.

உடம்பிருக்கும்பொழுது உபயோகப்படக் கூடிய காரியங்களைத் தவிர அதற்குப் பின்பும், பல கோடி வருஷங்களுக்கும், எப்பொழுதும் உபயோகப்படக் கூடிய காரியங்களாக நாம் செய்யவேண்டும். இந்த ஊர் நோட் ருஷியா [Russia]வில் செல்லாது. எல்லா-

ஊருக்கும் ஒரு ராஜா இருந்தால் அவனுடைய முத்திரையுள்ள நோட்டு எங்கும் செல்லும். இந்தப் பதினான்கு லோகங்களுக்கும் ஒரு ராஜா இருக்கிறான். அவன் தான் பரமேச்வரன். அவனுடைய ஸகல ராஜ்யங்களிலும் செல்லும் நோட்டு ஒன்றிருக்கிறது. அது எப்பொழுதும் எவ்விடத்திலும் செல்லும். அது எது? அதுதான் தர்மம்.

ராமன் காட்டுக்குப் போவதற்கு முன்பு கௌஸல்யா தேவியிடம் விடை பெற்றுக்கொள்ளப் போனான். ஊருக்குப் போகும் குழந்தைக்குத் தாயார் பக்ஷணம் கட்டிக்கொடுப்பது வழக்கம் அல்லவா? பதினான்கு வருஷம் போயிருக்கவேண்டிய குழந்தைக்கு என்ன கொடுப்பது? அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. நிறம்ப ஆலோசித்துச் சொல்லுகிறாள்.

𑌯𑌂 𑌪𑌾𑌲𑌯𑌸𑌿 𑌧𑌰𑍍𑌮𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌚 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌚 ।
𑌸 𑌵𑍈 𑌰𑌾𑌘𑌵𑌶𑌾𑌰𑍍𑌦𑍂𑌲 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌤𑍁 ॥

[அயோத்யா காண்டம், 25—3]

"ஏ ராகவா! நான் உன்னை ரக்ஷிக்க ஒன்றும் செய்வதற்கில்லை. தர்மம் ஒன்று தான் இருக்கிறது. தைர்யமாகவும், ஒரே ரீதியாகவும், நியமமாகவும் எந்த தர்மத்தை நீ பாதுகாத்து வருகிறாயோ அந்தத் தர்மம் தலைகாக்கும். அது ஒன்றுதான் நான் செய்யும் அனுக்ரஹம்", என்றாள். தர்மம் நம்மால் ரக்ஷிக்கப்பட்டுப் பின்பு அது நம்மை ரக்ஷிக்கிறது. ராமனுக்கு எந்தத் தருமம் பாதுகாவலாக இருந்ததோ அந்தத் தர்மந்தான் ஈச்வரனுடைய அகண்ட ராஜ்யத்தில் செல்லக்கூடியது. நாம் வழக்கமாக, குழந்தை, தகப்பனார், ஊர், தேசம் முதலியவைகள் சம்பந்தமாகச் செய்கின்ற காரியங்களோடு, ஆத்மாவுக்கு நிரந்தரமான இன்பத்தைத் தரும் காரியத்தைச் செய்யவேண்டும். அந்தக் காரியம் எப்படி இருக்க வேண்டும் என்பதை விசாரிப்போம்.

நாம் செய்கின்ற காரியத்தை ஈச்வரனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். ஞானத்திற்கெல்லாம் பெரிய எல்லை பரமேச்வரன். அவனுக்கு நாம் செய்யும் காரியத்தை அர்ப்பணம் செய்துவிட்டால் அந்தக் காரியம் நிரந்தரமான இன்பத்தைத் தரும். அந்தக் காரியம்

புதியதாக இராமல், பரம்பரையாகப் பெரியவர்கள் செய்து காட்டிய தாக இருந்தால், மிகவும் சுலபமாயிருக்கும். கெட்ட காரியமாக இருந்தாலும், நமது காமக்ரோதத்தின் பொருட்டுச் செய்யப்படா மல், நமது வயிற்றுக்காகச் செய்யப்படாமல், விதிகப்பட்ட ஒரு காரியமாகச் செய்யப்பட்டு, பரமேச்வரனுக்கு அர்ப்பணம் செய்யப் பட்டால், அது தர்மந்தான்.

எந்த தர்மத்தை நாம் அனுஷ்டிப்பது? பல காலமாகப் பரம் பரையாகப் பெரியவர்கள் அனுஷ்டித்துவந்த தர்மத்தில் நாம் ஊறி இருக்கிறோம். அனுபவத்தில் அவர்கள் நித்ய ஸௌக்யத்தையடைந் திருக்கிறார்கள். அந்தத் தர்மத்தை நாம் கடைப்பிடித்தால் போதும். நாமாக ஒன்றைப் புதிதாகப் பிடித்துக்கொண்டால் வீண் அலைச்சல். அது நல்லதோ கெட்டதோ என்ற சந்தேகம். ஆதலினால் முன்பே பெரியவர்களால் அனுஷ்டிக்கப்பட்டு, நமக்கென்று ஏற் பட்ட தர்மத்தைக் கைக்கொள்வதே நல்லது.

ஆகவே, விதிப்படியாக உள்ள ஒரு காரியம் வேண்டும். அது நமது வயிற்றுக்காகவோ, நமது குடும்பத்துக்காகவோ, நமது ஊருக் காகவோ, தேசத்திற்காகவோ இருக்கக்கூடாது. அது பரம்பரை க்ரமமாக வந்ததாக இருக்கவேண்டும். அதை ஈச்வரார்ப்பணம் செய்யவேண்டும். அதைக் தைரியத்துடன் நியமமாகச் செய்து வர வேண்டும். அதுதான் தர்மம். அதுதான் எப்பொழுதும் ஸௌக் கியத்தைக் கொடுக்கும்.

நாம் பெற்றிருக்கின்ற மனம், வாக்கு, சரீரம் என்ற மூன்று கரணங்களாலும் செய்யும் செயல்கள் எல்லாம் தர்மங்களாக இருக்க வேண்டும். நம்முடைய பணங்களை எல்லாம் தர்மமாகிய நோட் டாக மாற்றிக் கொள்ளவேண்டும். எல்லாவிதச் சக்திகளையும் அந்தத் தர்மத்திலே உபயோகிக்க வேண்டும். அப்படிச் செய்யும் தர்மம் எந்தக் காலத்திலும், எந்த இடத்திலும் செல்லும். கௌஸல்யா தேவி ராமனுக்குப் பாதுகாப்பாகச் சொன்னது அதுதான். ராம னுக்கு வந்த ஆபத்து மிகப் பெரியவை. அவற்றையெல்லாம் அந்தத் தர்மத்தால் தான் கடந்தான்.

மனிதன் எப்பொழுதும் மேற்போவதற்குரிய காரியங்களைச் செய்யவேண்டும். பிராணிகளில் மனிதனைத்தவிர மற்றவைகளெல்

லாம் குறுக்கே வளர்ந்தவை. அவைகளைத் திர்யக்பிராணிகளென் பார்கள். மனிதன்தான் நேரே வளர்பவன். அவனுடைய ரூபம் அவன் உயர்ந்தவன் என்பதைக் காட்டுகின்றது. அவன் தர்மமார்க் கத்தில் இருந்தால் பிராணிகள்கூட அவனை ஆதரிக்கும். அதர்ம மார்க்கத்தில் நடந்தால் ஸஹோதரன்கூட விலகிவிடுவான், என் பதை ராமாயண கதையிலேயே தெரிந்துகொள்ளலாம். இதை மேலேவரும் ச்லோகம் நன்றாய் வெளிப்படுத்துகிறது.

யாந்தி ந்யாயப்ரவ்ருத்தஸ்ய திர்யஞ்சோபி ஸஹாயதாம் ।
அபந்தாநம் து கச்சந்தம் ஸோதரோபி விமுஞ்சதி ॥

(அநர்கராகவ நாடகம்—1-4)

ராமன் தர்மமார்க்கத்தின் வழி நடந்ததால் மிருகங்களாகிய குரங்கு கள்கூட அவருக்கு உதவி செய்தன. ராவணன் அதர்மத்தின் வழி நடந்ததால் தம்பியும் அவனை விட்டு விலகினன். (ராவணன் தன் சொந்த ராஜ்யத்தில் பலவகை சேனைகளோடு இருந்தும் ரக்ஷிக்கப் படவில்லை.) தர்மவானுக்கு எந்த இடத்திலும் ஸௌக்கியம் உண்டு.

ஆதலால், அந்தத் தர்மமே நலைகாக்கும். நம்முடைய காமக் குரோதம் முதலியவற்றின் பொருட்டும், ஜீவனத்தின் பொருட்டும் அல்லாமல் அதிகப்படியாக உள்ளதும், பரம்பரையாக அனுஷ்டிக் கப்படுவதும் ஆகிய தர்மத்தை தைர்யமாகவும் நியமத்துடனும் நாம் செய்துவந்தால், அது எப்பொழுதும் ஸௌக்கியத்தைக்கொடுக்கும்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸரஸ்வதி பூஜை.



ப்ரசுரம் 10

புரட்டாசிமீ 24உ, வெள்ளிக்கிழமை
10—10—1947

## வேத தர்ம சாஸ்த்ரபரிபாலன ஸபை,

( Regd. )

கும்பகோணம்.

( விலை அணா ஒன்று )

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸரஸ்வதி பூஜை.



நவராத்திரியில் மஹா நவமியன்று ஸ்ரீ ஸரஸ்வதி பூஜை செய்கிறோம். ஸ்ரீ மஹாஸரஸ்வதி பரமசிவனுடைய ஸஹோதரி. மஹா விஷ்ணுவின் ஸோதரி பார்வதி தேவி. பரமசிவனுக்கு ஜடையும், சந்த்ரகலையும், முக்கண்ணும், சுத்தஸ்படிக ஸ்வரூபமும் வேதத்தில் சொல்லப்பட்டுள்ளன. ஞானத்தைக் கொடுக்கும் பரமசிவனுடைய தக்ஷிணாமூர்த்தி அவஸரத்தில் கையில் புஸ்தகமும் கூறப்பட்டுள்ளது. அந்த ஸதாசிவ மூர்த்தியே ஸர்வ வித்யைகளுக்கும் ஈசானன், அல்லது ப்ரபு, என்று வேதம் கூறுகின்றது. இவ்விதம் மேற்கூறப்பட்டுள்ள ஸகல லக்ஷணங்களும் ஸரஸ்வதியிடம் பொருந்தியுள்ளது. புஸ்தகம், ஸ்படிகமாலை, வெண்ணிறம், சந்த்ரகலை, ஜடை, முக்கண், ஞானானுக்ரஹம் இவைகளெல்லாம் ஈசனுக்கும் ஸரஸ்வதிக்கும் பொதுவானவை. கலக்கத்தைக் கொடுக்கும் காமமே தெளிவைக்கொடுக்கும் ஞானத்திற்கு இடையூறு. காமனை எரிக்கும் மூன்றாம் கண் ஞானத்திற்குத் துணையாக நிற்கிறது. ஸூர்யனுடைய பிம்பம் ஒளியைக் கொடுப்பினும் தாபத்தை வ்ருத்திசெய்கின்றது. சந்த்ரகலையோ, ஒளியையும் கொடுத்து தாப சாந்தியையும் கொடுக்கின்றது. அதிலும் பிறைச் சந்திரன் வரவர ஞான வளர்ச்சிக்கு அறிகுறியாக நிற்கின்றது. ஸ்படிகம் களங்கமில்லாத் தன்மையை அறிவிக்கின்றது.

ஆதலின், இந்த லக்ஷணங்களெல்லாம் வித்யாபதியான ஈசானனுக்கும், வித்யாஸ்வரூபிணியான ஸரஸ்வதி தேவிக்கும் ஒன்றாகப் பொருந்தியவை. த்வந்தங்களற்று, தெளிவைக் கொடுக்கும் வாணி தேவிக்கு "சாரதா" என்ற மற்றொரு பெயரும் உண்டு. தென்னாட்டில் "நமரேஷு காஞ்சீ" என்னும் ஸ்ரீ காஞ்சிமாநகரத்தில் காமகோடிபீடம் இருப்பதுபோல்; வடநாட்டில் பாரததேவிக்கு முகமண்டலத்தைப் போலிருக்கும் வெண்மையான காஷ்மீர மண்டலத்தில் ஸ்ரீ சாரதாபீடமும் ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீ காஞ்சியில் காமகோடிபீடத்தைச் சார்ந்த ஸ்ரீ மடத்திற்கும் சாரதா மடம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

சரத்காலத்தில் ஸ்ரீ பாரதபூமியே நிர்த்வந்தமாயும், சாந்தமாயும், ப்ரகாசமுமாயும் விளங்குகின்றாள். பங்குனி, சித்திரை மாதங்களில் நம் நாட்டில் உள்ள உஷ்ணத்தை விட பதின்மடங்கு அதிகமுள்ள தாபம் டில்லி, காசி, ப்ரயாகை முதலிய இடங்களில் காணப்படும். அவ்வடநாட்டுப் ப்ரதேசங்களில் மார்கழி மாதம் நம் தென்னாட்டை விட பதின்மடங்கு அதிகமான குளிர்கொண்டிருக்கும். வைகாசி, ஆனி மாதங்களில் விந்த்ய பர்வதத்தையுடைய மத்ய மாகாணத்திலும், ஸஹ்ய பர்வதத்தையுடைய குடகு மலையாள ப்ராந்தங்களிலும் ஓரே இடைவிடா மழை பொழிந்துகொண்டு இருக்கும். சரத்ருதுவின் ஆரம்பமான ஆச்வயுஜ சுக்லபக்ஷத்திலோ காஷ்மீரம், ஹஸ்திநாபுரம், காசி, கல்கத்தா, காஞ்சி, குடகு, கன்யாகுமரி முதலிய பாரதகண்டத்திலுள்ள ஸகல ப்ராந்தங்களிலும் ஒரு நாட்டிற்கும் மற்ற நாட்டிற்கும் பேதமற்று, அபேத நிலையில் சீதோஷ்ணங்கள் என்னும் த்வந்தங்கள் விலகி, எல்லா நாடும் சமரஸமாய், வெண்ணிறமான மேகங்களும், சாந்தமான ஸூர்ய ப்ரகாசமும், அஸ்தமித்தவுடன் சரத்கால சந்த்ரனுடைய நிலவும் நிலவி உலகமே வித்யாதிதேவதையான தெளிவான ஸ்வரூபமாக விளங்குகின்றது.

வெளியுலகம் தன்மயமாகும்பொழுது, உள்ளத்தையும் தன்மயமாக்கின், உள்ளும் புறமும் ஒன்றாகி, ஸுலபமான அநுக்ரஹ சித்திபெறலாம். உதாரணமாக, நம் நாட்டின் பெரியோர்கள் எல்லோரும் காலையில் எழுந்தவுடன் 'ஹரி நாராயணா' என்ற ஸ்மரணத்தையும், ஸந்த்யாகாலத்தில் நாராயணனின் ஆலயங்களிலெல்லாம் கவாட கடனம் பண்ணியிருக்க, சிவாலயங்களிலும் தெருத் திண்ணைகளிலும் பஸ்மதாரிகளாய் விசேஷமாக சிவஸ்மரணத்தையும் செய்வதைக் கண்டிருக்கிறோம். பரமசிவன் ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்னும் அவஸரத்தில், ஸம்ஹாரம் என்னும் பதத்திற்கு நாசம் என்னும் பொருள் கொள்ளாமல், அநாதியான ப்ரபஞ்சம் தனது காரண ஸ்வரூபத்தில் ஒடுங்குமிடம், என்னும் வேதப்பொருள் கொள்ளும் பொழுது, ஒவ்வொரு ப்ராணியின் தூக்கத்தில் எல்லா இந்த்ரிய சக்திகளும் தவநிலையில் ஒடுங்குவதைப் போல், ப்ரபஞ்சத்தின் முடிவில் ஸகல சராசரங்களும் சிவஸ்வரூபத்தில் அடங்கி ஒடுங்கி நிற்கின்றன. ப்ரபஞ்சத்தின் முடிவைப்போல ஒவ்வொரு நாள்

பசலின் முடிவிலும் தாபம் ஒடுங்குகிறது; சப்தம் அடங்குகிறது; ஆனினங்களும், பறவைகளும் தத்தம் பட்டிகளிலும், கூடுகளிலும் அடங்குகின்றன. இந்தக் காலமே சிவஸ்வரூபத்தின் அதிகார காலம். ஊரெல்லாம் பறக்கும் உள்ளமென்னும் பறவையும் ஒடுங்கிச சாந்த நிலையை அடையவேண்டுமென்னும் பேரானந்தஅவா கொண்டவர்கள் இயற்கையடங்கும்போது தங்கள் உள்ளத்தையும் தம் நிலையாகிய சிவனிடத்தில் அடக்க எண்ணங் கொள்ளல், ஸகஜமாயும் ஸுலபமாயும் ஸபலமாகிறது. இதுவே ஸந்த்யாகாலத்தில் பெரியோர்கள் சிவஸ்வரூபத்தில் லயிப்பதற்குக் காரணம். கீழ்காற்று அடிக்கும் போது கடலில் கப்பலோட்டும் மாலுமி மேற்றிசை நோக்கிப் புறப் படுவது ஸஹஜமும் ஸுலபமுமன்றோ! அதுபோல உலகமெல்லாம் ஸமநிலையும், வெண்ணிறமும், சாந்தமும், தெளிவும் அடையும் பொழுது இக் குணங்களை உருவெடுத்து வந்த ஸ்ரீ ஸரஸ்வதிதேவி யின் ஆராதனத்தைச் செய்து ஸகல பக்தகோடிகளும் ஞானமும் தெளிவும் அடைவது இயற்கையாகும்.

## ஸ்ரீ ஸரஸ்வதியைப் பூஜிக்கவேண்டிய க்ரமம்.

ஆச்வயுஜ மாஸத்து சுக்லபக்ஷத்தில் (புரட்டாசி மாதம் அமா வாசைக்குப் பின்வரும் வளர் பிறை) வரும் மூல நக்ஷத்திரத்தன்று பீடத்தில் வெண்பட்டைப் பரப்பி, அதன்மேல் வீட்டிலுள்ள எல் லாப் புஸ்தகங்களையும் புஸ்தக மண்டலாகாரமாக ஸ்தாபித்து, அந் தப் புஸ்தக மண்டலத்தில் ஸ்ரீ ஸரஸ்வதி தேவியை ஆவாஹனம் செய்யவேண்டும். ஆவாஹனத்திற்கு முன் ஹ்ருதயத்தில் ஸரஸ்வ தியை த்யானம் செய்துகொண்டு, அந்தத் த்யானமூர்த்தியை சிரசு பர்யந்தம் ஏற்றிவைத்து, அந்த மூர்த்தியே தேஜோமயமாகியதாக த்யானித்து, அந்த தேஜஸ் சுவாசத்தின் வழியாக வெளியில் வரு வதாகநினைத்து, கையில் புஷ்பாக்ஷதைகளை எடுத்துக்கொண்டு, அந்த புஷ்பாக்ஷதாஞ்சலியுடன் இந்த தேஜோமயமான தேவியை மேற்சொன்ன புஸ்தக மண்டலத்தில் ஆவாஹனம் செய்யவேண் டியது. முதலில் ஹ்ருதயத்தில் த்யானிக்கும்பொழுது கீழ்க் கண்ட ச்லோகங்களின் அர்த்தப்படி த்யானம் செய்யவேண்டும்.

நமஸ்க்ருத்ய ஜகத்வந்த்யாம் ஶாரதாம் விஶதப்ரபாம் ।
ஶ்ரிதவத்ஸலாம் தேவீம் த்ர்யம்பகீம் ஶஶிபூஷணாம் ॥

(வ்ரதசூடாமணி)

வெண்டாமரை மலரில் அமர்ந்து, முக்கண்ணோடும், சந்த்ரகலையோடும், வெண்மையான காந்தியுடன் விளங்கும் சாரதா தேவியை நமஸ்கரித்துப் பூஜிக்கவேண்டும்.

𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌸𑌨𑌸𑌂𑌰𑍂𑌢𑌾𑌂 𑌤𑌦𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑍇𑌨 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌮𑍍 ।
𑌸𑌿𑌤𑍇𑌨 𑌦𑌰𑍍𑌪𑌣𑌾𑌭𑍇𑌨 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌪𑌰𑌿𑌭𑍂𑌷𑌿𑌤𑌾𑌮𑍍 ॥
𑌶𑍁𑌭𑍍𑌰𑌸𑍍𑌫𑌾𑌟𑌿𑌕𑌕𑌾𑌂 𑌦𑍇𑌵𑍀𑌂 𑌶𑌰𑌦𑌿𑌨𑍍𑌦𑍁𑌨𑌿𑌭𑌾𑌨𑌨𑌾𑌮𑍍 ॥

(கல்பமஞ்சரி)

ஓங்காராஸனத்தில் ஆரோஹணித்து ஓங்காரத்தின், பொருளை ஆகி நின்று, வெண்மையாகவும், கண்ணாடியின் ஸ்வச்சம்போன்ற ஆடையால் அலங்கரிக்கப்பட்டு, சரத்கால சந்த்ரனுக்கு ஒப்பான முகமண்டலத்தோடு நாதப்ரஹ்மமே உருவெடுத்த ஸ்ரீ ஸரஸ்வதி தேவியை த்யானித்துப் பிறகு கீழ்க்கண்ட ச்லோகத்தினால் ஆவாஹனம் செய்யவேண்டும.

𑌅𑌤𑍍𑌰𑌾𑌗𑌚𑍍𑌛 𑌜𑌗𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑍇 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑍈𑌕𑌪𑍂𑌜𑌿𑌤𑍇 ।
𑌮𑌯𑌾𑌕𑍃𑌤𑌾𑌮𑌿𑌮𑌾𑌂 𑌪𑍂𑌜𑌾𑌂 𑌸𑌂𑌗𑍃𑌹𑌾𑌣 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑌿 ॥

"இப்புஸ்தகமண்டலத்தில் தாங்கள் வீற்றிருந்து ஸாந்நித்யத்தை அளிக்கவேண்டும். உலகமெல்லாம் பூஜிக்கும் ஸரஸ்வதி தேவியே நான் செய்யும் இச் சிறு பூஜையை அங்கீகரித்துக் கொள்ளவேண்டும்", என்று ஆவாஹனம் செய்யவேண்டும். மூல நக்ஷத்திரத்தன்று இவ்விதம் ஆவாஹனம் செய்து, லகுபூஜை செய்துகொண்டு, பூர்வாஷாட (பூராடம்) நக்ஷத்திரத்தன்றும் ஸாமான்யமாக பூஜை செய்து, உத்தராஷாடா (உத்தராடம்) நக்ஷத்ரங்கூடிய மஹாநவமியன்று விசேஷமான மஹாநைவேத்யத்துடன் ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனீயம், மதுபர்க்கம், பஞ்சாம்ருத ஸ்நானம், வஸ்த்ர யுக்மம் (இரு வெண்பட்டுகள்), உபவீதம், ஆபரணம், குங்குமம், மை, சந்தனம், அக்ஷதை, புஷ்பமாலை, தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலம், கற்பூரம், ஹாரத்தி, புஷ்பாஞ்சலி, ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், இவ்வுபசாரங்களை கல்பத்தில் சொல்லப்பட்ட ச்லோகங்களைக் கொண்டு செய்து, கடைசியில் ப்ரார்த்தனை செய்யவேண்டியது. கல்பத்தில் சொல்லப்பட்ட ஸர்வாங்கபூஜை, அஷ்டோத்தர அர்ச்சனைகளுக்கு முன் (1) ஸரஸ்வத்யை நமஃ (2) பாரத்யை நமஃ

(3) வாக்தேவதாயை நம: (4) மாத்ருகாயை நம: (5) ஹம்ஸாஸனாயை நம: (6) சதுர்முக ப்ரியாயை நம: (7) வேதசாஸ்த்ரார்த்த தத்வக்ஞாயை நம: (8) ஸகல வித்யாதி தேவதாயை நம: என்ற எட்டு நாமாக்களைக் கொண்டு முறையே எருக்கு, ஜண்பகம், புன்னை, நந்த்யாவட்டை, பாதிரி, கண்டங்கத்ரி, அரளி, தும்பை, இவ்வெட்டு புஷ்பங்களை ஸமர்ப்பிக்கவேண்டும். கடைசியில் ப்ரார்த்தனை செய்யும் பொழுது,

𑌦𑍋𑌰𑍍𑌭𑌿𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑌿𑌃 𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌮𑌣𑌿𑌮𑌯𑍀 𑌮𑌕𑍍𑌷𑌮𑌾𑌲𑌾𑌂
𑌦𑌧𑌾𑌨𑌾 𑌹𑌸𑍍𑌤𑍇𑌨𑍈𑌕𑍇𑌨 𑌪𑌦𑍍𑌮𑌂 𑌸𑌿𑌤𑌮𑌪𑌿 𑌚 𑌶𑍁𑌕𑌂
𑌪𑍁𑌸𑍍𑌤𑌕𑌂 𑌚𑌾𑌪𑌰𑍇𑌣 । 𑌭𑌾𑌸𑌾 𑌕𑍁𑌨𑍍𑌦𑍇𑌨𑍍𑌦𑍁𑌶𑌙𑍍𑌖𑌸𑍍𑌫𑌟𑌿𑌕
𑌮𑌣𑌿𑌨𑌿𑌭𑌾 𑌭𑌾𑌸𑌮𑌾𑌨𑌾 𑌸𑌮𑌾𑌨𑌾 𑌸𑌾 𑌮𑍇 𑌵𑌾𑌗𑍍𑌦𑍇𑌵𑌤𑍇𑌯𑌂
𑌨𑌿𑌵𑌸𑌤𑍁 𑌵𑌦𑌨𑍇 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌸𑍁𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾 ॥

இந்த ச்லோகத்தையும், மற்றும் கல்பத்திலுள்ள ச்லோகங்களையும் சொல்லவேண்டும்.

"ஸ்படிகமாலையும், புஸ்தகமும், வெண்தாமரைப் பூவும், கிளியும் நான்கு கைகளிலும் தரித்து, குந்த புஷ்பம், சந்த்ரன், சங்கம், ஸ்படிகமணி இவைகளை ஒத்த பரிசுத்தமான காந்தியுடன் விளங்கும் ஸரஸ்வதி எனது முகத்தில ஸர்வகாலத்திலும் வசித்துக் கொண்டு இருப்பாளாக." (சில த்யானங்களில் வெண்தாமரைக்குப் பதிலாக வீணையும் உண்டு.)

𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑌸𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑍁 𑌰𑌮𑌤𑍇 𑌯𑌾 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 ।
𑌸𑌾 𑌦𑍇𑌵𑍀 𑌕𑍃𑌪𑌯𑌾 𑌮𑌹𑍍𑌯𑌂 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌕𑌰𑍋𑌤𑍁 𑌚 ॥

" எந்த ஸரஸ்வதி 14-வித்தைகளில் ஆனந்தித்துக்கொண்டு இருக்கிறளோ அந்தத் தேவி எனக்கு க்ருபையோடு வாக்ஸித்தியைத் தந்தருள்வாளாக."

பதினுன்கு வித்தைகளாவன:— வேதம் நான்கும், ஆகமம் ஆறும், [சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்ப ஸூத்ரம்] உபாங்கம் நான்கும் [பதினெண்புராணங்கள், ந்யாய சாஸ்த்ரம், மீமாம்ஸா சாஸ்த்ரம், தர்மசாஸ்த்ரம்].

ஒரு ரூபமில்லாத பரமாத்மா இவ்விதம் தெய்வீக உருவங்களைக் கொள்வது அடியார்களின் மனதில் த்யானநாலத்தில் குடிகொள்வதற்காகத் தான். உருக்கு நெய் சீதளத்தால் வெண்ணிறத்தையும், கெட்டித்தன்மையையும் அடைவதுபோல, உருவமில்லா பரம்பொருள் அடியார்களின் அன்பின் குளிர்ந்த தன்மையால் வெண்ணிறத்தையும், உருவத்தையும் அடைகிறது. மற்றும் 'அ'காரமுதல் 'க்ஷ'காரம் வரையில் உள்ள 51 எழுத்துக்களின் நாதங்கள் எனப்படும் ஒலிகளை ஸ்ரீ ஸரஸ்வதிதேவியின் உருவமாய் அமைந்து இருக்கின்றன, என்று ஹ்ருதயத்தில் த்யானம் செய்து கொண்டு பூஜிக்கவேண்டும்.

இவ்விதம் மஹாநவமியில் பூஜைசெய்து, அன்னபலியிட்டு, ச்ரவண நக்ஷத்திரத்தன்று தேவியை யதாஸ்தானம் செய்து, படிக்க ஆரம்பிக்கவேண்டும். மூலநக்ஷத்திர முதல் உத்திராட நக்ஷத்திரம் முடிய மௌனமாக இருந்து, ச்ரவண நக்ஷத்திரத்தில் படிப்பு ஆரம்பித்தால், நிறைந்த வாக்ஸித்தி கிடைக்கும். அறிவின் பயனை அடைவார்.

விஜயவாடீ கஜயகாடீ வாஷுகாஜாகுாகூஷஙஷஷஹஷவாடீ ।
காஜாகூஷி வகூயாகூஃ கஷிதவிவஷீ விஷாவஷி வெலஷீ ॥

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸாமான்ய தர்மங்கள்



ப்ரசுரம் 11

ஸர்வஜித்ஞு
ஐப்பசிமீ 1௳, வெள்ளிக்கிழமை.
17—10—1947


வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,
( Regd. )
கும்பகோணம்.


( விலை அணா ஒன்று )

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸாமான்ய தர்மங்கள்.



எல்லாருக்கும் பொதுவான தர்மங்கள் இன்னவை என்பது மனுதர்மசாஸ்த்ரத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌸𑍍𑌤𑍇𑌯𑌂 𑌶𑍌𑌚𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥

[மனுஸ்ம்ருதி]

அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம், [திருடாமை], சௌசம் [சுத்தி] இந்த்ரிய நிக்ரஹம், இந்த ஐந்தும் மிகவும் முக்கியமானவை. வேதத்தில் மாத்ருபக்தி, பித்ருபக்தி, குருபக்தி, தேவபக்தி முதலியவைகளும் ஸாமான்ய தர்மங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த ஐந்தையும்பற்றி யோஜிக்கலாம்:—

1. அஹிம்ஸை:- அஹிம்ஸை என்பது எல்லாருக்கும் வேண்டியது. ஓர் எறும்பைக்கூட நாம் கொல்லக்கூடாது. யாருடைய சரீரத்துக்கும் ஒரு கஷ்டத்தையும் உண்டுபண்ணக் கூடாது. அது தான் அஹிம்ஸை. இந்த அஹிம்ஸையை யோகஸாதனமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

யோகம் என்பது என்ன? மனதை நிறுத்துதல்தான் யோகம்.

𑌯𑍋𑌗𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌰𑍋𑌧𑌃 ॥

என்று யோகசாஸ்த்ரம் சொல்லுகிறது.

மனதில் ஆசையுண்டாகிறது. பல விஷயங்களை அது நினைக்கிறது. அதனால் அனேகவிதமான விகாரங்கள் உண்டாகின்றன. நமக்கு மனதினால்தான் எல்லாவிதமான கஷ்டங்களும் உண்டாகின்றன.

𑌮𑌨 𑌏𑌵 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 ॥

என்று சொல்லியிருக்கிறது. பந்தத்துக்கும் மோக்ஷத்துக்கும் மனது தான் காரணம், என்பது தாத்பர்யம். நாம் நமது மனம் எப்படி இருக்கவேண்டுமென்று நினைக்கிறோமோ அப்படி அது இருக்கிறதில்லை. நாம் ஒரு வஸ்துவை நினை, என்றால் அது வேறு எங்கே

யாவது போய் நிற்கிறது. ஒன்றையாவது நினைக்காமலிரு, என்றால் அது முடியவே முடியாது. பேசாமல் இரு, என்றால் வாய் பேசாமல் இருக்கும். கண்ணைப் பார்க்காதே என்றால் அது பார்க்காமலிருக்கும். மனதை நினையாமலிரு என்றால் அப்படி இருப்பதில்லை. மனது நம்முடைய ஸ்வாதீனத்தில் இல்லை. நமக்கு மனது வசப்படவில்லை. நமக்கு உண்மையில் மனது ஸ்வாதீனமாக இருந்தால் நம்முடைய இஷ்டப்படி அது நடக்கவேண்டும். நினைக்காதே என்றால் நினைக்காமல் இருக்கவேண்டும். ஆனால் நாம் எதை நினை என்கிறோமோ அதை விட்டுவிட்டு விபரீதமான ஒன்றைத்தான் அது நினைக்கிறது. பைத்யம் பிடித்தவன் மௌனமாக இருப்பதில்லை; வாயினால் எதையாவது பேத்திக்கொண்டே இருப்பான். அவன் வாயை அடக்க முடிவதில்லை அதுபோல நாம் மனதை அடக்க முடியவில்லை. நாம் மனதினால் பைத்தியமாக இருக்கிறோம். நமக்குப் புத்தி ஸ்வாதீனம் இருந்தால் நாம் சொன்னபடி அது கேட்கவேண்டும். நினை என்றால் நினைக்க வேண்டும். நில் என்றால் நிற்கவேண்டும். அப்பொழுதுதான் அது நாம் சொன்னதைக் கேட்பது ஆகும். நமக்கு எங்காவது வலி உண்டானால் மனதுக்குத் தெரிகிறது. அப்பொழுது வலிக்கிறதென்று நினைக்காதே என்றால் அது கேட்கவேண்டும். அது புத்திஸ்வாதீனம். புத்தி ஸ்வாதீனமானால் கஷ்டமில்லை என்று நினைக்கமுடியும். புலி ஒன்று பயமுறுத்தினால் பயமுறுத்தாதது போல் இரு என்றால் மனது இருக்கும். அழு என்றால் அழும். அழாதே என்றால் அழாது. அழுவதற்குக் காரணமில்லாத பொழுது கூட இப்பொழுது நமது மனது அழுகிறது. அப்பொழுது அழுகிறதற்குக் காரணம் இருந்தாலும் அழாதே என்றால் அழாமல் இருக்கும். இவ்வாறு இருப்பது 'நிரோதம்' எனப்படும். அப்பொழுது கோபிக்காதே என்றால் அவ்வாறு இருக்கும்.

இப்பொழுது நமக்கு வாய்கூட முழுவதும் கட்டுப்படுவதில்லை. எதையாவது கன்னா பின்னாவென்று பேசிவிட்டு, "இப்படிப் பேசி விட்டோமே!" என்று பின்பு வருத்தப்படுகிறோம். பைத்யத்துக்கும் நமக்கும் கொஞ்சந்தான் வித்யாஸம் இருக்கிறது. பைத்தியம் கூட, "என்னமோ சொல்லுகிறேன்," என்று சில ஸமயங்களில் சொல்லுவது உண்டு. திடீரென்று பயமடைகிறோம். கோபம் கொள்கிறோம். இவற்றையெல்லாம் போக்குவதற்கு மனதையடக்க வேண்டும்.

இவ்வாறு மனது அடங்கி நிற்பதைத் தைலதாரை போன்றது என்பார்கள். அவிச்சின்னஸந்தானமாகப் பார்க்கவேண்டும். மனது ஸ்வாதீனப்பட்டுவிட்டால் அது ஈச்வரனைப் பார்ப்பதை விட மேலானது; ஈச்வரனைப் பார்ப்பதால் ஆனந்தம் உண்டாகிறது. அந்த ஆனந்தத்தில் இரு என்றால் மனது இருந்துவருகிறது. ஸ்வாமியாகவே இருந்துவிடு என்றால் இருந்துவிடும். இன்னமும் எது சொன்னாலும் கேட்கும். அதுதான் யோகம்.

நமக்கு எதை நினைத்தால் ஸௌக்யம் உண்டாகுமோ அதை நினைக்காமல் மற்றவற்றை நமது மனது இப்பொழுது நினைக்கிறது. என்ன பண்ணினால் இந்த மனது ஸ்வாதீனத்துக்கு வரும்? கொஞ்சம் கோபித்துக்கொள் என்றால் கோபித்துக்கொள்ள வேண்டும்; கூடாது என்றால் சும்மா இருக்கவேண்டும். இதற்கு ஒரு வழி தேடவேண்டும். அதையும் இறப்பதற்குள் தேடவேண்டும்.

தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி । [புருஷஸூக்தம்]

என்று வேதம் சொல்லுகிறது.

ஶக்நோதீஹைவ ய: ஸோடும் ப்ராக்சரீர விமோக்ஷணாத் ।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ॥

[கீதை 5 — 23]

காமக்ரோதங்கள் வருவதற்கு ஹேதுக்கள் இருக்கையில், அந்த வேகத்தை இந்த ஜன்மத்திலே அடக்கப் ப்ரயத்னம் செய்யவேண்டும். அப்படிச் செய்கிறவன்தான் யுக்தன். யுக்தன் என்றால் யோகத்தோடு கூடியவன் என்பது அர்த்தம். யோகங்கள் எல்லாம் ரிஷிகளுக்கு மாத்திரம் அல்ல. மருந்து யாருக்கு வேண்டும்? வியாதி உள்ளவனுக்கல்லவா வேண்டும்? மனோவ்யாதி நமக்கு இருக்கிறது. ஆகையால் நமக்குத்தான் இவை வேண்டும். மனது அடங்க வழி என்ன? இரண்டு ஸாதனங்கள் உள்ளன. பஹிரங்க ஸாதனம், அந்தரங்க ஸாதனம் என்று இரண்டு. அவற்றைப் பற்றித் தெரிந்தவர்களை நாம் கேட்கவேண்டும். மனதை அடக்கினவர்களைக் கேட்கவேண்டும். ஸ்ரீ க்ருஷ்ணபகவான் எப்பொழுதும் மனது அடங்கினவர். நமது ஆசார்யாளும் மனது அடங்கினவர்கள். சிலபேர் பிறக்கும்பொழுதே சிவப்பாக இருக்கிறார்கள்.

சீமைக்குப்போய்ச் சட்டை முதலியவைகளைப்போட்டுக்கொண்டு சில பேர் சிவப்பு ஆகிறார்கள். பிறக்கிறபொழுதே பறக்கிற பிராணிகள் இருக்கின்றன. அப்புறம் பறக்கிறவைகள் இருக்கின்றன. மீன்குட்டி பிறவியிலேயே நீந்துகிறது. நாம் கொஞ்ச நாள் கழித்து நீந்துகிறோம். இப்படிப் பிறவியிலேயே மனது கட்டுப்பட்டவர் ஈச்வரன். அவர் எப்பொழுதும் இருப்பவர். எப்பொழுதும் மனது நின்றுள்ளவர். நாம் எல்லாரும் ப்ரயத்னம் பண்ணி மனதை நிற்கச் செய்யவேண்டும். அப்படி மனதை ஸாதனங்கள் பண்ணிநிற்கச் செய்தவர்கள் வித்யாரண்யர், ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர்கள் முதலியவர்கள். இந்த இரண்டு பேரும் வழி சொல்லியிருக்கிறார்கள்.

முன்பு இரண்டு வழி என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றில் ஒன்று பஹிரங்க ஸாதனம். அதாவது, வெளியிலிருந்து உபகாரம் பண்ணுவது. தானம், தர்மம், ஸந்த்யை, ஔபாஸனம், யக்ஞம், வேதாத்யயனம், பரோபகாரம் என்பவைகளைப் போன்றவைகள் பஹிரங்க ஸாதனங்கள். இவைகளை ச்ரத்தையோடு நன்றாகப் பண்ணினால் மனது அந்தமாதிரி ஆகும்.

அந்தரங்க ஸாதனமென்பது கிட்ட இருந்து உபகாரம் பண்ணுவது. கோவில் பூஜாகாரியங்கள் ஆகவேண்டும். வண்டிக்காரன், மணியக்காரன் முதலியவர்கள் வெளியிலிருந்து ஸாதனம் ஆகிறார்கள். தீபாராதனை போட்டுக் கொடுப்பவன், நைவேத்யம் எடுத்து வைப்பவன் முதலியவர்கள் நெருங்கியவர்கள். அந்தரங்க ஸாதனங்கள் என்பவை இவர்களைப்போல் நெருங்கியவை. அவை பல. அவைகளில் ஒன்று அஹிம்ஸை. மனது சொன்னபடி கேட்க அஹிம்ஸை ஒரு ஸாதனம். மனதினால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. அது கட்டுப்படாததனால் ஒன்றும் செய்ய யோக்யதை இல்லாமலிருக்கிறது. யானை கட்டுப்படாவிட்டால் நமக்கு ஒன்றும் பிரயோஜனமில்லை. உபத்ரவந்தான் உண்டு. கட்டுப்பட்டுவிட்டால் எவ்வளவோ காரியங்களை ஸாதித்துக்கொள்ளலாம். இந்த மனது எவ்வளவோ யானை பலம் உடையது. விச்வாமித்ரர், ஹநுமான் முதலியவர்கள் மனோஜயம் பண்ணினவர்கள். அதனால் தான் அவர்களுக்கு அவ்வளவு சக்தி இருந்தது. அந்த மனதுதான் நம்மிடமும் இருக்கிறது. அது சொன்னபடி கேட்கச் செய்தால் நாமும் எது வேண்டுமானாலும் பண்ணலாம். ப்ரபஞ்சம் முழுவதும் ஒரு மனதால் ச்ருஷ்டிக்

கப்பட்டது, என்று வேதாந்தம் சொல்லுகிறது. எறும்பினுடைய சின்ன மனதுக்குக்கூட இந்தப் ப்ரபஞ்சம் போதாது.

மனது ஒரு பூதம் போன்றது. விக்ரமார்க்கன் கதையில் சொல்லப்பட்ட வேதாளத்தைப் போன்றது. வேதாளம் கட்டுப் பட்ட பின்பு எவ்வளவு காரியங்களைச் செய்ததோ அதைப்போலவே மனதும் செய்யும். அந்த மனதை நமது ஸ்வாதீனப்படுத்துவது தான் யோகமென்பது. அந்த யோகத்திற்கு அங்கம் அஹிம்ஸை மனதை வசப்படுத்தியவர்கள், அஹிம்ஸையை அனுஸரித்தோம் மனது வசப்பட்டது, என்று சொல்லுகிறார்கள்.

ஆகவே, இந்த அஹிம்ஸையானது மனுதர்மசாஸ்த்ரத்தில் ஸாமான்ய தர்மங்களுள் ஒன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது; யோக சாஸ்த்ரத்தில் யோகத்திற்கு அங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அஹிம்ஸையின் பெருமை நன்றாக விளங்குவதற்காக இவ்வளவு வாகச் சொல்லப்பட்டது.

ஒரு முக்கிய ப்ரயோஜனத்திற்காக ஒரு காரியம் செய்தால் வேறு சில ப்ரயோஜனங்களும் உண்டாகும். அவற்றிற்கு அவாந்தர ப்ரயோஜனம் என்று பெயர். மடத்திற்குப் பூஜை தர்சனம் செய்யப்போனோம்; பூஜை தர்சனத்தோடு பல சாஸ்த்ரிகளுடைய உபன்யாஸங்களைக் கேட்டோம். இவை தாமாகவே நேர்பவை. நமது உத்தேசம் இவைகள் அல்ல. அனேகம் பேர்களைப் பார்க்கிறோம். பல வித்வான்களையும் பக்தர்களையும் பார்க்கிறோம். இவை எல்லாம் உத்தேசிக்காத ப்ரயோஜனம். பூஜைதர்சனம் முக்கிய ப்ரயோஜனம். மற்றவைகளெல்லாம் அவாந்தர ப்ரயோஜனங்கள்.

அஹிம்ஸைக்கும் சில அவாந்தர ப்ரயோஜனங்கள் உண்டு. அஹிம்ஸையின் முக்கிய உத்தேசம் சித்தம் அடங்குவது. அது தான் முக்கிய ப்ரயோஜனம். அதைத் தவிர அவாந்தர ப்ரயோஜனம் வேறு கிடைக்கிறது.

அஹிம்ஸாப்ரதிஷ்டாயாம் தத்ஸந்நிதௌ வைரத்யாக:॥

[பாதஞ்சல யோகஸூத்ரம்]

என்று யோகஸூத்ரம் சொல்லுகிறது. அஹிம்ஸையை த்ரிகரணங்களாலும் ஸாதித்துவிட்டோமானால் நமக்கு எதிரில் யாவரும் சாந்தம் அடைவார்கள்.

ஒருவன் மற்றொருவனைக் கஷ்டப்படுத்த நினைக்கக் கூடாது. வாயாலும் ஒருவனுக்குக் கஷ்டத்தைத் தரும் பேச்சைப் பேசக் கூடாது. அப்படியே சரீரத்தாலும் யாவருக்கும் ஹிம்ஸையைச் செய்யக் கூடாது. ஸ்வபாவத்தில் ஒருவனுக்கும் பரஹிம்ஸை பண்ணத் தோற்றாது. ஆனால் பிறர் ஏதாவது குற்றம் செய்தால் கோபத்தினால் ஹிம்ஸை பண்ணத் தோற்றும். நம்முடைய குழந்தை கூரையில் நெருப்பு வைத்துவிட்டால் அப்பொழுது அதைக் கோபித்துக் கொள்வோமா? உடனே நெருப்பை அணைப்போம். நாளைமுதல் அப்படி நேராமல் பார்த்துக் கொள்வோம். அதைப் போலவே துன்பம் பண்ணுகிறவனிடத்திலும் நடக்கவேண்டும். குழந்தையைப் போலவே அவனை பாவிக்கவேண்டும். அதுதான் அஹிம்ஸை. அந்த அஹிம்ஸையால் சித்தவ்ருத்தி அடங்குவது முக்கிய ப்ரயோஜனம். அதைத் தவிர, அவனுக்கு எதிரில், கொலை பண்ணவேண்டும் என்று வரும் கோபம் உடையவர்கள் கூடச் சாந்தம் அடைவார்கள். அவன் இருக்கும் இடத்தில் க்ரூரமானவர்களுக்கும் மனதில் சாந்தம் உண்டாகும். அதுதான் அஹிம்ஸையின் அவாந்தரப் பிரயோஜனம். அது தானாக வரும்.

வர்ணாச்ரம தர்மங்களில், ப்ராஹ்மணவர்ணத்திற் பிறந்து ஸந்யாஸ ஆச்ரமத்தை உடையவர்கள் அஹிம்ஸையைப் பூர்ணமாக அனுஷ்டிக்க வேண்டும். ஸந்யாஸம் வாங்கிக்கொள்ளும் பொழுதே அவர்கள்,

அஹிம்ஸ்ய ஸர்வபூதாந்யந்யத்ர தீர்த்தேப்ய: ॥

(சாந்தோக்ய உபநிஷத்)

என்று ப்ரதிக்ஞை செய்து கொள்கிறார்கள். ஸகல ப்ராணிகளுக்கும் என்னால் பயமில்லை, என்பது அதன் தாத்பர்யம். க்ரஹஸ்தன் ஸ்வதர்ம விஷயத்தைத் தவிர மற்றவற்றில் அஹிம்ஸையை அனுஷ்டிக்க வேண்டும். வேதத்தில் சொல்லப்பட்ட க்ரியைகளில் ஹிம்ஸை இருக்கலாம். ஆகலால் அந்தக்ரியைகளைத் தவிர மற்றவற்றில் அவன் அஹிம்ஸானுஷ்டானம் செய்யவேண்டும். கௌதம தர்ம ஸூத்ரத்திலும், சாந்தோக்ய உபநிஷத்திலும் இந்த அஹிம்ஸையைப் பற்றிய விஷயங்கள் சொல்லப்படுகின்றன. வேத விஹித கர்மாக்களில் தவிர மற்றவற்றில் க்ரஹஸ்தன் அஹிம்ஸையைக் கைக்

கொள்ளவேண்டும். பூர்ணமாக அநுஷ்டானம் செய்யவேண்டியது ஸந்யாஸியின் கடமை. அவன் சமையல் பண்ணக்கூடாது; இலை பறிக்கக் கூடாது; அதைப் போன்ற வேறு காரியங்களையும் செய்யக் கூடாது.

2. ஸத்யம்:– ஸத்யத்திற்கு லக்ஷணம் (Definition) மூன்று உண்டு.

வாஙூநஸயொரெகரூவெஃ ஸதூ ॥

மனதும் வாக்கும் ஒரே விஷயத்தைச் செய்வதுதான் ஸத்யம். மனதில் உள்ளதைச் சொல்லத்தான் பகவான் நமக்கு வாக்கைக் கொடுத்திருக்கிறார். வாக்கை அஸத்யத்திற்கு உபயோகப்படுத்தினால் மாடாகப் பிறக்க வைப்பார். அஹிம்ஸையில் எப்படி க்ருஹஸ்தனுக்கு ஒரு விலக்கு இருக்கிறதோ, அப்படி ஸத்யத்திற்கும் ஒரு விலக்கு உண்டு. அஹிம்ஸையிலுள்ளது க்ருஹஸ்தனுக்கு மட்டும் தான். இது எல்லாருக்கும் உண்டு.

ஊரிலுள்ளவர்களின் தப்புக்களையெல்லாம் ஒருவன் எடுத்துச் சொல்கிறான். "அவன் அயோக்யன்; அவன் அங்கே நின்றான்; இவன் இது செய்தான்" என்று அவன் சொல்லுகிறான். அவன் சொல்லுபவை எல்லாம் நிஜமாக இருக்கலாம். அது வாக்கு மனதுகளின் ஐக்யமாக இருந்தாலும் ஸத்யம் ஆகாது.

ஸதூ ஹூதஹிதம் ஷ்ரியஃ ॥

என்று சொல்லப்பட்டிருக்கிறது. மனதிலுள்ளது வாக்கில் வரவேண்டுமென்பது பொது லக்ஷணம். எதற்காக மனதிலுள்ளதை வாக்கினால் சொல்லவேண்டும், என்பதை யோஜிப்போம். இந்தக் காரியங்கள் எல்லாம் நன்மையை உண்டாக்கவே செய்யப்படுகின்றன. ஸத்யமும் நல்லதை உண்டாக்கவேண்டும். நல்லது உண்டானால் அது ஸத்யம். கெடுதல் ஏற்பட்டால் அது ஸத்யமாகாது. ஸத்யமானது எல்லா ஜீவன்களுக்கும் க்ஷேமகரமாக இருக்கவேண்டும். காமத்தினாலும் க்ரோதத்தினாலும் ஸத்யம் வரக்கூடாது. ஒருவனுடைய குற்றத்தை எடுத்துச் சொல்லி தூஷிக்கவேண்டும், அவனுடைய பெருமையைக் குறைக்கவேண்டும், என்ற ஆசையோடு சொல்லப்படும் வார்த்தைகள் உண்மையானவைகளாக இருந்தாலும் ஸத்ய

மல்ல. ஸத்யத்தால் ஒருவனுக்குத் தாபம் உண்டாகக் கூடாது. கஷ்டம் உண்டாகக் கூடாது. நமக்காவது வேறு பிராணிக்காவது க்ஷேமத்தை உண்டாக்கவேண்டும். அப்படி உள்ள ஸத்ய வார்த்தைகளையும் சொல்லும்போது சாந்தமாகச் சொலவேண்டும். கேட்பவர்களுக்கு அவை ஹிதமாக இருக்கவேண்டும். இவை வாக்கினால் சொல்லப்படும் ஸத்யம்.

மனதினாலும் ஸத்யத்தை அனுஷ்டிக்கவேண்டும். பொய் சொல்ல நினைக்கக்கூடாது.

ஸ்நானம் பண்ணாமல், ஸ்நானம் பண்ணினவனைப்போல நடித்தல் முதலிய காரியங்கள் உடம்பால் செய்யப்படும் அஸத்யம். த்ரிகரணங்களாலும் ஸத்யமாக இருக்கவேண்டும். சித்தவ்ருத்தி நிரோதத்திற்கு அதுவும் ஒரு காரணம்.

ஸத்யத்திற்கும் ஓர் அவாந்தரப் பிரயோஜனம் உண்டு. ஸத்யத்தையே சொல்லிச் சொல்லிப் பழக்கம் பண்ணிவிட்டால் மனது ஸத்யத்தையே நினைக்கும். வாக்கு ஸத்யத்தையே சொல்லும். அப்பொழுது சொல்லப்படுபவை எல்லாம் ஸத்யமாகும். தவறி ஒன்று சொல்லப்பட்டாலும் அந்தச் சொல் ஸத்யமாகவே ஆகிவிடும். உள்ளதையே சொல்லும் வாக்கின்படியே எல்லாம் இருக்கும். தவறிச் சொன்னாலும் அப்படியே நடந்துவிடும். வார்த்தை ஸித்தியாவது ஸத்யத்தினால்தான். வாக்கிலிருந்து வந்தது உள்ளதாய்விடும் சக்திதான் சாபாநுக்ரஹசக்தி. ஸத்யம் பேசுபவர்கள் இன்றைக்குப் பூர்ணிமை என்றால் சந்திரன் அப்படியே வந்து நிற்பான். நிக்ரஹாநுக்ரஹ சக்தி உண்டாகும்.

பணத்தில் நமக்கு ஆசை இல்லை, என்று தோன்றுகிறது. அதற்கு என்ன அடையாளம்? கனவிலும் பணம் வேண்டாம், என்று நினைவிருந்தால், அந்த ஆசை இல்லாதது ஸ்திரமென்று நம்பலாம். கனவில் பணத்தை ஒருவன் கொடுத்தால், 'கொண்டுவா' என்று சொன்னால் அது தப்பு. அதைப்போலக் கனவிற்கூட ஸத்யத்தைக் கைவிடாத ஸ்திரபாவம் வேண்டும். அப்பொழுது ஸத்ய ஸித்தி உண்டாகும். நாம் சொல்வதெல்லாம் நடக்கும்.

ஸத்ய ப்ரதிஷ்டாயாம் க்ரியாபலாச்ரயத்வம் ।

 [யோகஸூத்ரம்]

இந்த அவாந்தரப்பிரயோஜனத்தை உத்தேசித்து ஸத்யத்தை அனுஷ்டிக்கக்கூடாது.

வைராக்கியம் என்று ஒரு அந்தரங்க ஸாதனம் இருக்கிறது. ஆசையில்லாமை என்பதுதான் அதன் அர்த்தம். அது மஹா பலமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுடைய அவாந்தரப் பலம் புதையலெல்லாம் கண்ணுக்குத் தெரியும் சக்தி. நான் வைராக்கியமுடையவன், எனக்குப் புதையல் தெரியவில்லையே, என்று ஒருவன் சொன்னால் அவனுடைய வைராக்கியம் எப்பேர்ப்பட்டது என்பது நன்றாகத் தெரிகிறது. புதையலை எதிர்பார்த்தால் அவன் உண்மை வைராக்கியத்தை உடையவனாகமாட்டான்.

அதைப்போலவே ஸத்யத்தினுடைய அவாந்தரப் பிரயோஜனத்தை உத்தேசித்து அதை நாம் அனுஷ்டிக்கக்கூடாது.

3. அஸ்தேயம்:— அநியாய ஆசை நமக்கு இருக்கக்கூடாது. 'அஸ்தேயம்' என்றால் திருடாமல் இருப்பது, என்று அர்த்தம். மற்றவன் ஸொத்தை ஏமாற்றிப் பெறக்கூடாது; அடித்துப் பிடுங்கக் கூடாது; எல்லாவற்றையும்விட கடிதத்தின் மூலமாகத் திருடுவது மிகவும் மோசமான காரியம்.

4. சௌசம்:— சரீரசுத்தி மன சுத்தியை உண்டாக்கும். சரீரசுத்தத்திற்கு ஏற்பட்ட காரியங்கள் தர்மசாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்பொழுது 40 அல்லது 50 வருஷகாலமாக சௌசம் நமது தேசத்தில் தவறி இருக்கிறது. இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன பதார்த்தங்களைக்கொண்டு சரீரத்தைச் சுத்தி செய்துகொள்ளவேண்டும், இன்ன இன்ன பாத்திரங்களை இன்னவிதம் சுத்தம் செய்யவேண்டும், என்ற விஷயங்கள் சாஸ்த்ரங்களிற் காணப்படுகின்றன. சுத்தம் எல்லாவிதமான கர்மாக்களுக்கும் முதலில் அவசியம். அது தவறாமல் இருக்க வேண்டும். இப்பொழுது நாம் மறந்துபோனாலும் தெரிந்துகொண்டு அநுஷ்டானம் செய்யவேண்டும். இதைக்கூட நாம் ஸரியாகச் செய்யாவிட்டால் மனதை எப்படி அடக்குவது ?

இவைகளைக் காதில் கேட்டுவிட்டுப் போவதுமட்டும் அல்லது புஸ்தகங்களில் படித்துவிட்டுப் போவதுமட்டும் ப்ரயோஜனமில்லை. கார்யத்திற் செய்யவேண்டும். நாம் க்ஷேமமாயிருக்கவேண்டுமானால்

சுத்தமாக இருக்கவேண்டும். குழந்தைகள் முதற்கொண்டு வ்ருத்தர்கள் வரையில் தங்கள தங்களுக்கென்று ஒவ்வொரு செம்பு தனித்தனியே வைத்துக்கொள்ளவேண்டும். அதைக்கொண்டே சுத்தி செய்துகொள்ளவேண்டும். தீர்த்த பாத்திரம் தனித்தனியே வைத்துக் கொள்ளவேண்டும். மற்றவன் பாத்திரத்தில் தீர்த்தம் வாங்கி குடிக்கக்கூடாது. அந்தந்தப்பாத்ரம் செய்யப்பட்ட லோஹத்திற்குத் தக்கபடிச் சொல்லப்பட்ட பதார்த்தங்களால் சுத்தி செய்யவேண்டும். வெள்ளிப் பாத்திரமென்றால் அதற்குச் சொல்லப்பட்ட வஸ்துவால் அதைச் சுத்தி செய்யவேண்டும். தாமிரம் முதலியவைகளானால் அதற்கேற்றபடி சுத்தி செய்யவேண்டும். எங்கே சாப்பிடப் போனாலும் நம்முடைய தீர்த்த பாத்திரத்தை எடுத்துக்கொண்டு போகவேண்டும். மற்றவன் பாத்திரத்தை உபயோகிக்கக் கூடாது. இப்படி எல்லா ஜாதிகளும் செய்யவேண்டும். தங்கள் தங்கள் ஜாதிக்கேற்ற காரியங்களைச் செய்வதில் சுத்தமாக யாவரும் இருக்கவேண்டும்.

5. இந்த்ரிய நிக்ரஹம்:— நம்முடைய இந்த்ரியங்களை அவைகளின் போக்கிலே விட்டுவிடக் கூடாது ஒவ்வோர் இந்த்ரியத்திற்கும் இவ்வளவுதான் ஆஹாரம் கொடுக்கவேண்டுமென்று கணக்கு வைத்துக் கொள்ளவேண்டும். அனுபவம் அந்தக் கணக்குப்படி இருக்கவேண்டும். மீறினால் அவற்றையடக்கும் சக்தி வேண்டும்.

மேற்சொன்ன ஐந்தும் ஆஸ்திக மதத்தை அனுஷ்டிப்பவர்களுக்கும் வைதிக மதத்தை உடையவர்களுக்கும் ப்ரதான தர்மங்கள் ஆகும். இவைகளை நாம் எல்லாரும் அனுஷ்டிக்க வேண்டும். இவைகள் தாம் முக்யமான ஸாமான்ய தர்மங்கள்.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# தேசாடனம் — ஒரு மாதூரகரம்.



ப்ரசுரம் 12

ஸர்வஜித்-௵

ஐப்பசி-மீ 8உ வெள்ளிக்கிழமை.

[24—10—1947]


வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

[Regd]

கும்பகோணம்.


[விலை அணா ஒன்று]

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# தேசாடனம்—ஒரு மாதுகரம்.



வேதாரண்ய ஸஞ்சாரம் செய்து, பக்ஷத்துடன் வேதாந்த வாக்ய புஷ்பங்களிலிருந்து ப்ருஹ்மானந்த மதுவைச் சேகரித்துப் பருகுவது எப்படி ஒரு பெரு மாதுகரமாயிற்றோ, அதுபோலத் தேசாடனம் ஒரு சிறு மாதுகரம்.

" देशाटनं पण्डितमित्रताच "

என்பது ஒரு பழமொழியின் பகுதி. ஒருவன் ஸாமான்யனாயிருந்த போதிலும், அவனுக்குத்தேசாடனமும், பண்டிதர்களுடைய ஸ்நேக மும் கிடைத்திருக்குமாயின், அவனுக்கு ஆழ்ந்த நோக்கமும், பகுத் தறிவும், உயர்ந்து பரவிய மனோநிலையும் ஏற்படும். தான் பண்டிதனா யிருப்பதை விட பண்டிதமித்ரனாயிருப்பது பெரும் பாக்கியம். பண்டிதர்களுக்கு சப்தஞானம், அர்த்தஞானம், பதார்த்த தத்வ விவேசனம், பண்டை காலத்துப் பெரியோர்களுடைய கலை ஞானங் களையும், மனோ நிலையையும் மறந்துபோன இக்காலத்தவருக்கு அந்நானுவித சாஸ்த்ரங்களின் பொருள்களை உணர்த்தும் திறன் ஏற்பட்டிருக்கின்றன என்றாலும்,

सर्वं वस्तु भयान्वितं

என்கிற ந்யாயப்படி, தான் பிறரைவிட அறிந்தவன் என்கிற அஹம் பாவமும், தன்னைவிட மற்றொரு பண்டிதன் மிஞ்சியவனாயிருந்தால் அப்பொழுது மத்ஸரமும், மற்றத் தொழில்களை விட இக் கல்வித் தொழிலில் அதிகமாக ஏற்பட இடமுண்டு. பண்டித மித்ரனாயிருந் தாலோ, பண்டிதர்கள் வெகு ச்ரமப்பட்டுக் கற்ற சாஸ்த்ரங்களின் முடிவுகளை எல்லாம் ச்ரமமில்லாமலேயே தான் அறியப் பெறுவ தல்லாமல், அவர்களுக்கு ஏற்படக்கூடிய அஹம்பாவம், மத்ஸரம் முதலியவைகளின் சம்பந்தமில்லாமல், தாமரையிலையைப் போலவும் இருக்கலாம். இப்பண்டித மித்ரத் தன்மையைப்போலத் தேசாடன மும் பகுத்தறிவையும், உயரிய நோக்கத்தையும் தரக்கூடியவை களில் ஒன்று.

தேசாடனம் ஒரு மாதுகரம் எனச் சொல்லப்பட்டது. ஒவ்வொரு தேசத்திலுமுள்ள மக்களின் ஆசாரங்களுள்ளும், குணங்களுள்ளும் உத்தமமானவைகளை அறிந்து கைப்பற்றி நடக்கும் நோக்கத்துடன் ஒருவன் தேசாடனம் செய்வானேயானால், மற்றத் துறைகளை விட இத்துறையில் அவன் வெகு விரைவில் மேம்பாடுடையவன் ஆவான், என்பது அனுபவத்திற் கண்டறிந்தது. நமக்குப் பழக்கமுள்ள நம் நாட்டைத் தவிர இதர நாட்டு மக்களிடம் இருப்பனவோ, இருப்பனவாகத் தோற்றுவனவோவாகும் குற்றங்களே நமக்குக் கண்முன் காணப்படுவதால், நம் நாட்டு ஆசாரமே ஏனைய எல்லாவற்றிலும் உயர்ந்ததென நாம் அஹம்பாவம் கொள்வதும், பிறரை ஏளனமாக நினைப்பதும் மாத்திரமேயன்றி, பிறரிடம் உண்மையில் நல்ல ஆசாரங்களும் குணங்களும் இருந்தாலும், அவைகளை நம்முடைய நிலைமைக்குத் தகுந்தவாறுவது ஏற்றுக் கொண்டு மேம்பாட்டையடைய இடமில்லாமல் போகின்றது. ஒவ்வொரு தேசத்திலும் மாந்தரின் நல்வாழ்க்கை என்னும் மலர்களிலுள்ள குணபாகமெனும் மதுவைச் சேகரித்து, அவைகளில் தான் ஒன்றிக்களிக்கும் தேன் வண்டு எனலாகும் தேசாடன யாத்ரீகன் இம் முறையில் ஒரு மதுகரீ.

நம் நாட்டில் மக்கள் உண்ண உட்காரும்பொழுது, தாங்கள் நீர் அருந்துவதற்குத் தங்கள் தங்கள் கலன்களைத் தனித்தனியே எடுத்துவாராது, யாரேனும் ஒருவர் எடுத்து வந்திருந்தால் அவரிடம் இரவலுக்கு நிற்பதோ, ஒரு பாத்திரத்தைக்கொண்டே முறையே எல்லோரும் நீரருந்துவதோ, அல்லது விக்கி விக்கிச் சினங்கொள்வதோ, என்னும் இவ்வலங்கோலங்களைப் பார்க்கிறோம். புண்ய பூமியான பரத கண்டத்தில் நம் தமிழ் நாட்டை அடுத்து வடக்கிலுள்ளது வடுகநாடென்னும் தெலுங்கு நாடு. நம் நாட்டு எல்லையைத் தாண்டி விட்டால் ஊண்பந்தியில் இக்கோலங்கள் தென்படா. ஒரு குழந்தையாயிருப்பினும் அது தனக்காகத் தனியான ஒரு தீர்த்த பாத்திரத்தைக் கொண்டுவந்து விடும். பெண்டிரும் அன்னரே. உண்ணுவதற்கு ஆரம்பிக்கும் முன் பந்திக்கு வர வேண்டுபவர் எல்லோரும் வந்துவிட்டனரா எனப் பார்த்துக் கொண்டு, ஒருவர் வராவிடினும் அவருக்காக எந்நேரமாயினும் காத்து, பிறகு பகவானை ஸ்மரித்து, தங்கள் இலையிலிட்ட அன்

னத்தைப் பகவானுக்கு நிவேதனம் செய்த பின்னரே அவ்வன்னத்தைத் தொடுவார்கள். குழந்தையாயினும் இந்நியமத்தை மீறாதபடி பழக்கப்பட்டிருக்கிறது. உண்ண உட்காரும்பொழுது காலையில் நீராடி உடுத்த உடுக்கையுடன் உட்காருவதில்லை; குழந்தைமுதல் வேறு மடி வஸ்த்ரங்களைக் கட்டிக்கொண்டே உட்காரும். சற்று விசேஷ வைதிகப்பற்றுள்ளவர்கள் இரண்டாம் முறை நீராடி, அன்று உலர்த்திய வஸ்த்ரத்தைக் கட்டிக்கொண்டே உண்ண உட்காருவார்கள். பகலில் கட்டிக்கொண்ட வஸ்த்ரத்தோடு இரவிலும் உண்ணார். இரண்டாயிரம் மூவாயிரம் பேரடங்கிய பந்தியாய் இருப்பினும் இந் நியம திட்டங்களில் ஒன்றேனும் குறையாமல் நடத்தப்படுகிறது. இந் நியமம் வேதியர்களிடத்தில் மாத்திரம் இல்லாமல் வைச்யர்கள், வேளாளர்கள் எனப்படும் அனேக குலத்தினரிடத்தும் காணப்படுகிறது.

அந்நாட்டு வேதியரில் பலர் வேதசாஸ்த்ரங்களைப் பூர்ணமாய் அறிந்திருப்பார்கள். அவரவர் வீட்டில் நடக்கும் சுபசோபனாதிகளில் வேதசாஸ்த்ரங்கள் அறிந்தவர்களைக்கூட்டி அவரவர்களுக்குத் தகுந்தவாறு ஸன்மானம் செய்வது வழக்கம். இதற்கு ஸதஸ்யம் என்று பெயர். முக்கியமான நகரங்களில் ப்ரதி வருஷமும் பல ஸதஸ்யங்கள் நடைபெற்று, வித்வான்களின் யோக்கியதைக்குத் தக்கவாறு ஸன்மானங்களும் செய்யப்படும்.

இவ்விதமான பழக்கங்கள் உள்ள ஒரு நாட்டவர் நம் தமிழ் நாட்டு ஆஹாரமுறையில் நடக்கும் தீர்த்தபாத்திரமில்லாமல் உட்காருவது, பதார்த்தங்களை இலையில் வைத்தவுடனே கொஞ்சங் கொஞ்சமாக வாயில் போட்டுக்கொள்வது, இன்னும் சிலர் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே கொஞ்சங் கொஞ்சமாக எழுந்து போய் விடுவது, எந்தத் தீட்டுக் கலந்தாலும் மடி சுத்தி செய்துகொள்ளாமலும், காலைக்கூட அலம்பாமலும், சாப்பிடுவதற்கு உட்கார்ந்து விடுவது முதலியவைகளைக் கண்டால் அவர்களுக்கு நம்மிடம் எவ்விதமான எண்ணம் தோன்றுமென்பதை நாமே ஊகித்துக் கொள்ளலாம். அந் நாட்டவர் பலர் நம் நாட்டிற்கு வந்து தங்களுடைய ஆசாரத்துடன் சாப்பிட சௌகர்யம் ஏற்படாத நிலைமையில் தம் நாடு செல்லும்வரை பட்டினியுடனேயே சென்றிருக்கிறார்கள். (கிருஹஸ்தனுக்கு மாத்யான்ஹிக ஸ்நானமும், தீர்த்தபாத்திரமும்

தர்மசாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டிருப்பது அந்நாட்டில் நியமமாக இன்றுவரை கைக்கொள்ளப்பட்டு வருகிறது).

தெலுங்கு நாடு தாண்டி வடக்கே செல்லின், மத்யமாகாணத்தின் தென்பாகமான மஹாராஷ்டிர தேசத்தைக்கடக்கவேண்டியிருக்கிறது. அந்த நாட்டு மக்களும் ஆஹார பந்தி சுத்தி விஷயத்தில் அநேகமாய் இவ்வளவு நியமத்துடனிருக்கிறார்கள். ஆந்திர தேசத்தைவிட அந்நாட்டிலுள்ள ஒரு விசேஷமென்னவென்றால், ஏகாதசி உபவாஸம் விசேஷமாக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஏகாதசியன்று அரிசிப்பிச்சைகூடப் போடமாட்டார்கள். ஆஷாட சுக்கில துவாதசிமுதல் கார்த்திக சுக்கில துவாதசிவரை நான்கு மாதங்களில் சாகாவ்ரதமெனும் ஒரு வ்ரதத்தையனுஷ்டித்து, ஏராளமான ப்ராஹ்மண போஜனங்கள் செய்துவைப்பார்கள். இம் மஹாராஷ்டிர ஸ்மார்த்த தேசஸ்த ஆசாரங்கள்தான் அந்த ஸம்பந்தமுள்ள மாத்வர்களிடத்திலும் (ஏகாதசி உபவாஸம், சாகா வ்ரதம் முதலியன) விசேஷமாய் இருந்துவருகின்றன. ஸாமான்யமாகப் போஜனகாலத்தில் எவ்வளவு ஆயிரம் பேர்களுக்கு அன்னமிட்டாலும், ஒவ்வொருவருக்கும் மணைபோட்டுக் கோலமிட்டே அன்னமிடுவார்கள். மாவிலே தண்ணீர் கலந்து செய்யப்பட்ட பண்டங்களைப் பத்தென்று பாவித்து, அதை மறுநாள் வைத்துக்கொள்ளமாட்டார்கள். தத்தாத்ரேயோபாஸனை, கணேசோபாஸனை, ஸத்யநாராயணோபாஸனை இவைகள் மிகுதி. சிவபூஜை பொதுவாக இவ்விடங்களிலுண்டு. துகாராம், ஸமர்த்தராமதாஸர், ஞானதேவர் முதலியோர்களையனுஸரித்த பஜனையும், பொதுவாக பண்டரிபஜனையும் அதிகம். நாகப்பூர் நகரம் வரை இம் மஹாராஷ்டிரதேசமிருக்கிறது.

நாகப்பூர் தாண்டி வடக்கே 20-மைல் சென்றால், ஹிந்துஸ்தானி தேசம் ஆரம்பமாகிறது. அத்தேசத்து ஆசாரம் தெலுங்கு, மஹாராஷ்டிர தேசங்களைப்போலல்லாமல் பல வகைகளிலும் மாறுபட்டிருக்கும். தெலுங்கு, மஹாராஷ்டிர தேசங்களில் பத்தான பதார்த்தங்களைப் பக்குவமான இடங்களை விட்டுக் கையிலோ, வண்டிகளிலோ, ரயிலிலோ வேறு இடங்களுக்கு எடுத்துப்போய்ச் சாப்பிடமாட்டார்கள். ஹிந்துஸ்தானி தேசத்திலோ, தான் அல்லது தன் குடும்பத்தார் சமைத்தாலன்றி வேறு எவர் தொடினும் உண்ணார்.

நாகப்பூருக்கு 20-மைல் வடக்கே முதல் கங்கைக்கரைவரையில் உள்ள தேசத்தில் மாம்ஸம் சாப்பிடுகிறவர்கள் நூற்றுக்கு இருபது பேருக்குக் குறைவாகவே இருப்பர். துருக்கர், கிறிஸ்துவர், ஹிந்துக்களில் மிகத் தாழ்ந்த ஜாதியினரே மாம்ஸம் சாப்பிடுவார்கள்.

பஞ்சாபி, வங்காளி இவ்விரு பாஷைகள் பேசுமிடங்களைத் தவிர ஹிந்துஸ்தானி பேசப்படும் ஹிந்துஸ்தான தேசத்தில் அநேகமாகப் பங்திபோஜனமென்பதே கிடையாது. ஒருவர் தொட்ட ரொட்டியையோ அன்னத்தையோ மற்றவர் தொடார். ஜலம் கலந்து வெந்ததைத் தொடக்கூடாதென்பதே நியமம். ப்ருஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர நான்கு வர்ணத்தோரும் இந்நியமத்தை யனுஷ்டித்து வருகிறார்கள். ஒரு பிராஹ்மணனுடைய வீட்டில் வேலை செய்யும் குடியானவர்களெனப்படும் புருஷர்களோ, ஸ்திரீகளோ அவ்வீட்டில் மிஞ்சிய அன்னத்தை உட்கொள்ளார். தர்மசாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட பரான்ன நியமம் அந்த ஹிந்துஸ்தானத்திலேயே நிலைநிற்கிறது. அதில் கான்யகுப்ஜ வகுப்பார் மிகுந்த நிஷ்டையுள்ளவர்கள். அதனால் தான் ஹிந்துஸ்தானத்திற்கு ஹிந்துஸ்தானம் என்று பெயர்போலும். தர்மசாஸ்த்ரத்தில் பரான்ன நியமம் விதிக்கப்பட்ட ஸ்தலத்தில் சில பந்துக்களை ஆத்மபந்துக்களாகக் குறிப்பிட்டு அவர்களுடன் அன்னபோஜனம் செய்தால் பரான்னநியமத்திற்கு விரோதமில்லையென்று கூறப்பட்டிருக்கிறது. அவ்வித ஆத்மபந்துக்களுடன் கூட ஹிந்துஸ்தானிகள் சாதாரணமாகச் சாப்பிடுவதில்லை. கல்யாணம் முதலிய விசேஷ சுபகாலங்களில் பழக்கமில்லாததால் வெகு அருவருப்புடன் அவர்களுடன் மாத்திரம் சாப்பிடுகிறார்கள். அப்படி நெருங்கிய பந்துக்களை, உனக்கு அவர் என்ன உறவு என்று கேட்டால், 'பாத்கானேவாலா' (சாதம் சாப்பிடக்கூடிய உறவு) என்று பதிலளிக்கிறார்கள். ஸந்யாஸம் கொண்டால்தான் பிராஹ்மண கிரஹங்களிலெல்லாம் ஜலத்தோடு வெந்த அன்னம், வியஞ்சனம் சாப்பிடலாம். நெய்யிலோ, எண்ணெயிலோ பொரித்த பதார்த்தங்களுக்கும், பாலைக் காய்ச்சிய ஆடையால் செய்யப்பட்ட பதார்த்தங்களுக்கும் இந்நியமம் கிடையாது. இப் பதார்த்தங்களை யாரும் உண்ணலாம்.

ஒரு நாள் காசியில் சுமார் ஐம்பது ஸந்யாஸிகளுக்குப் பிக்ஷை நடந்தது. தென்னாட்டுத் தமிழ்ப் பரிசாரகர்கள் சமைத்தார்கள்; பரிமாறினார்கள். ஒரு ஸந்யாஸியுடன் ஒரு ஹிந்துஸ்தானி ப்ருஹ்மசாரி சிஷ்யனும் வந்திருந்தான். அவனும் இலை போட்டுக்கொண்டான். பத்தில்லாத பதார்த்தங்களெல்லாம் எனக்குப் பரிமாறுங்கள் என்று சொன்னான். அவ்விதமே எல்லாப் பக்ஷணங்களும் பரிமாறப்பட்டன. ஸந்யாஸிகளுக்குப் பரிமாறுவதற்காக எடுத்துக் கொண்டு போகப்பட்ட வெந்த பருப்பில் ஒரு திவலை கரண்டியிலிருந்து அவனுடைய இலையில் சொட்டிவிட்டது. உடனே அவன் எல்லாப் பக்ஷணங்களையும் விட்டுவிட்டு எழுந்துவிட்டான்.

இம் மத்தியமாகாணத்தில் வடபாகம் உட்பட்ட ஹிந்துஸ்தான் தேசம் முழுவதிலும் ப்ராஹ்மண அப்ராஹ்மண விவாதமே கிடையாது. நம் நாட்டில் புதிதாகக் கிளம்பியிருக்கும் இவ்வித விவாதங்களைப் பரிகரிக்க ஜாதிவிவேகமில்லாமல் கலப்புப்பந்திபோஜனத்தை ஒரு மார்க்கமாக நவீனர்கள் நினைக்கிறார்கள். அதற்காக அடிக்கடி டீபார்டிகளையும் டின்னர் பார்டிகளையும் ஏற்படுத்துகிறார்கள். இந்த மார்க்கம் இகத்திற்குமில்லாமல் பரத்திற்குமில்லாமல் ஏமாற்றமாகவே முடிகிறது. ஆஹார நியமத்தை நிஷ்டையோடு பரிபாலிக்கிறவர்களிடத்தில்தான் இன்றைக்கும் வெள்ளைக்காரர்களுக்கோ, அப்ராஹ்மணர்களுக்கோ உண்மையான மதிப்பிருக்கின்றது. இவ்வித நிஷ்டை எவ்வளவுக்கெவ்வளவு குறைகிறதோ அந்த அளவுக்குப் பொதுமக்களுக்கு ப்ராஹ்மண பக்தியும், அதன் வழியே ஹிந்துமதத்தில் பற்றும் குறைகின்றன. ஆகையால் ஹிந்துமதத்திற்கு நஷ்டம் கலப்புப் போஜனத்தினால்தான். ப்ராஹ்மண அப்ராஹ்மண விவாதம் எல்லோரும் பரான்ன நியமத்தையே கைக்கொண்டிருக்கும் ஹிந்துஸ்தானி தேசத்தில் இல்லாதிருப்பதே இதற்கு அத்தாக்ஷி. இந்த விவாதம் என்னும் வியாதிக்குத் தர்மசாஸ்த்ரத்தை மீறிச் செய்யப்படும் கலப்பு போஜனமே மருந்து என்பது பெரும் ஏமாற்றம். ஹிந்து தர்மசாஸ்த்ரத்தை அநுஸரித்து, ஆசாரம் என்னும் கடும் பத்தியத்துடன் கூடிய பரான்ன நியமமென்பதே கைகண்ட மருந்து இது கைகண்டதென்பதற்கு ஹிந்துஸ்தானி தேசமே அத்தாக்ஷி. ஒருகால் அந்நாட்டில் துருக்கர்கள் அதிகமாயிருப்பதால் அந்தக் கக்ஷியினால்

இந்தக் கக்ஷிக்கு ஸந்தர்ப்பமில்லை என்று நினைக்கலாம். ஆனால் உண்மையில் மத்தியமாகாணம், பீஹார் முதலிய ஹிந்துஸ்தான் தேசங்களில் நம் தமிழ் நாட்டைவிட துருக்கர்களுடைய வீதாசார ஸங்கியை குறைவே. ஆயினும் அங்கு ப்ராஹ்மண அப்ராஹ்மண விவாதம் கிளம்ப முடியவில்லை. ஏனென்றால் அந்த ரோகத்தைத் தடுக்கப் பத்தியமும் நியமமும் வெகு தீவிரமாய் அனுஷ்டிக்கப் பட்டே வருகின்றன. ப்ராஹ்மண வைச்ய சூத்திரர்கள் எல்லோருக்குமே ஆசார ஆஹார நிஷ்டைகள் நியமமாகவே இருந்துவருகின்றன. வேதபாராயணம் ஒன்று ப்ராஹ்மணர்களுக்கு அதிகமேதவிர இதர ஆசாரங்களில் குடியானவர்கள்கூட ப்ராஹ்மணர்களுக்குக் குறைந்தவர்களல்லர். ஆகையால் ஆஹார பந்தியைப்பற்றி உயர்ந்தது தாழ்ந்தது என்ற விவாதத்திற்கு இடமில்லை.

நான்கு வர்ணத்தாரும் ஏழை பணக்காரன் என்கிற வித்தியாசமில்லாமல், ஆஹார நியமத்தோடு இருப்பதைத்தவிர, எல்லோரும் சிகையையும் ரக்ஷித்துவருகிறார்கள். ஹிந்துஸ்தானி தேசத்தில் சிகையில்லாதவன் துருக்கன் ஒருவனே. துருக்க ஹிந்து சண்டைகளிலும் ஹிந்துக்கள் அதிகமாய் மரணமடைந்திருக்கும்போதுகூட துருக்கர்கள் தங்களைத்தான் ஹிந்துக்கள் அதிகமாகக் கொன்று விட்டார்கள் என்று அதிகாரிகளுக்குக் காட்டுவதற்காக, சவங்களிலிருக்கும் சிகைகளைக் கத்திரித்துவிடுகிறார்கள், எனச் சில ஸமயங்களில் பத்திரிகைகளில் படித்திருக்கிறோம்.

நீலகுடி கிருஷ்ணய்யர் காசியிலிருக்கும் திருவாவடுதுறை மடத்தின் நிர்வாக அதிகாரி. திருவாவடுதுறை மடத்திற்கு காசியில் ஒரு நீதி வழக்கு இருந்தது. அதை முடிப்பதற்காக காசியிலிருந்து ஒரு வக்கீலை அழைத்துக்கொண்டு கிருஷ்ணய்யர் திருவாவடுதுறைக்கு வந்து சேர்ந்தார். இந்நாட்டுச் சைவவக்கில் ஒருவரும் அங்கு இதரகாக வந்திருந்தார். எல்லாம் முடிந்தபிறகு மடாதிபதி அந்தச் சைவவக்கீலுக்கு ஆசீர்வாதத் திருநீறிட்டார். அப்பொழுது காசி வக்கீல் கிருஷ்ணய்யரிடம் காதில் ஏதோ முணுமுணுத்தார். மடாதிபதி என்னவென்று கேட்டார். கிருஷ்ணய்யர் அதிக விசேஷமொன்றுமில்லை என்று சொன்னார். மடாதிபதி திரும்பவும் நிர்ப்பந்தப்படுத்திக் கேட்டார். அப்பொழுது கிருஷ்ணய்யர் சொன்னதாவது:— இத் தென்னாட்டில் துருக்கர்கள் கூடத் திருநீறு இட்டுக் கொள்ளுகிறார்களே! என்ன ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை! என்று

ஆச்சரியத்துடன் தம்மைக் கேட்டதாகவும், அப்படி மகப்மதியர் இந்நாட்டிலும் திருநீறிட்டுக்கொள்வதில்லையே என்று தாம் பதில் சொன்னதாகவும், இதோ இந்த வக்கீல் மடாதிபதியிடம் விபூதி இட்டுக்கொள்கிறாரே என்று அவர் சொன்னதாகவும், அவர் சைவ ராயிற்றே என்று தாம் சொன்னதாகவும், அவருக்குச் சிகையில் லையே, அவர் முஸ்லீம் அல்லவா? என்று அக் காசி வக்கீல் கேட்ட தாகவும் அறிவித்தார். இந்த நிகழ்ச்சி ஸமீபத்தில் ஐந்து வரு ஷங்களுக்குள் நடந்தது. இக்காலத்திலுங்கூட இங்கிலீஷ் படித்த ஹிந்துஸ்தானிகள் சிகையில்லாமல் ஒரு ஹிந்து உண்டா என்று ஆச்சர்யப்படுகிறார்கள். வங்காளத்திலும் பஞ்சாபிலும் இந்த ஆச் சர்யமில்லை. ஹிந்துஸ்தானத்தைப் பற்றியே நாம் இப்பொழுது சொல்லுவது.

ஹிந்துஸ்தான தேசத்தில் ஓடும் ஜலத்திலோ குளத்திலோ ஒருவரும் மலஜல சௌசம் செய்துகொள்ளார். சௌசமோ அல் லது பானமோ, தம் தம் பாத்திரங்களைக்கொண்டே செய்துகொள் வர். மஹாளயபக்ஷம் பதினைந்து நாட்களிலும் எல்லா வர்ணத்தார் களும் தர்ப்பணம் தவறாது செய்வர். ஒருவர் பாத்திரத்தால் மற் றொருவர் பானம் செய்யார். இதற்கு ஒரு அத்தாக்ஷி:– ரயில்வே ஸ்டேஷன்களில் பால் விற்கப்படுகிறது; அதற்கு அரையணா விலை என்றால் அவ்விலை பாலை பெய்துகொடுக்கும் சிறு கலயத்தையும் சேர்த்தே; வாங்குபவர் அப்பாலைக் குடித்துவிட்டு அக்கலயத்தை யும் உடைத்துவிடுவார். இப்படி இருக்கும் ஊரில் சோற்றுக்கிளப்போ இட்டலிக்கிளப்போ எங்கேயாவது இருக்குமா? அந்நாட்டில் எங்கே யாவது இக்கிளப்புகள் இருந்தால், அது தமிழன் சாப்பிடும் கிளப்பே என்று தீர்மானித்துக் கொள்ளலாம். எவரும் ஸ்நானம் செய்யாமல் எதையும் வாயில் போட்டுக்கொள்ளமாட்டார்கள்.

மனுஸ்ம்ருதியில், கங்கை, யமுனை, இந்நதிகளின் இடையில் உள்ள நாட்டிற்கு மத்யதேசம் என்றும், அதனிடையில் ஸரஸ்வதி, த்ருஷத்வதி இவ்விரண்டு நதிகளுக்கு இடையில் உள்ள தேசங்களுக் குப் ப்ருஹ்மரிஷி தேசமென்றும் பெயரிடப்பட்டிருக்கிறது. அந்த தேசத்திலுள்ள வேதியருடைய ஆசாரங்களைக்கொண்டு உலகில் உள்ள மாந்தரனைவரும் தங்களைச் சீர்த்திக்கொள்ளக் கடவர், என்று மனு உபதேசித்திருக்கிறார்.

एतद्देशप्रसूतस्य सकाशादग्रजन्मनः ।
स्वं स्वं चरित्रं शिक्षेरन् पृथिव्यां सर्वमानवाः ॥

இதனால் மனுவின் காலத்தில் உலக முழுவதும் வைதிகமதமான ஹிந்துமதமாகவே இருந்தது. என்று தெரிகிறது.

ஹிந்துஸ்தானி தேசத்தில் மாம்ஸம் சாப்பிடுகிறவர்கள்கூட வெங்காயத்தைத் தொடார். குஜராத் தேசத்திலும், ராஜபுதனம் என்னும் மார்வாடி தேசத்திலும், ஹிந்துக்களில் மாம்ஸம் தின்ப வர்கள் நூற்றுக்கு இருபதிலும் குறைவாகவே இருப்பர். மார் வாடிகள் எலும்பினால் சுத்தி செய்யப்பட்ட சர்க்கரையையோ, கற்கண்டையோ தொடார். அவர்களுக்கெனப் பழுப்பு சர்க்கரை யும் கற்கண்டும் தயாரிக்கப்படுகிறது. எங்கும் கோரக்ஷண சாலைகள் கட்டப்பட்டிருக்கின்றன. இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னர் மஹாராஷ்டிர ப்ராஹ்மணர்களால் நடத்தப்பட்ட சுதந்தரப் போர்களில் யுத்தகளத்திலேயே சிவபூஜை நடத்தப்படுமாம்.

மார்வாட் குஜராத்தி ப்ராந்தயத்திலுள்ள வல்லப மதஸ்தர் கள் இன்றும் குழாய் ஜலத்தை உபயோகிப்பதில்லை.

மகாராஷ்டிரத்திற்குத் தெற்கேயுள்ள கொங்கணம், துளு, மலையாளம் இத்தேசங்களில், அதிலும் விசேஷமாய் மலையாளத்தில், அமிழ்ந்து மூழ்கி ஸ்நானம் செய்தாலொழிய நீரை எடுத்து விட்டுக் கொண்டு குளிப்பது ஸ்நானமாகக் கருதப்படுவதில்லை. ஆலயங்களில் ஸ்நானம் செய்த மடியுடன் அல்லாது ஒருவரும் பிரவேசிப்பதில்லை. அந்நாட்டு வைதியரில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர்களுக்கு மேல் வேதாத்யயனம் பூர்த்தியாகச் செய்தவர்கள். அந்நாட்டிலுள்ள தமிழ் ப்ராஹ்மணர் ப்ரதி மாதமும் அவ்வவர் ஜந்மநக்ஷத்ரத்தன்று ருத்ரைகாதசி நடத்துவார்கள்.

நம் நாட்டு ப்ராஹ்மணர்கள் ஸ்நானம் செய்யாது, காவேரியில் சௌசத்தை மாத்ரம் செய்துகொண்டு, கிளப்புக்குள் நுழைந்து, வெங்காயம் கலந்த வடை, உப்புமா இவைகளைத் தின்றுவிட்டு, துருக்கனுக்குப் பக்கத்து நாற்காலியில் தாம் உட்கார்ந்துகொண்டு, துருக்கன் குடித்த பாத்ரத்தில் தாமும் குடித்துவிட்டு, வெளியில் வந்து, தாம் உயர்ந்த ப்ராஹ்மணர்கள் என்று கூறிக்கொண்டால்,

இவர்களைப் பார்த்து ஹிந்துஸ்தானி தேசத்திலுள்ள ஒரு குடியான வன் என்ன நினைப்பான்?

நம்முடைய சென்னை ராஜதானி முழுவதிலும் சுமார் 150 ஸம்ஸ்க்ருத பாடசாலைகள் இருக்கின்றன. ஐக்கியமாகாணம் ஒன்றில் 1500 பாடசாலைகள் இருக்கின்றன. பீஹார் மாகாணத்திலும் அவ்வளவு இருக்கின்றன. இவ்வளவு அதிகமாய் இருப்பதற்கு முக்கியமான ஸௌகர்யம் ஒவ்வொரு மாணவனுக்கும் கொஞ்சம் ரொட்டி மாவு தான் தேவை. பால்யத்திலேயே தன் ரொட்டியைத் தானே தட்டிக் கொள்வான். இதனால் பாடசாலை ஏற்படுத்துவது வெகு சுலபமாக இருக்கிறது. நம் நாட்டிலோ ஐம்பது வயதுக்கு மேல் கல்யாணம் செய்துகொள்பவனை, ஏன் இவ்விதம் ஒரு கன்னிகையைக் கெடுக்கிறாய் என்று கேட்டால், வீட்டில் சாப்பாட்டுக்கு என்ன செய்வது, என்று பதில் சொல்லுகிறான். தன் உணவைத் தானே பக்குவம் செய்து உண்ணப் பழக்கிக்கொள்ளாத குற்றம் நம் நாட்டில் எவ்வளவு ஆபாஸ அனுசாரங்களுக்கும், பாதகச் செயல்களுக்கும், கல்வி அழிவதற்கும், ஜாதி த்வேஷம் தலைவிரித்தாடுவதற்கும் காரணமாகின்றது என்பது தேசாடன மாத்ரகரத்தால் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறியப்படுகிறது.

வங்காளத்தில் விதவா தர்மம் வெகு நியமத்துடன் அனுஷ்டிக்கப் பட்டு வருகிறது. எந்த ஜாதி விதவையும் தலையில் மயிர் வைத்திராள். மாம்ஸமே உண்ணாள். வீட்டில் தனியே சமைத்து உண்பாள். ஏகாதசியன்று வாயில் ஜலத்திவலையும் பட விடாள். ஆடவர் தங்கள் பித்ருக்களுக்கு முதல் ஆப்திக ஸ்ரார்த்தம் வருங்கால் தங்கள் சொத்தில் ஒரு பகுதியை அந்த ஸ்ராத்தத்திற்கு உபயோகிப்பார். விசேஷ வைதிக ச்ரத்தை உள்ளவர்கள் இரண்டு வர்க்கங்களிலுமுள்ள மூன்று பித்ருக்களுக்கும் அந்தந்தத் திதிகளில் மொத்தம் ஆறு ச்ராத்தங்கள் செய்து வருகிறார்கள். கண்ணனைப் பற்றிப் பாடி ஆடி கூத்தாடுவார்கள். ஒவ்வொரு குடியானவனும், பஸ்ஸில் செல்லும் ஒவ்வொரு பிரயாணியும், அம்பிகையை நினைத்து விட்டால், காகரவென்று கண்ணீர்விட்டு உருகிவிடுவான். இவ்வுருக்கமே வந்தே மாதரம் என இந்தியா முழுவதும் முழங்கும் முழக்கத்தின் வேர்.

வங்காளத்துக்கு வடமேற்கிலுள்ள மிதிலை நாட்டில் ப்ராஹ்மணர்கள் மிகுதி. தர்ப்பங்கா ராஜனே ப்ராஹ்மணர். அதிலும்

ஸ்ரோத்ரியர் என்னும் சிஷ்ட வகுப்பைச் சேர்ந்தவர். அந் நாடு முழுவதிலும் ஒரு க்ராமத்தில் நூறு ப்ராஹ்மணர்கள் இருந்தால் அதில் எழுபது பேர் பண்டிதர்கள். நமது சாஸ்த்ர நூல்கள் எழுதியவர்களில் மைதிலர்களே அதிகம். அவர்கள் கூடியவரை ப்ரதிக்ரஹம் வாங்கமாட்டார்கள்.

பிஹார் மாகாணத்திலுள்ள ஸ்த்ரீகள் எந்த ஜாதியினராயினும் எக்காலத்தும் வீட்டை விட்டு வெளியே கிளம்பார். ஆகையால் வீட்டிற்கு வெளியே தென்படார்.

வங்காளத்துக்குத் தெற்கே உத்கல தேசம் இருக்கிறது. அதற்கு ஒரிஸ்ஸா என்று இக்காலத்துப் பெயர். அந்நாட்டில் ஒவ்வொரு ஊரிலும், சிவாலயங்களிலும், விஷ்ணு ஆலயங்களிலும், விசேஷ பூஜா நிவேதனங்களும், உத்ஸவங்களும், உத்ஸவ மண்டபங்களும், தெப்பக்குளங்களும், அநேகவித வாத்யங்களும் விளங்கி வருகின்றன. அந் நாட்டிலுள்ள வேதியர்கள் நம் நாட்டுப் பழைய வேதியரைப் போல அடர்ந்த சிகையுடன் காணப்படுகின்றனர். அந் நாட்டிலுள்ள எச்சாதியினரும் மல விஸர்ஜனம் செய்தால் ஸ்நானம் செய்யாமல் இரார். அந்நாட்டு வேதியரில் நூற்றுக்கு எண்பது பெயர் இன்னும் சிவபூஜையும், வைச்வதேவத்தையும் விடாது நடத்தி வருகிறார்கள். அந்நாட்டில் எவரும் சுருட்டே குடியார். அந்நாட்டு வேதியர்க்குள் ஒரு வீட்டில் ஒரு சிறு பையனே வாரிஸாக இருந்தாலும், அவனுக்குச் சீக்கிரத்தில் உபநயனம் செய்விக்கப்பட்டு அவனே சிவபூஜையைச் செய்கிறான். இச் சிவமே தேசாடன மாதுர்யத்தின் தேன்.

இவ்விதம் ஒவ்வொரு நாட்டில் தர்மசாஸ்த்ரத்தில் விதிக்கப் பட்டுள்ள ஒவ்வொரு ஆசாரம் கையாளப்பட்டு, ஊக்கத்துடன் இன்றுவரை ரக்ஷிக்கப்பட்டு வருகிறது. ஒவ்வொரு நாட்டிலும் தர்மசாஸ்த்ர விரோதமான சில அனாசாரங்கள் இருப்பினும், எந்தச் சாஸ்த்ரீய ஆசாரம் எந்த தேசத்தில் ஊக்கத்துடன் அநுஷ்டிக்கப் பட்டுவருகிறதோ, அந்தக் குணபாகத்தைக் கிரஹித்து, தான் மேம்படுவதே தேசாடனத்தின் முக்கிய உத்தேசம்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

மஹாபாரதம் பிரஸ், கும்பகோணம். PIC. TE 4/1-11-47. C. 5000

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# பாப புண்யங்கள்



ப்ரசுரம் 13

ஸர்வஜித் ஸு
ஐப்பசி-மீ 15உ, வெள்ளிக்கிழமை,
31—10—1947


## வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,
( Regd. )
கும்பகோணம்.


( விலை அணா ஒன்று )

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# பாப புண்யங்கள்



நாம் வயிறு நிறையச் சாப்பிட்டுக்கொண்டு, குழந்தைகள், பந்துக்கள் முதலியவர்கள் கஷ்டப்படாமல் சாப்பிடும்படி செய்து வருவதற்காக க்ரஹஸ்த தர்மத்தில் சில காரியங்கள் செய்துகொண்டு இருக்கிறோம். நம்முடைய சரீரத்தை மூட வஸ்த்ரமும், பசியைப் போக்க ஆகாரமும், இருப்பதற்கு வீடும், நம்முடைய குழந்தை முதலியவர்களைப் போஷிப்பதற்குரிய ஸௌகரியங்களும் அமைவதற்காக ஒரு லௌகிக காரியம் செய்வதைப் போல, எந்த லோகத்திற்குப் போனாலும் அங்கு ஸௌக்யமாயிருக்க ஒரு காரியம் செய்யவேண்டும். அந்தக் கார்யம் தான் தர்மம்.

ஒரு ஸந்தேகம் இப்பொழுது ஏற்படுகிறது. வயிற்றுப் பாட்டுக் காரியத்திலேயே காலமெல்லாம் ஸரியாய்ப் போகிறதே; தர்மம் செய்ய ஸாவகாசம் இல்லையே; இந்த மாதிரி ஒரு ச்ரமம் தோன்றுகிறது. இப்படிச் சொல்லுகிறவர்களெல்லாம் பணம் ஸம்பாதிக்கத் தங்கள் காலத்தையெல்லாம் செலவழித்தாலும் பாதகமில்லை. வீண் பேச்சிலும், நினைவிலும், பரிஹாஸத்திலும், உத்ஸாஹத்திலும் எவ்வளவோ காலம் வீணாகப் போகிறது. பணம் ஸம்பாதிக்கும் காலத்தைக் கணக்குப் போட்டுப் பார்த்து, மிச்சமுள்ள காலத்தை வீணாகச் செலவழிக்காமல், ஆத்ம லாபமான காரியத்தைச் செய்யலாம். மனம் இருந்தால் அவகாசம் கிடைக்காமற் போகாது. ட்ராமிலும், மோட்டாரிலும், ரயிலிலும் போகும்போது பகவந்நாமாவை ஜபித்துக்கொண்டே வரலாம். இப்போது ஸம்பாதிக்கும் பணத்தில் ஒரு பைசாவாவது நாம் இந்த உடம்பை விட்டபிறகு வேறு லோகத்தில் ப்ரயோஜனப்படுமா? அந்த லோகங்களிற் செலவாணியாகும் பணம் பகவந்நாமா தான். ஆகையால் அதைத் தவறாமல் ஜபிக்கவேண்டும். அவகாசமில்லை என்பது பொய்.

நாம் நான்கு விதத்தில் தர்மம் செய்து வரலாம்; சரீரத்தாலும், வாயாலும், மனத்தாலும், பணத்தாலும் செய்யலாம்.

பணத்தை ஆத்மலாபத்தில் உபயோகிக்கலாம்; தானதர்மம் செய்ய லாம். தரித்திர தசையில் தானதர்மம் எப்படிச் செய்கிறதென்ற ஒரு ஸந்தேகம் தோன்றுகிறது. தரித்திரத்திலும் செலவைக் குறைத்து, ஒரு பைசாவாவது தர்மம் செய்யலாம். தினமும் ஒவ் வொருவரும் ஒரு பைசாவாவது காலணாவாவது தர்மம் செய்ய ஸங்கல்பம் செய்து கொள்ளவேண்டும்.

தூங்குவதிலும், வம்பு பேசுவதிலும், ஒவ்வொருவருக்கும் எவ்வளவோ காலம் செலவழிகிறது. அவற்றை நிறுத்திப் பகவா னின் சரணங்களை த்யானம் செய்யலாம். அதுதான் வரவு; மற்றவை எல்லாம் செலவுதான். அவையெல்லாம் மாம்ஸத்திற்காகச் செல வழிக்கும் காலம். உடம்பும் மாம்ஸம் தானே; அது ஸம்பந்தமாக செலவழிப்பது மாம்ஸத்திற்காகச் செலவழிப்பது தானே.

நாம் மிகவும் பாபம் பண்ணியிருக்கிறோமென்று பயப்படக் கூடாது. நம்மைப்போல் இருந்தவர்கள் பக்தர்களாகி நல்ல கதி அடைந்திருக்கிறார்கள். நம்மைவிட மகா பாபிகளானவர்கள்கூட நல்ல ஸ்திதிக்கு வந்திருக்கிறார்கள். பாபிகளை ரக்ஷிப்பதனால்தான் ஈச்வரனுக்குப் பெருமை ஏற்படுகிறது. அதனால் நாம் தைர்யமாக நம்பி நல்ல காரியங்களைச் செய்து வரவேண்டும்.

பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்குச் சொல்லு கிறார்:—

அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: ।
ஸர்வம் ஜ்ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥
[கீதை 4—36]

" லோகத்தில் எல்லா பாபிகளிலும் மகா பாபியாக வைத்துக்கொண் டாலும் பாபமாகிற ஸமுத்ரத்தை ஞானமென்கிற ஓடத்தினால் நீ தாண்டி விடுவாய் " என்று சொல்லுகிறார்.

அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥
[கீதை 18—66]

நாம் பாபம் செய்துவிட்டோம் என்று அழக்கூடாது. " நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடச்செய்கிறேன்; அதனால் நீ அதைர்யப்படாதே; அழாதே " என்று பகவான் சொல்லுகிறார்.

நாம் எப்படிப் பாபம் செய்கிறோம் என்பதை யோசித்துப் பார்க்கலாம். வாயாலும், மனத்தாலும், தேகத்தாலும், பணத்தாலும் நாம் பாபம் செய்கிறோம். மனஸில் கெட்ட நினைவுகளை நினைத்துப் பாபம் செய்கிறோம். வாயினால் உத்ஸாகமாகப் புரளி பண்ணிப் பாபம் செய்கிறோம். தேஹத்தால் கெட்ட காரியங்களைப் பண்ணிப் பாபம் செய்கிறோம். பணத்தினால் பலவகையாகப் பாபம் செய்கிறோம். நாம் இந்தப் பாபங்களைப் பண்ணக் கூடாது என்று நினைத்தாலும் அப்படி இருக்கமுடியவில்லை. பிசாசுபோலப் பாபம் பண்ணும் பழக்கம் நம்மைப் பிடித்துக்கொண்டிருக்கிறது; நம்மை விடாமற் சுற்றிக்கொண்டே இருக்கிறது. பல காலமாகப் பாபம் பண்ணியிருக்கிறோம். அதனால் தான் அந்தப் பழக்கம் நம்மை விடவில்லை. அந்தப் பழக்கத்தை எப்படிப் போக்குவது ?

எந்த வழியினால் நாம் பாபம் பண்ணுகிறோமோ, அந்த வழியினாலேயே நாம் பழக்கத்தை மாற்றவேண்டும். முன்புசொன்ன நான்கு மார்க்கங்களிலேயே அந்த முயற்சியைச் செய்யவேண்டும்.

தர்மேண பாபமபநுததி ||

[மகாநாராயண உபநிஷத்து]

என்பது வேதம். 'பாபத்தைத் தர்மத்தால் நிவர்த்தி பண்ணு' என்று அது சொல்லுகிறது.

தர்மம் என்பது என்ன ? அதர்மத்திற்கு நேர் விரோதமானது தர்மம். கெடுதலுக்கு விரோதமானது நல்லது. அது தான் தர்மம். கெடுதல் எது ? நம்மைப் பாபம் பண்ணியாகவேண்டுமென்று தூண்டுகிறதுதான். ஒரு காரியத்தை ஆசைப்பட்டுப் பண்ணுவது பாபம். அந்த ஆசை நம்மை வலிய இழுத்துப் பாபம் பண்ணச் செய்கிறது.

பாபம் என்பது என்ன ? புண்யம் என்பது என்ன ? எதை நாம் செய்யக் கூடாது என்று மனதுக்குத் தோன்றுகிறதோ அது தான் பாபம். எதைச் செய்வது நல்லது என்று தோன்றுகிறதோ அது தான் புண்யம். மனிதன் எப்பொழுதும் புண்யத்தின் பலனைத் தான் விரும்புகிறான்.

புண்யஸ்ய பலமிச்சந்தி புண்யம் நேச்சந்தி மாநவா: |
ந பாபபலமிச்சந்தி பாபம் குர்வந்தி யத்நத: ||

புண்யத்தின் ப்ரயோஜனம் கஷ்டம் இல்லாமல் ஸௌக்கியமாக இருப்பது. அந்த ப்ரயோஜனத்தைத்தான் எல்லோரும் விரும்புகிறார்கள். அதனால் மனம் சாந்தத்தை அடைகிறது. ஆனந்தம் உண்டாகிறது. நமக்குப் புண்யத்தின் ப்ரயோஜனத்தில் ஆசை இருக்கிறதே ஒழிய, நாம் பண்ணுவதில் பெரும்பாலானவைகள் பாபகாரியங்களாகவே இருக்கின்றன. நாம் பாபம் பண்ணுவதற்கு நம் மனமே ஸாக்ஷியாக இருக்கிறது. புண்யம் பண்ணுகிற விஷயத்தில் சோம்பல் உண்டாகிறது. பாபகாரியங்கள் பண்ணுவதில் ஓர் உத்ஸாகம் இருக்கிறது.

பாபத்தின் பலன் கஷ்டம். இது செய்யக்கூடாதென்று நம் மனச்சாக்ஷி தடுக்கும் கார்யங்கள் பாபகாரியங்கள். இது செய்ய வேண்டாமென்று எண்ணுவதுண்டு; ஆனால் செய்வதை விடுகிறதில்லை.

இந்த லோகத்தில் பிறந்த யாவர்க்கும் ஸுகத்தில் இச்சை உண்டு. புண்யமே செய்யவேண்டுமென்று நினைக்கிறார்கள். பாபமே செய்யக்கூடாதென்பதும் தெரியும். ஆனால் அவர்கள் செய்வதில் நூற்றுக்கு எண்பது பங்கு பாபம்தான்; இருபது பங்கே புண்யம். இதை நினைத்தால் நிரம்ப வேடிக்கையாக இருக்கிறது. பாபம் வேண்டுமென்று நாம் ஆசைப்படுவதே இல்லை. ஆனாலும் பாப மூட்டை மேலும் மேலும் ஏறிக்கொண்டே இருக்கிறது. இந்த ஆச்சர்யத்தின் காரணம் தெரியவில்லை. என் இப்படி? என்ற கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை. பல காலத்திற்கு முன்பே அர்ச்சுனன் நம் அனைவருக்கும் சேர்த்துப் பகவானைக் கேட்டு இதற்குப் பதில் வாங்கி வைத்திருக்கிறான்.

𑌅𑌥 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌚𑌰𑌤𑌿 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 |
𑌅𑌨𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌪𑌿 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌬𑌲𑌾𑌦𑌿𑌵 𑌨𑌿𑌯𑍋𑌜𑌿𑌤𑌃 ||

[கீதை 3—36]

"மனிதன் பாபம் செய்கிறான். அவனுக்கு அதைச் செய்ய ஆசை இல்லாதபொழுதே அவன் செய்கிறான். அவனைப் பாபம் பண்ண வைக்கிறது யார்? உபத்ரவப்படுத்திப் பாபம் செய்யச் சொல்கிற அந்தப் பேர்வழி யார்? பாபம் பண்ணவேண்டாம் என்று தான் ஞாபகம்; பாபத்திற் கொஞ்சங்கூட இச்சை இல்லை. ஆனாலும்

அவனைப் பாபம் பண்ண வைக்கும் ஆஸாமி யார்?'' என்று கேட்டான் அர்ச்சுனன். பகவான் அதற்குப் பதில் சொல்லியிருக்கிறார்.

𑌕𑌾𑌮 𑌏𑌷 𑌕𑍍𑌰𑍋𑌧 𑌏𑌷 𑌰𑌜𑍋𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।
𑌮𑌹𑌾𑌶𑌨𑍋 𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌨𑌮𑌿𑌹 𑌵𑍈𑌰𑌿𑌣𑌮𑍍 ॥
[கீதை 3—37]

மனிதனுக்கு ஒரு வஸ்து வேண்டுமென்ற ஆசை இருக்கிறது. அதை அடைய ப்ரயத்னம் செய்கிறான். நியாயமான வழியில் அகப்படாவிட்டால் அந்யாய வழியில் முயற்சி செய்கிறான். அது தான் பாபம். அந்தப் பாபத்திற்குக் காரணமாக இருப்பது வேண்டும் என்னும் ஆசை. அதைத் தான் காமம் என்று சொல்லுவார்கள். அது நமக்கு ஒரு சத்ரு. மற்றொன்று இருக்கிறது. அது க்ரோதம்— கோபம். ஒரு வஸ்துவின் மேல் ஆசைப்பட்டால் அது கிடைக்காதபொழுது அதற்குத் தடையாக இருந்தவர்கள் மேல் க்ரோதம் உண்டாகிறது. ஆசைப்பட்ட பொருள் கிடைக்காத பொழுது கோபம் உண்டாகிறது. காமம் திருப்பப்பட்டபொழுது கோபமாகிறது. ஆதலால் இரண்டையும் ஒன்றென்றே சொல்லி விடலாம்.

𑌕𑌾𑌮𑌃 𑌸 𑌏𑌷 𑌪𑍍𑌰𑌤𑌿𑌹𑌤𑌃 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌰𑍋𑌧𑌤𑍍𑌵𑍇𑌨
𑌪𑌰𑌿𑌣𑌮𑌤𑍇 ॥
[பாஷ்யம்]

ஒரு ஸமயம் காமமாக இருப்பதே பின்பு கோபமாக ஆகிறது. ரப்பர் பந்தை சுவர் மேல் எறிகிறோம். எறிந்தபொழுது அது பின்பு திரும்பி வருகிறது. எறியப்படும்பொழுது அது காமம் போல் இருக்கிறது. திரும்பிவருவதைப் போவல்து க்ரோதம். காமம் நிறைவேறாவிட்டால் கோபம் உண்டாகிறது என்று இந்த வாக்யம் சொல்லுகிறது. காமம் எதனாலும் திருப்தி அடையாது. எவ்வளவு சாப்பிட்டாலும் அதற்குப் போதாது. நாம் பசிக்கு ஆகாரம் கொடுத்தால் திருப்தி உண்டாகிறது. ஆசை, ஆசைப்படும் வஸ்துவைக் கொடுத்தால் அடங்குவதில்லை. அந்த வஸ்து கிடைத்துவிட்டதே என்று சமனம் அடைவதில்லை. காமம் நெருப்புப் போன்றது. நெருப்பு ஆகாரம் கொடுக்கக் கொடுக்க பரவிப் பெருகும். அதைப் போன்றதே காமமும். ஆகாரம் போட்டுச்

ச்மனம் உண்டாக்குதல் நெருப்புக்கும் இல்லை. நெருப்புக்கு க்ருஷ்ண வர்த்மா என்று ஒரு பெயர் இருக்கிறது. அதற்குப் போனவழி யெல்லாம் கறுப்பை உண்டுபண்ணுவது என்பது அர்த்தம். நெருப்பு எங்கே போனாலும் பின்னால் கரியை உண்டாக்கிக்கொண்டே போகிறது. காமமும் அப்படித் தான். முதலில் சந்தோஷம் உண்டாகிறது. அப்புறம் மேலே மேலே கிடைக்கவில்லையென்று அழுகை உண்டாகிறது. ஆகாரம் கொடுக்கக் கொடுக்கக் காமம் விரிகிறது. காமம் ஒரு பெரும் பசிக்காரன்; மஹாசநன் என்று கூறப் படும்.

க்ரோதம், காமம் நிறைவேறாமல் திரும்பி வரும்பொழுது ஏற்படுவது. அது காமத்திலும் உயர்ந்தது. இது நைஷதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

கலி வருகிறார். அவருடைய ஸேனாதிபதிகளாகிய காமன், க்ரோதன் முதலியவர்கள் உடன் வருகிறார்கள். ஸ்துதி பாடகர்கள் ஒவ்வொரு ஸேனாதிபதியின் பெருமையையும் எடுத்துச்சொல்லுகிறார்கள். க்ரோதனைப் பற்றியும் சொல்லப்படுகிறது.

𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍁𑌰𑌂 𑌕𑌾𑌮𑌸𑍇𑌨𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌦𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌵𑍈𑌭𑌵𑍈𑌃 ।
𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌦𑍍𑌭𑌯𑌂 𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌸𑍇𑌨𑌾𑌨𑍀 𑌨𑍀𑌯𑌕𑍍𑌷𑌤𑌿 ॥

[நைஷத காவ்யம் 17—21]

காமம் புகாத இடம் இல்லை என்று சொல்வதுண்டு. காமன் பெரிய வீரன். ஆனால் க்ரோதன் அவனைக் காட்டிலும் பலவான். க்ரோதனுடைய கோட்டையில் காமன் பாணம் உள்ளே வராது. அந்தக் கோட்டைக்குள்ளிருந்து இந்த்ராதி தேவர்களையும் ஒரு கை பார்ப்போம் என்று க்ரோதன் சொல்லுவான். அந்தக்கோட்டை துஎ? துர்வாஸருடைய ஹ்ருதயந்தான் அது. அதற்குள் காமன் பாணம் செல்லாது.

நாம் செய்யும் பல பாப காரியங்களுக்கும் இந்தக் காமக்ரோதங்களே காரணமாக இருக்கின்றன. ரஜோ குணத்தால் இவை உண்டாகின்றன. பெரும் பசிக்காரன் காமன்; பெரிய பாபி க்ரோதன். இவர்கள் தாம் நமக்குச் சத்ருக்கள்.

ஆசையின்றி ஒரு கார்யத்தைச்செய்தால் அப்பொழுது பாபமில்லை. ஆசைப்பட்டு ஒன்றைச் செய்வது தான் பாபம். பாபம்

பண்ணிப் பண்ணி அந்தப் பழக்கம் பல காலமாக ஊன்றி இருக்கிற படியால் அது இப்பொழுதும் பாபம் பண்ணச் செய்கிறது.

த்ரிகரணத்தாலும் பாபத்தைச் செய்கிறோம். மனத்தால் பலவகையான கெட்ட நினைவுகள் உண்டாகின்றன. அவை பாபம். வாக்கால் பொய் பேசுதல் முதலிய பாபத்தைச் செய்கிறோம். நமக்கு மாத்ரம் பகவான் வாக்குக் கொடுத்தது எதற்காக? ஹ்ருதயத்தில் உள்ளதைச் சொல்லட்டும் என்று கொடுத்திருக்கிறார். அப்படிச் செய்யாமல் பொய் சொன்னால், இவனுக்கு வாக்குக் கொடுத்துப் பிரயோஜனமில்லை என்று வாயில்லா மாடாகப் பிறக்கச் செய்வார். நமக்கு வாக்குக் கொடுத்திருப்பது ஸத்யத்தைச் சொல்வதற்காகவும், பகவந்நாமாவைச் சொல்வதற்காகவுமே.

மனம், வாக்கு, உடம்பு, பணம் என்னும் நான்கினாலும் பாபம் பண்ணுகிறோம். ஆசைப்பட்டு ஒன்றைச் செய்தால் பாபம் உண்டாகிறது. முன்பு கூறிய நான்கினாலும் நல்ல காரியங்கள் செய்யவேண்டும். கயிற்றை எப்படி முடிந்தோமோ அப்படியே அவிழ்க்கவேண்டும். எந்த நான்கினால் நாம் பாபம் பண்ணப் பழகிக்கொண்டோமோ அந்த நான்கினாலேயே புண்யம் செய்யப் பழகவேண்டும்.

பாபத்திற்கு இரண்டு சக்திகள் இருக்கின்றன. ஒரு கெட்ட பழக்கம் இருக்கிறது. உதாரணமாகப் பொடி போடும் பழக்கத்தை கவனிப்போம். அது இரண்டுவகைக் கெடுதலை உண்டாக்குகிறது. அன்றைக்குப் போடும் கெடுதல் ஒன்று. நாளைக்கும் போடும்படி தூண்டும் கெடுதல் ஒன்று. ஆக இரண்டு உண்டாகின்றன. அது போலவே பாப கார்யம் பின்னும் பல பாபங்களைச் செய்யும் பழக்கத்தை ஏற்படுத்துகிறது. அந்தப் பழக்கத்தை வாஸனை என்று சொல்லுவோம். நாம் நல்ல வாஸனையை ஏற்றுக்கொண்டு வர வேண்டும்; கெட்ட வாஸனையை ஒழித்து வர வேண்டும்.

ஆகவே, எல்லாப் பாபங்களும் ஆசைப்படுவதால் உண்டாகின்றன என்று எண்ணி முன் கூறிய நான்கு வகையில் ஆசையில்லாமற் கார்யங்களைச் செய்யவேண்டும்.

நித்தியம் மனத்தினாலும், வாக்கினாலும், உடம்பினாலும், பணத்தினாலும் நல்ல காரியங்களைச் செய்து வர வேண்டும். நமக்

குக் கிடைக்கும் பணத்தில் ஒரு தம்பிடியையாவது ஒவ்வொரு நாளும் தர்மத்திற்காக உண்டியல் கட்டிப் போடவேண்டும். அந்தப் பணத்தைக் குடும்பத்திற்கு ப்ரயோஜனப்படுத்தாமல் தர்மத்திற்கு விநியோகப்படுத்த வேண்டும். நம்முடைய பணமெல்லாம் நம்முடையதல்ல என்ற ஞாபகம் இருக்கவேண்டும். இந்த உடம்பு போனவுடன் அது நம்முடைய ஸம்பந்தத்தை விட்டுவிடும். அந்தப் பணத்தை நம்முடையதாகச் செய்யவேண்டுமானால், நாம் எங்கே போனாலும் செல்லக்கூடிய நோட்டாக மாற்றவேண்டும். மேலுலகத்தில இந்தப் பணம் செல்லாது. இந்தப் பணத்தைத் தர்மநோட்டாக மாற்றிவிட்டால் அது எங்கேயும் செல்லும். அப்பொழுது அந்தப் பணமும் நமக்குச் சொந்தமாகும்.

ஆகையால் குழந்தை முதற் பெரியவர்கள் வரையில் தனித் தனி தர்மத்திற்காக ஒவ்வொரு உண்டியல் வைத்துக்கொள்ள வேண்டும். நாம் பிறந்தது முதல் இந்தமாதிரிப் பழக்கங்களை வைத்துக்கொண்டிருந்தால் இதற்குள் எவ்வளவோ செய்திருக்கலாம். நம்முடைய காரியத்தை நாம மறந்துவிட்டோம். குழந்தைகளுக்கென்று இப்பொழுதே தர்ம உண்டியல் ஏற்படுத்தவேண்டும். அவர்களுக்காக இன்ஷ்யூர் செய்வதில்லையா? இந்த இன்ஷ்யூரன்ஸ் இந்தப் பிறவிக்குப் பின்பும் [After-life] உபயோகப்படுமாதலால் இதை 'After-life Insurance' என்று கருதவேண்டும்.

வாக்கினால் புண்யம் செய்யவேண்டும். நித்தியம் ஆயிரம் பகவந்நாமாவையாவது சொல்லவேண்டும். அது நமக்கு உபயோகப்படும். அன்றியும் உபத்ரவம் வராமல் காக்கும். வீணாக வம்பு பேசுவதினால் பாபமும், அதனால் உபத்ரவமும் உண்டாகிறது. பகவந்நாமாவைச் சொல்வதால் அந்த உபத்ரவமும் இல்லை. மேலே புண்யமும் உண்டாகிறது. பகவானுக்குப் பல நாமாக்கள் இருக்கின்றன. "பேராயிரம் பரவிவானோ ரேத்தும் பெம்மானை" என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அவருடைய ஒரு நாமாவை ஆயிரம் தடவை சொல்லவேண்டும். ஸித்திபெற்ற பெரியோர்களிடம் அந்த நாமாவைக் கேட்டுக்கொள்ளவேண்டும். கணக்குக்காகக் கயிறு ஒன்றை வைத்துக்கொள்ளலாம். நாமாகப் பகவந்நாமாவைச் சொல்வதானாலும் பாதகமில்லை.

மனத்தினால் நல்லகாரியம் செய்யவேண்டும். கொஞ்சநாழிகை ஓரிடத்தில் இருக்கவேண்டும். பகவானை த்யானம் செய்யவேண்டும். நம்முடைய மனது பல நினைவுகளோடு இருக்கிறது. அது பெரிய ஸினிமாவைப்போல் இருக்கிறது. ஹ்ருதயம் யாருடைய இடம் என்பதை அறியவேண்டும்.

ஹ்ருதயம் பகவானுக்குரிய இடம். அந்த இடத்தை நாம் குப்பைத்தொட்டியாக்கி இருக்கிறோம். அதை மெழுகிச் சுத்தப் படுத்தி, அதிற் பகவானை உட்காரவைத்து நாமும் உட்காரவேண்டும். அதற்கு என்ன வழி? ஸ்வாமியின் பாதத்தை த்யானம் செய்யவேண்டும். நித்தியம் ஐந்து நிமிஷமாவது த்யானம் செய்ய வேண்டும். எந்தவிதமான ஸமயத்திலும் இது தவறாமல் நடக்க வேண்டும். இது சாப்பிடுவதைப் போன்றது. இது ஸ்வராஜ்யத்தை விட அதிகமென்றே சொல்லவேண்டும். ஆகாரம் செல்லாத காலத்திலும் இது அவச்யம் செய்யவேண்டியது. அப்பொழுது ஈச்வர அனுக்ரஹம் உண்டாகும். அந்த அனுக்ரஹம் எல்லாவற்றிற்கும் அனுகூலம். பணம் ஸம்பாதிக்க எவ்வளவோ காலத்தைப் போக்குகிறோம். நமக்கு உண்மையில் ஆத்மலாபமாக இருக்கும் இந்தக் காரியத்தை குறைந்த பக்ஷம் அரை மணியாவது செய்யக்கூடாதா? அந்த அரை மணியும் தர்மப் பணத்தைச் சேர்க்கும் காலமாகும். மனம் த்யானத்தில் ஈடுபட்டால் வாய் முதலியன அதன்படியே நல்ல காரியம் செய்யும்.

உடம்பினால் நல்ல கார்யம் செய்யவேண்டும். கோயிலுக்குப் போய் ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் செய்யவேண்டும். தண்டம் ஸமர்ப்பித்தல் என்று நமஸ்காரத்தைச் சொல்லுவார்கள். தடியைப் போல் விழுவது தான் அது. இந்த உடம்பு நமதன்று அவரது என்று நினைத்து அவர் ஸந்நிதியிற் போட்டுவிடவேண்டும்.

இப்படிச் செய்வதனால் பாபம் தானாக நழுவி விடும். அஹம் பாவம் குறையும். எவ்வளவுக்கெவ்வளவு நாம் இறங்குகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு மஹிமை ஏறும்.

ஸ்த்ரீகள் பர்த்தாவை நமஸ்காரம் செய்தாலே போதும். புருஷர்கள் கோயிலுக்குப் போவதில்லை என்று ஸங்கல்பம் செய்து

கொண்டு விட்டபடியால் அவர்களுக்கும் சேர்த்து ஸ்திரீகள் கோயி லுக்குப்போய் வருகிறார்கள். கோயிலுக்கு அவர்கள் போகக்கூடாது என்பது இல்லை. அவச்யமில்லை என்று கருதவேண்டாம். மூல லிங்கத்தைத் தர்சிப்பவர்கள் சிலர். த்வஜ ஸ்தம்பத்தைத் தர்சித் தாலே சிலருக்குப் போதும். கோபுர தர்சனத்தாலேயே சிலருக் குப் புண்யம் வந்துவிடும். ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவை வணங்கு வதே போதும். அதிகாரிகளுக்கேற்றபடி ஒவ்வோரிடம் இருக்கிறது. அதற்கு ஏற்றபடி தேகத்தை அர்ப்பணம் பண்ணவேண்டும்.

ஆகவே, நாம் நான்கு வகையிற் பாபம் பண்ணியிருக்கிறோம்; இன்னும் பண்ணி வருகிறோம். இதை நிறுத்துவதற்கு மாற்று தர்மம். அந்தத் தர்மத்தை த்ரிகரணத்தாலும், பணத்தாலும் செய்யவேண்டும். உடம்பினால் ப்ரதக்ஷிணம் முதலியவற்றைச் செய்யவேண்டும். இது எனதன்று, பகவானது என்று எண்ணித் தண்டம் ஸமர்ப்பிக்க வேண்டும். ஆலயம் இல்லாவிட்டால் ஸ்மர ணம் செய்துகொண்டாவது செய்யலாம். வாக்கால் பகவந் நாமா வைச் சொல்லவேண்டும். மனத்தால் சரணாரவிந்த த்யானம் செய்ய வேண்டும். பணத்தால் தான தர்மம் செய்யவேண்டும்.

நாம் பாபம் பண்ணாமலிருந்தால் புண்யம் செய்யவேண்டாம். பாபம் பண்ணியிருக்கிறோமாகையால் அவச்யம் இந்தத் தர்மங்களைச் செய்யவேண்டும். குழந்தை முதல் வ்ருத்தர் வரைக்கும் உள்ள எந்தப் பருவத்தினராயினும், எந்த ஜாதியாரானாலும் இந்த நான்கு வகையிலும் தர்மம் செய்தால்தான் பாபம் நிவர்த்தியாகும். புண்ய பலம் ஏற ஏறப் பாபம் குறையும். ஆத்மலாபத்திற்கு வேண்டிய முதல் சேரும். இந்தத் தர்மங்களை கை, கால் முதலிய கரணங்கள் நமது ஸ்வாதீனத்தில் இருக்கும்பொழுதே செய்து கடனையடைத்து முதலையும் சேர்க்க வேண்டும். நிர்யாணகாலம் வந்துவிட்டால் நமது அவயவம் நாம் சொல்லியபடி கேட்காது. மனது நினைப்பதை வாய் சொல்லாது. காது கேட்காது. கை கால் நாம் சொல்லுவதைச் செய் யாது. கண் பார்க்காது. இந்த்ரியங்கள் நமது ஸ்வாதீனத்தில் இருக்கும்பொழுதே தர்மத்தைச் செய்து பாபத்தைப் போக்கடித் துக் கொள்ளவேண்டும். நாளைக்குச் செய்வோம், பிற்பாடு செய் வோம் என்றிருக்கக்கூடாது. நாளை நடப்பது என்னவென்று நமக் குத் தெரியாது.

𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌮𑌨𑌸𑌾𑌚𑌲𑍇𑌨
𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑍋𑌗𑌬𑌲𑍇𑌨 𑌚𑍈𑌵 ।
𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌾𑌵𑍇𑌶𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍
𑌸 𑌤𑌂 𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

[கீதை 8—10]

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த உடம்பை விட்டு நாம் ப்ரயாணம் செய்யும்பொழுது மனம் அசையக் கூடாது; மலை போல இருக்கவேண்டும். பாப பயம் இல்லாவிட்டால் அப்படி இருக்கலாம். காமமும் க்ரோதமும் இல்லையானால் அந்தப் பயம் இல்லை. தர்மம் செய்துவந்தால் அவை அடங்கும். நாம் பண்ணும் பாபங்களைப் பார்த்தால் நமக்குச் சாதங்கூடக் கிடைக்கக் கூடாது. அவ்வளவு பாபங்கள் செய்கிறோம். பகவான் பரம கருணையுடையவராகையால் இவ்வளவு ஸௌகரியங்கள் பாபிகளாகிய நமக்கும் கிடைக்கின்றன. ஆதலால் பாபத்தைக் குறைத்துக் கொள்ளவேண்டும். எல்லாவற்றையும் அவருக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். அவர் ஆத்மாவுக்குள் இருக்கிறார். அவருக்கு உடம்பு முதலியவற்றை அர்ப்பணம் செய்வதால் ஆசை அற்று விடுகிறது. அப்பொழுது பாபம் இல்லை. பாபம் இல்லாதபொழுது ஸ்திரமான ஸௌக்யம் உண்டாகிறது.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ், கும்பகோணம்.
PIC. TE. 4/8-11-47 C. 5000.

ஶ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

# என்ன காரியம் செய்யலாம்?

ப்ரசுரம் 14. [விலை அணா ஒன்று]

ஸர்வஜித்-ஹு ஐப்பசி-மீ 22உ வெள்ளிக்கிழமை, 7—11—47.

நான் என்ன காரியம் செய்யலாம்?

நீ யார்?

நான் ஒரு டாக்டர்.

அப்படியானால் சுலபமாக பரோபகாரம் செய்யலாமே!

நான் பணம் (Fees) வாங்கிக்கொண்டு செய்தாலும், செய்வ தெல்லாம் பரோபகாரியந்தானே!

பிறருக்கு உபகாரமாவது வாஸ்தவந்தான். ஆனாலும் பணம் (Fees) வாங்கிக்கொண்டே செய்வது என்று வைத்துக் கொண்டால் உன் ஆத்மா சுத்தி அடையாது. உனக்கு உயர்ந்த நோக்கங்கள் உண்டாகாது. சில சமயங்களில் நீ சர்டிபிகேட் (Certificate) கொடுப்பதற்காக பணம் (Fees) வாங்கும்போது, உன் ஆத்மாவில் அழுக்குப் பாறையும் ஏறி, உன்னை மேலே வர முடியாமல், ஒரே அழுத்தாய், பாதாளத்தில் அழுத்தியும் விடும்.

ஆனால் நான் என்ன செய்வது? சுலபமாகச் சொல்லுங்கள்.

ஒரு மாதத்தில் ஒருவனுக்காவது இனமாக வைத்தியம் செய். உன் ஜன்மத்தில் ஒருவனுக்காவது வீட்டில் கற்றுக் கொடுக்கக் கூடிய அளவில், நீ பழகிய வைத்திய முறையை கற்றுக்கொடு. அவன் அதைக்கொண்டு முடிந்த வரையில் பிழைத்துப்போகட்டும்.

நான் என்ன செய்வது?

யாரப்பா?

நான் ஒரு வக்கீல்.

மாதத்திற்கு ஒரு வியாச்சியம் (Case) பாத்திரமறிந்து இனு மாகநடத்து. மாதத்திற்கு ஒரு வியாச்சியம் (Case) கோர்ட்டுக்கு வெளியேயே ராஜியாகும்படி செய். நீ வக்கீல் தொழிலில் செய்த பாபங்களெல்லாம் போய்விடும். சில வருஷங்கள் இவ் விதம் விடாமல் நியமத்துடன் செய்து வந்தாயானால், உனக்கு ஒரு நல்ல பெயர் உண்டாகிவிடும். நல்ல பெயர் வந்ததினால் மாத்திரம் பயனில்லை. அந்த நல்ல பெயரினால் பொதுமக்களுக்கு உன்னைக்கொண்டு அநேக நல்ல காரியங்களைச்செய்து வைக்கலாம்.

நான் என்ன செய்வது?

நீ யார்?

நான் ஒரு டைப்பிஸ்டு (Typist)-டைப்ரைட்டர் (Type-writer) அடிப்பவன்.

எல்லாரையும்விட அதிகமாக வெகுபேரை நீ கை தூக்கி விடலாமே! இரண்டாங்கட்டாளாக இருக்கும் ஏழைப்பிள்ளை களில் ஒருவனையாவது ஆறுமாதத்திற்குள் அடிக்கும்படி இனுமாக கற்றுக்கொடுத்து தயார் செய். அவ்விதம் தயாரானவர்கள் எல்லோரும் உன்னை வாழ்த்திக்கொண்டே இருப்பார்கள். அவ் வாழ்த்து உன்னை இவ்வுலகத்தில் மாத்திரம் அல்ல, எவ்வுலகிலும் காக்கும்.

நாங்கள் என்ன செய்வது?

நீங்கள் எல்லோரும் யார்?

நாங்கள் எல்லாரும் பென்ஷன் பேர்வழிகள் (Pensioners)

உங்களைத்தான் இத்தனைநாழிகை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். நீங்கள்தான் நம்நாட்டுக்கு கல்பக விருக்ஷங்கள். நீங்கள் மனதுவைத்தால் நம் நாடு பொன்னாடு ஆகும். நீங்கள் குடும்ப விசாரமும் கவலையும்பட்டுக்கொண்டு அழுதுகொண்டிருந்தால், எல்லோரும் அழவேண்டியதுதான். நீங்கள் பழுத்த கல்பக விருக்ஷங்களாகி, பறக்கும் பக்ஷிகளுக்கும், ஊரும் புழுக்களுக்கும், இடையிலுள்ள எல்லாப் பிராணிகளுக்கும், நிழலையும் மதுரமான ஆகாரத்தையும் கொடுங்கள். அவைகளை ஆனந்தமாக வளரச் செய்யுங்கள். நீங்கள் ரிடயர்டு இஞ்சினியர் (Retired Engineer) ஆக இருந்தால், இரண்டு பையன்களுக்காவது வீட்டில் அன்னம் போட்டு, அவர்களுக்கு ஓவர்சியர் (Overseer) படிப்புக்கு சமமாக படிப்பு கற்றுக்கொடுங்கள். அவர்களுக்கு பட்டம் (Degree) கிடைக்காவிட்டாலும். தனியான (Private) முறையிலாவது கண்டிருக்டர் (Contractor) களிடத்திலோ அல்லது கம்பெனி (Company) களிலோ, அவர்கள் பிழைத்துப் போகட்டும்.

நாம் இவ்வுலகிலிருந்து எவ்வளவோ பதார்த்தங்களை சாப்பிட்டு இருக்கிறோம். எவ்வளவோ பதார்த்தங்களை அநுபவித்து இருக்கிறோம். அப்படி எடுத்துக்கொண்ட பதார்தங்களுக்குப் பதில் நாம் உலகத்தாருக்கு என்ன செய்தோம். ஒன்றும் செய்யாமல் இறந்துபோய்விட்டால், நாம் பெரும் திருடர்கள். ஜென்மம் பாழ். இப்பொழுது காலேஜ் (College) களிலும், பள்ளிக்கூடங்களிலும் சேர்ந்துபடிப்பது முடவனுக்குக்கொம் புத்தேனைப்போல் ஆகிவிட்டது. ஏழைகள் என்ன செய்வார்கள்? உத்தியோகமே நீசத்தொழில், சுதந்தரமற்றதொழில், ஸ்வயமரியாதை அற்ற தொழில். இப்பொழுது காலேஜ்களும் (Colleges) உத்தியோக முறையும் இருக்கும் நிலையில் உத்தியோகம் கிடைப்பது கனவாகிவிட்டது. உத்தியோகம் கிடைக்காமல்போனால் எல்லாம் பழைய ஆசாரவழிக்குத் திரும்பிவிடும், என்று சில சமயம் மனப்பால் குடிக்கிறோம். அது இதுவரையில் மனப்பாலாகவே இருக்கிறது. உத்தியோகம் கிடைக்காத முறையில், நம் பையன்களெல்லாம் இன்னும்மோசமான ஹோட்டல் (Hotel), மிலிடேரி (Military), சினிமா (Cinema) முதலிய இடங்களில் போய் விழுந்து விடு

கிறார்கள். இவைகளில் சென்று விட்டால் பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக நம் பெரியோர்கள் ரக்ஷித்து வந்த ஆசார சுத்தியோ, ஆகாரசுத்தியோ, உயரிய நோக்கங்களோ எல்லாம் தாரைவார்க்கப்பட்டனவே. இவ்வித ஆபத்திலிருந்து நமது அரசாங்கம் நம்மை ரக்ஷிக்குமா? இதை அவரவர்களேயோஜித்து சமாதானம் செய்துகொள்ள வேண்டிய விஷயம். இதைப்பற்றி அதிகம் எழுதவேண்டியதில்லை. நமது கலைகள், நமது நாகரீகம், நமது தத்துவசாஸ்திரம் என்று ஆகாயத்துக்குமேல் உயர்த்தி ஒவ்வொரு பத்திரிகை வியாஸத்திலும், ஒவ்வொரு உபந்யாஸத்திலும், புகழ்ந்து கொள்ளுகிறோம். அவைகளை நாசம் செய்வதே நம்மில் முன்னேறியவர்களுடைய முதல் காரியம் நம்மில் சிலர் அவைகளை நேராக நாசம் செய்யாமல் போனாலும், அவைகள் ஆற்றில் அடித்துகொண்டு போகும் பொழுது, வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்கிறோம். இவ்விதம், அரசாங்கமானது இவ்விதமான பேர்வழிகள் கையில் இருக்கும் பொழுது, நம் அடுத்த தலைமுறை இன்னும் மோசமாகப் போகாமல் இருக்கச் செய்ய, நம்மில் கற்றறிந்து அநேக இலாகாக்களில் பதவிகள் வகித்து, தற்காலம் சாவகாசம் பெற்ற பெரியோர்களே சிறிது உபகாரம் செய்ய வேண்டும். இது தங்களுக்கு ஒரு பெரிதல்ல. இவ்விதம் பென்ஷன் (Pension) வாங்கியவர்கள் நாலைந்துபேர்கள் சேர்ந்து ஒத்துஉழைக்க முடிந்தால். பிரைவேட்டாக (Private) ஒரு டியூடோரியல் காலேஜ் (Tutorial College) ஏற்படுத்தி விடலாம். அதையனுசரித்து ஒரு ஹாஸ்டல் (Hostel) ஏற்படுத்தி விடலாம். பையன்களும், அவரவர்கள் குலாசார முறைப்படி சிறிது அநுஷ்டானத்துடன் இருக்க அபேக்ஷிக்கிறவர்களுக்கு, சிறிது சமயகல்வியும் போதிக்கப்படலாம். சிறிது அநுஷ்டான போதனையும் கொடுக்கப்படலாம். குலாசார அநுஷ்டானக் கல்விகற்க ஆசைப்படும் எவருக்கும் இக்காலத்தில் கல்வி கற்க முடிகிறதேஇல்லை. இக்குறையை நீக்கும் பாக்கியம் பென்ஷன் (Pension) பெற்று சற்று சாவகாசமாக உள்ள கற்றறிந்த உத்தியோகஸ்தர்களுக்கே உரியது. தனிப்பட்ட முறையிலோ, கூட்டுமுறையிலோ இவ்விதப்பெரியோர்கள் இப்பணியை ஏற்றுக் கொள்ளவேண்டும். டிகிரிகளும் (Degrees), டிப்ளோமா சர்டிபிகேட்டுகளும் (Diploma Certificates) ஒருபுறமிருக்

ட்டும். உண்மையான அறிவு, ஆசார அனுஷ்டானத்தைக் கெடுக்காமல் அவைகளை அபிவிருத்தி செய்து கொண்டு, ஏழைச்சிறுவர்களிடம் வளர நாம் ஒவ்வொருவரும் எவ்வளவு செய்யமுடியுமோ அவ்வளவு செய்வோம். ரசாயனசாஸ்திரமோ (Chemistry), பூததத்துவ சாஸ்திரமோ (Physics), கணிதசாஸ்திரமோ (Mathematics), பாஷாஞானமோ (Literature), கணக்குப் பார்க்கும் கலையோ (Accounts), இஞ்சினீயர் (Engineering), எலக்டரிக் இஞ்சினீயர் (Electric Engineering), சரீரப்பயிற்சியோ (Physical culture), நெசவு (Weaving), இயந்திரம் (Machine) முதலியன கைத்தொழில்களோ, ஹார்மோனியம் (Harmonium) முதலிய வாத்திய நிபுணத்துவமோ, இவ்விதம் எந்தக்கலையிலோ, நம்நாட்டில் எண்ணிறந்த நிபுணர்கள், ஓய்வு பெற்றவர்களும் மற்ற விதத்தில் சாவகாசம் பெற்றவர்களும் இருக்கிறார்கள். இவர்கள் தம் வாழ்நாளில் ஒரு சிறு பகுதியையாவது நம் பின் தலைமுறை குழந்தைகளுக்காக செலவிட்டால் தான் நம் சிறுவர்கள் ஹோட்டலி (Hotel) விருந்தும், ஸினிமா (Cinema) விவிருந்தும் தப்புவார்கள். கொஞ்சமாவது ஸ்வயமரியாதையாவது ஆகாரசுத்தியாவது மிஞ்சும். நமது கலாசாரங்களுக்கு மூலமான வேதம், சாஸ்திரம், குறள், சித்தர் சாஸ்திரம் முதலிய பண்டை நூல்களையோ, கற்றுக்கொடுக்கிறேன் என்று பாக்கியிருக்கும் சில பெரியோர்கள் சொன்னாலும், கற்கவருவோரைக்காணோம். லண்டன் மெட்ரிக் (London matric) கேம்பிரிட்ஜ் ஸீனியர் (Cambridge Senior) முதலிய பரீக்ஷைகளுக்கு இனமாகத்தயார்செய்து அனுப்புகிறேன், அல்லது நாலு வருஷங்கள் படிப்புச் சொல்லிக்கொடுத்து நாலாவது (Form) த்தில் சேர்த்து விடுகிறேன் என்று சொன்னால், நிறைய குழந்தைகள் கிடைப்பார்கள். அவ்விதம் வருபவர்களுக்கு பின்வாழ்க்கைக்கு நாம் ஒரு துணையாவதுமன்றி நமது உண்மை புராதன நாகரீகத்தினின்று அவர்கள் அதிகம் நழுவாமலிருப்பதற்கும், சற்று உதவி செய்யலாம். பணசௌகரியமுள்ளவர்கள் வேதம் முதலிய ஆதார நூல்களை யாரேனும் எங்கேனும் அபூர்வமாகக் கற்பின், கற்பவர்களுக்கும், கற்பிப்பவர்களுக்கும் அவர்கள் கூடியவரையில், கஷ்டமில்லாமல், வாழ்க்கையை நடத்த முடிந்தவரை, உபகாரம் செய்ய வேண்டும். இதுவே வேரில் ஜலம் ஊற்றுவது.

குறிப்பு:— *தர்ம நூல்களின்படி இந்த வித்யாதான தர்மத்தை எல்லோருமே செய்யலாம். அதிலும் ப்ராஹ்மண குலத்தில் பிறந்தவர்கள் கொஞ்சமாவது செய்தே தீரவேண்டும். கோ ஸம்ரக்ஷணை தர்மத்தை எல்லோருமே செய்யலாம். ஆனாலும் கீதையின்படி வைசியர்கள் அவசியம் செய்தே தீரவேண்டும். (க்ருஷிகௌரக்ஷ்ய வாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபாவஜம் ।) (கீதை 18-44) எல்லாக்கலைகளையும் தான் கற்றுக்கொண்டு, அந்தக்கலைகளை ஜீவனத்துக்காக உபயோகப்படுத்தாமல், அவ்வக்கலைக்குறிய குலத்தவர்களுக்கு அதை போதிப்பதே கடமையாகவும் ஜீவனமாகவும் கொண்டவனே உத்தம வேதியன். இவ்விதம் எல்லோரும் ஒரு கலையையாவது கற்பதையும், கற்றகலையை அவசியமாய்கற்பிப்பதையும், இப்பொழுதே கையாளவேண்டும். இம்முறையை ஒவ்வொருவரும் அனுஷ்டிப்பதால் ஒரு பெரிய அரசனுக்கும் சாதிக்கக்கூடியதை விட எவ்வளவோ மடங்கு அதிகமாக பொது மக்கள் ஞானத்திலும் சக்தியிலும் நிறைந்து நிற்கும்படி செய்யலாம்.*

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Printed at Sarada Vilasa Press, Kumbakonam —
5,000 Copies, 19—2—1948. Paper Supplied by Party.
Published by the Kamakoti Kosasthanam,
57, West Dabir Street, Kumbakonam.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

# ஜகந்நாதக்கும் ஜகஹ்ருதயமும்

ப்ரசுரம் 15. [விலை அணா ஒன்று]

ஸர்வஜித்-ஹு கார்த்திகை-மீ 6வ வெள்ளிக்கிழமை, 21-11-47.

காமம் உள்ளே ப்ரவேசிக்குமுன் காயத்ரீமாதா மூந்திக் கொண்டுவிடவேண்டும். 17-வயதிலும், 20 வயதிலும், கல்யாணத்திற்கு ஏற்பட்ட சாரதா சட்ட வயதை யெல்லாம் தாண்டி உபநயனம்செய்தால், ப்ராஹ்மண்யம் ஏற்படுமா? ப்ருஹ்மவர்ச்சஸ் ஏற்படுமா? காமவெறியினால் முகத்தில் பருவும் அல்லது ஹ்ருதயத்தில் கண்ட ஸ்த்ரீகளின் உருவங்களின் நினைவும் ஏற்படுமா? சித்தத்தில் காமம் என்னும் அசுத்தி முளைப்பதற்கு முன்னமேயே ஜகன்மாதாவினுடைய காயத்ரீ பக்தி பூர்வமாய் ஹ்ருதயத்தில் நிறுவப்படவேண்டும். 16-வயதாகி விட்டால் புத்திரனை மித்திரனாக நினைக்க வேண்டும், என்கிறது ஸ்ம்ருதி. மித்திரனான பிறகு அவனுக்கு உபநயனம் செய்தால், அது நாம் புத்திரனுக்குச் செய்ய வேண்டிய கடமையில் தவறி விட்டதாகவேயாகும். 16-வயதுக்குமேல் நாவில் ஸம்ஸ்க்ருத எழுத்தை நுழைத்தால் அது எவ்வளவு அழகாக கொஞ்சுகிறதென்பதை அனுபவிகளே அறிய வேண்டும். 8-வயதுக்குள் காயத்ரீ மந்த்ரத்தை க்ரஹிக்காதவனுக்கு எந்த மந்த்ரஸித்தியும் உண்டாகாது. பிரும்மவர்ச்சஸம் உண்டாகாது. 8-வயதுக்குள் ஸம்ஸ்க்ருத எழுத்து கற்றுக் கொள்ளாதவனுக்கு அசுத்தஉச்சாரணம் அம்பலந்தான். நம் ஸந்ததிகளில் எல்லோருக்கும் ப்ரும்மவர்ச்சஸம், மந்த்ர ஸித்தியும் இருக்கவேண்டு மென்ற திடஸங்கல்பத்துடன் தை

பிறந்தவுடனேயே 8-வயதுக்கு மேல்பட்ட எல்லா ஆண்குழந்தைகளுக்கும் பாக்கியில்லாமல் உபநயனம் செய்விக்க சிறியோர், பெரியோர், ஏழை, தனவந்தர் என்ற வித்தியாஸமில்லாமல் ஆங்காங்கு எல்லோரும் பிரயத்தனப்படவேண்டும்.

 

'உபநயனம்' என்னும் பதத்திற்கு "ஸமீபத்தில் அழைத்துச் செல்வது" என்பது பொருள். குருவின் சமீபத்திற்கு அழைத்துச் செல்லல் என்றவாறு. இவ்விதமே கல்யாணத்திற்குமுன் "ஸமாவர்த்தனம்" என்ற ஒரு கிரியையும் உண்டு அதற்கு 'திரும்பி வருதல்' என்று பொருள். உபநயனத்திற்கும், ஸமாவர்த்தனத்திற்கும் சாஸ்திரப்படி குறைந்தது 12-வருஷங்கள் இடைக்காலம் வேண்டும். 12-வருஷங்கள் குருகுலத்திலேயே வேதங்களையும் ஆறு அங்கங்களையும் கற்கவேண்டும்.

ஆறு அங்கங்களில் கணித சாஸ்த்ரம், இலக்கணம், நிகண்டு இவை முதலியன அடங்கியிருக்கின்றன. உபநயன காலத்தில் சொல்லப்படும் பிரும்மசாரீஅஸி—ஆசார்யாதீனோபவ—பிக்ஷாசர்யம்சர ("ப்ரஹ்மசார்யஸி" "ஆசார்யாதீனோ பவ" "பிக்ஷாசர்யம் சர") என்ற மூன்று வாக்கியங்களின் பொருளை இளம்பருவத்தில் சிலகாலமாவது குழந்தை அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டும். பண்டைக்காலத்தில் ராஜவம்ச குழந்தையாயிருப்பினும், குரு குலத்தில் போயிருந்து, குருவையே சரணம் என்று சில காலம் சரணாகதியாயிருந்து, வித்தை ஸ்வல்பம் கற்றாலும், அதுவே இவனுடைய வாழ்நாளுக்கு பெருந்துணையாயிருந்து, மந்த்ரசக்தியோ, தெளிவான ஞானமோ, உத்தமமானகுணங்களோ, ஏற்படுவதற்கு அஸ்திவாரமாக இருந்தது. ஒரு பரமஏழையான ப்ராமணன் குழந்தையும், ராஜவம்ச குழந்தையும், ஒரு ஏழை குருவினிடத்தில் சரணமடைந்து, ஸமமான அந்தஸ்துடன், கஷ்டங்களை ஸமமாக அனுபவித்துக்கொண்டு, பிரும்மசர்ய விரதத்தை அனுஷ்டித்த கதையை குசேலோபாக்யானத்தில் கேட்டதில்லையா? சாந்தீபினி குருவினிடத்தில் குருவாக சரணமடைந்த க்ருஷ்ணனும், ஸுதாமாவும் குருசுச்ரூஷைக்காக புயல் காற்றில்

கைங்கர்யம் செய்யவில்லையா? இனி வருங்காலத்தில் கொஞ்சமாவது மந்த்ரசக்தியும், உத்தம குணங்களும், தானென்னும் அஹங்காரத்தை யறக்கடிக்கும் பக்தியும், ஞானமும், தர்மத்திற்காக எல்லாவற்றையும் த்யாகம் செய்து போராடும் வன்மையும், எந்தக் கஷ்டம் வந்தாலும் அதைப் பொறுக்கும் பொறுமையும், கொஞ்சமாவது மிஞ்சவேண்டுமானல் ஆண் குழந்தைகளுக்கு அகாலத்தில் உபநயனம் செய்யாமல், ஸகாலமான 7-வது அல்லது 8-வது வயதில் உபநயனம் செய்வித்து, கொஞ்ச நஞ்சம் மிஞ்சியிருக்கும் வேதமோ சாஸ்த்ரமோ கற்ற பெரியோர்களிடம் அதீனமாக்கி, குழந்தைகளுக்குரிய ப்ராணாயாமம், ஆஸனம், த்யானம், ஜபம், பக்திபூர்வமான சரணாகதி இவைகளில் கொஞ்சமாவது பிரவேசம் ஏற்படும்படியாகச் செய்யவேண்டும். இப்போது குழந்தையை கொஞ்சகாலமாவது யாரிடம் கொண்டு போய் விடுவது என்பதே ஸந்தேகமாயிருக்கிறது. வேதமும், சாஸ்த்ரமும் படித்துக்கொண்டிருந்தால் சாப்பாட்டிற்கு திண்டாட்டமாயிருக்கிறதே, என்று அனேகமாய் எல்லோரும் இங்கிலீஷையோ, ஹோட்டலையோ, ஸினிமாவையோ கைப்பற்றிவிட்டார்கள். இது நம்முடைய தர்மத்திற்கழகல்ல. அழகல்ல என்பது மாத்திரமல்ல, நம்முடைய மதத்தையே வேரில் அறுக்கிறது. இவ்விதம் போய்க்கொண்டிருந்தால் வேதமும், சாஸ்த்ரமும் அறிந்தவர்கள் கிடைப்பதே அரிதாகும். இப்போக்கை உடனே நிறுத்த வேண்டியது நம் எல்லோருடைய கடமை வேத சாஸ்த்ரங்களைக் கற்கவேண்டியது, என்ற கடமையையுடைய நாம் அதைக் கல்லாததோடு நம்முடைய மதத்திற்கே நேர்விரோதமான ஆசாரங்களையும், குணங்களையும், ஆகாரங்களையும், ஜீவனத்தையும் எவ்விதமாகவோ கடைப்பிடித்து விட்டோம். முதலில் செய்ய வேண்டியது, நாமிருக்கும் நிலையில் மேற் சொன்ன நான்குவித தர்மங்கள் விஷயத்திலும் எவ்வளவு கெடாமலிருக்க முடியுமோ அவ்வளவு தூரம் மனதை திடப்படுத்திக்கொண்டு நம்மைக் காப்பாற்றிக் கொள்வது. அடுத்தபடியாக, இன்னும் கொஞ்சம் வேதத்தையோ, சாஸ்த்ரத்தையோ, அனுஷ்டானத்தையோ நம்மைப்போல் அடியோடு விட்டுவிடாது, நமக்குச் சில சமயங்களில் உபயோகப்படும்படி ரக்ஷித்துவரும் பெரியோர்கள் அடியோடு குறைந்துவிடாமல், அவர்கள் ஜீவித்துவரும் பொறுப்பு

நமக்கும் உண்டென்பதை உணர்ந்து, கூடியவரை நமக்குத்தெரிந்த அவ்விதமான பெரியோர்களுக்கு நம் சக்திக்கேற்றபடி ஆதரவளித்து, அவர்களுடைய ஆசிக்கு நம்மை பாத்திரர்களாக்கிக் கொள்ளவேண்டும். இப்போது நாட்டில் எவ்வளவோவிதமான த்யாகிகள் ஏற்பட்டிருக்கின்றனர். "நமது குலதர்மமான வேதத்திலோ, சாஸ்த்ரத்திலோ, என் பையனைப்போட்டுவிடுகிறேன், பகவான் விட்டவழி விடட்டும்", என்று இவ்வித அலங்கோலத்திலும்கூட "நமது வம்சத்தில் ப்ருமன் முதல் நம்வரை தொடர்சியாக வந்த வேதநூல் அறுபடாது காப்பதே பெரிது", என்ற மனோதிடத்துடன் த்யாகம் செய்கிறவர்களே தீர்க்க தரிசனமுள்ள உண்மைத்தியாகிகள்.

ஒவ்வொரு மதத்திற்கும் ஒவ்வொரிடத்தில் உயிர்நிலை இருக்கிறது. கிறிஸ்துவமதத்திற்கு ராஜாங்கத்தை அனுஸரித்து பணம் முதலியவைகளால் ஜனங்களை ஸ்வாதீனப்படுத்துவதில் உயிர். அதற்குப் பஞ்சகாலமே வளர்ச்சிகாலம். முகம்மதிய மதத்திற்கு கட்டுப்பாட்டிலும், முரட்டுத்தனத்திலுமே உயிர். அதனாலேயே கலககாலம் அதற்கு வளர்ச்சிகாலம். வைதிகமான ஹிந்து மதத்திற்கோ ஆசாரத்திலும், அதன்மூலமான மந்த்ரஸித்தியிலும், அதன் மூலமான தத்வஞானத்திலும் உயிர். இதற்கு வளர்ச்சி சாந்தமான ஸமாதான காலத்திலேயே. ஹிந்து மதத்திலிருந்து வெளிமதத்திற்குப் போகிறவர்கள் அனேகமாக பணம் முதலிய மோஹங்களால் ஏமாற்றப்படத்தகுந்த கீழ்தரத்திலுள்ளவர்களே. இதர மதங்களிலிருந்து ஹிந்து மதத்தில் பேரன்புகொண்டு, பிறப்பை அடிப்படையாகக்கொண்ட வர்ணதர்மத்தில் சேர இயலாவிடினும், பொது ஹிந்து தர்மங்களையே சரணமடைந்து, தாமே சேர்ந்திருக்கும் சிலரும் இதரமதங்களில் பூர்ணமாகப் படித்துக்கரைகண்ட உத்தம ஞானிகளாகவே இருக்கிறார்கள்.

  

ஆதலால் ஆசாரமும், மந்த்ரசக்தியும், தத்துவ ஞானமும், அழியாது வளர்ந்துவரவேண்டி அதைரக்ஷிக்க கடமைப்பட்டுள்ள அந்தணர்கள் தம் குழந்தைகளை காமம் புகாத 8-வயதுக்குள் உபநயனம் செய்வித்து, கொஞ்ச காலமாவது குருகுலவாசத்தில் காயத்ரீ அம்பிகையின் த்யானசக்தியையும், மந்த்ரஸித்தியையும்

ஆரம்பித்துக்கொண்டு, பின்னர் கூடியவரை அதிக தோஷங்களுக்கு இடமில்லாது உலக நடவடிக்கைக்கு வேண்டிய முறையில் வித்தையையும், ஜீவனத்தையும் சீர்படுத்திக்கொண்டு, அந்தணரில் சிலராவது பூர்த்தியாக வேதசாஸ்த்ராநுஷ்டானங்களைப் பயிலும்படி ஆதரவளித்துக்கொண்டு, நமது வேத தர்மத்திற்கு ரக்ஷை புரியவேண்டும். ஒவ்வொரு உபநயனத்திற்கு முன்பும், முன் இரண்டு நாட்களில், வேத தர்மங்களின் அர்த்தம் தெரிந்த பெரியோர்களை வரவழைத்து, உபநயன ப்ரயோகத்தில் ஆதிமுதல் அந்தம்வரையில் வரும் மந்த்ரங்களின் அர்த்தங்களையும், கிரியைகளின் தாத்பர்யங்களையும் உபநயனம்செய்து வைக்கும் பிதாவும், உபநயனம் செய்து கொள்ளும் குழந்தையும் பொறுமையாக கேட்கும்படி ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும். இப்போதும் ஆங்காங்கு அரிதாக மந்த்ரார்த்தம் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள். ஸங்கீதம், நர்த்தனம் முதலிய கலைகளை ஆதரிப்பதைவிட உபநயனத்தில் குழந்தைகளுக்கு மந்த்ரார்த்தம் பதியும்படி செய்வது ஆழ்ந்த பயனைத்தருவது.

இவ்வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையில் தர்மக்ஞ பரீக்ஷை, க்ருஹ்யக்ஞபரீக்ஷை என்ற இரண்டு பரீக்ஷைகள் வகுக்கப்பட்டு, தேறியவர்களுக்குச் சிறிது ஸம்மானமும் அளிக்கப்பட்டு வருகிறது. அவ்விதம் பரீக்ஷைகள் தேறியவர்கள் இன்னென்ன பிராந்தியங்களில் வசித்து வருகிறார்கள், என்று அந்தந்த பிராந்தியங்களிலுள்ள ஆஸ்திகர்கள் கோரினால் அவர்களுடைய விலாஸங்கள் அறிவிக்கப்படும்.

**8-வது வயதுக்குள் உபநயனம். களங்கமற்ற அந்த வயதிலேயே காயத்ரீ தேவியின்மந்த்ரஸித்தி. இதுவே நம் மதத்திற்கு உண்மையான ரக்ஷை.**

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

---

Printed at Sarada Vilasa Press, Kumbakonam —
5,000 Copies, 19—2—1948. Paper Supplied by Party.
Published by the Kamakoti Kosasthanam,
57, West Dabir Street, Kumbakonam.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம.

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

# ப்ராஹ்மணர்களும் இங்கிலீஷ்படிப்பும், ஜீவனமும்.

ப்ரசுரம் 16. [விலை அணு ஒன்று]

ஸர்வஜித்-ஹு கார்த்திகை-மீ 20௳. வெள்ளிக்கிழமை, 5-12-47.

இந்தக்காலத்தில் இங்கிலீஷ் படிக்காமல் ப்ராஹ்மணன் இருக்கமுடியுமா? எத்தனையோ ஜாதிகள் இங்கிலீஷ் படிக்காமல இருக்கிறார்கள். குறவர், இருளர், வில்லிகள் முதலியவர்களுக்கும் பகவான் படி அளக்கிறாரா இல்லையா! அப்படி படி அளக்காமல் போனால்தான் என்ன நஷ்டம்? 'பிறரிடம்போய் ஊதியம் வாங்கிக்கொண்டு ஜீவிப்பதில்லை', என்று அறுதிப் பிராஹ்மண தர்மத்தைக் கைக்கொண்டதனால் என்ன நஷ்டம்? மரணமே ஏற்பட்டாலும் அதனால் என்ன நஷ்டம்? எதுவும் என்றாவது முடியுமல்லவா? வியாதியிலும், யுத்தத்திலும் பிரயோசனமில்லாமல் எவ்வளவு மனிதர்கள் மடிகிறார்கள்! பரிசுத்தமான ப்ராஹ்மண தர்மத்திலேயே நிற்பது, என்று ஸங்கல்பத்தினால் மடிந்தால் தான் என்ன?

என்ன ப்ராஹ்மண தர்மம் அவ்வளவு பரிசுத்தம்? இப்பொழுது இங்கிலீஷ்படிப்பு உத்தியோகத்தினால் என்ன அபரிசுத்தம் வந்துவிட்டது? நூறு வருஷங்களுக்குமுன்பு ப்ராஹ்மணர்களிடம் ஜீவனத்திற்குப் பட்டாநிலம் எவ்வளவு இருந்தது? இப்பொழுது எவ்வளவு இருக்கிறது? இதை மெதுவாக ஸெட்டில்மெண்டு ஆபீஸில் விசாரித்துப்பாருங்கள். நன்றாக விசாரித்துப்

பார்த்தால் 'ஆசார பரிசுத்தி கெட்டது மாத்திர மல்லாமல், சமூகத்திற்குச் சாச்வதமான ஆஹார தர்மத்தையும் கெடுத்துவிட்டது இங்கிலீஷ் படிப்பு உத்தியோகம்.', என்பது தெரியும். நிலம் போனது கல்யாணத்தால் அல்லவா? இங்கிலீஷ் படிக்காமல் இருந்திருந்தாலும் போய்தானே இருக்கும்? முதலில் ஒருவன் தன் நிலத்தை விற்றோ, அல்லது முடிந்தால் யாசித்தோ, இங்கிலீஷ் படித்துப் பரீக்ஷையில் தேறிவிட்டால், அவனுக்குச்சம்பளம் நிறையவந்து, அவன் சாச்வதபணக்காரனாக ஆகிவிடப்போகிறான், என்ற மோகத்தால் அவனுக்குக் கல்யாணப்பரிசு, என்பது ஏற்பட்டது. அதிலிருந்து பெண்காரருடைய நிலமும்போக ஆரம்பித்தது. விஷ்ராம விவாஹ வ என்றச்லோகப்படியே சாச்வத தாரித்திரியத்திற்குப் பிள்ளையார்சுழி போடப்பட்டது. தானும் கெட்டுத் தன் மாமனார் பிராணனையும் கெடுத்துவிட்டான் இங்கிலீஷ்படித்தவன். இவனால் இங்கிலீஷ் வாசிக்காதவனுக்குக்கூட பரிசு ஏற்பட்டு விட்டது.

நூறு வருஷங்களுக்குமுன் எவ்வளவு ப்ராஹ்மணர்களுக்கு ஒரு கூரைவீடாவது சொந்தவீடு இருந்தது? இப்பொழுது எவ்வளவு பேருக்குச் சொந்தவீடு இருக்கிறது? இந்த விஷயம் பர்மாவிலிருந்தும் பட்டணத்திலிருந்தும் அகதிகள் வந்தபோது தான் நன்றாகத் தெரிந்தது. வேறு எந்த ஜாதிக்காவது வீட்டு நிலைமை இவ்வளவு மோசமாக இருக்கிறதா? வீடு, நிலம், பட்டா இவைகளை யெல்லாம் ஸர்டிபிகெட்டுகளாக மாற்றி, உலகத்தையே த்ருணமாகநினைத்த ரிஷிகளுடையவம்சத்தில் பிறந்தவர்கள் எல்லாரும், "துரையே! அன்னம் கொடு" என்று துரைகளின் வாயில்களில் இருக்கிறார்கள். துரை ஆரம்பத்தில் ப்ராஹ்மணர்களுடைய உயர்ந்த மனோபாவம் குறையவேண்டியும், அக்காலத்தில் காரியம் ஆகவேண்டியும், உத்தியோகத்தைக் கொடுத்து உத்ஸாகப்படுத்தினார். இந்த நூற்றுண்டில் பர்மாவுக்குப்போய் உத்தியோகம் கேட்டால் நீங்கள் இந்தியர்களாயிற்றே, பர்மாகாரர் ஆக்ஷேபிப்பார் என்கிறார். இந்தியாவின் இராஜதானியாகிய டில்லிக்கும், கல்கத்தாவுக்கும் போய் உத்தியோகம் கேட்டால், 'நீங்கள் மதராஸிகளாயிற்றே, வட இந்தியர் ஆக்ஷேபிப்பர்,' என்கிறார். மதராஸுக்குவந்து உத்தியோகம் கேட்

டால், 'நீங்கள் ப்ராஹ்மணர்களாயிற்றே, அல்லாதார் ஆக்ஷேபிப்பர்' என்கிறார். திரும்பி ஊருக்குப்போக வேண்டுமென்றால், ஊரிலிருந்த வீடும், நிலமும் எப்பொழுதோ சாஸனமாகி விட்டன.

இங்கிலீஷ் படிப்பினால் அபரிசுத்தி என்று ஆரம்பித்து விட்டு. சமூகத்தின் தாரித்திரியமே இதுவரையில் சொல்லப்படுகிறதே? தாரித்திரியம் இரண்டு விதம்: (1) தற்கால தாரித்திரியம், (2) சாச்வத தாரித்திரியம்.

தற்கால தாரித்திரியம் அவ்வளவு அபரிசுத்தியைக் கொடுக்காது. என்ன தாரித்திரிய மிருந்தாலும், நமது பரம்பரையின் மான மரியாதைகளைக் காப்பாற்றிக்கொண்டு வந்தே இந்த தாரித்திரியம் இருக்கும்.

தியாகையர்வாளை மஹாராஜா எவ்வளவு கூப்பிட்டும், 'அரண்மனை செல்லேன்,' என்று சொன்னார். ஆற்காடு நவாப் முன்னண்டிரத்தில் மஹாவித்வான் வந்ததிற்கு ஒருபெரிய சால்வையைப் போட்டு, நவாப் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே அதை ஒரு குளத்தில் பரிஹரித்துவிட்டுப் பிராயச்சித்தம் செய்து கொண்டார்.

சாச்வத தாரித்திரியமாவது வெளிக்குப் பணப்புழக்கம் அதிகமாக இருந்துகொண்டே சமூகததிற்குப் பரம்பரையாக உள்ள ஜீவனாதாரம் செல்லரிக்கப்பட்டு, அஸ்திவாரம் இல்லாத கட்டிடம்போல் ஆகிவிடுகிறது. அப்பொழுது எவ்விதமான உதைவாவது முட்டாவது கொடுத்து, அக்கட்டிடத்தைப் பார்வைக்குப் போர்த்தி வைக்கும்படியான பரபரப்பு ஏற்படுகிறது. அம்முட்டுக்களே மிகவும் அதர்மமாகவும் அபரிசுத்தமாகவும் ஆகின்றன. ஆகையால் இவ்வித தாரித்திரியமே ஒரு பெரிய அபரிசுத்தம்.

வேதத்தையும். கர்மானுஷ்டானத்தையும், பசு மாட்டையும், வயல் பூமியையும், தோட்டக்காட்டையும், கூரை வீட்டையும், சிவபூஜையையும் விட்டு விட்டு, உத்தியோகத்தையும் எதிர்ஜாமீனையும் மோஹத்தோடு ஆச்ரயித்த பொழுது அது ஆனந்தமாயிருந்

தது. இப்பொழுது காலேஜில் சேருவதும், உத்தியோகம் பெறுவதுமே அத்திப்பூப்போல் அரிதாய்போன பொழுது பழைய வாழ்க்கைக்குப்போக முடியாமல் இப்புது மோஹவாழ்க்கை நிலையிலேயே, முட்டுக்கொடுத்த நிலையிலிருக்க வேண்டிய அவசியம் ஏற்பட, உத்தியோகம் கிடைக்காமல் போனல், ஸினிமா, அதுவும் கிடைக்காமல் போனல் மிலிடெரி, அதுவும் கிடைக்காமல் போனல் சோற்றுக்கடை, அல்லது காப்பிக் கடை. இந்த ஜீவன முறைகளில் ஆசார பரிசுத்தியோ, அனுஷ்டான பரிசுத்தியோ, ஒழுக்க சுத்தியோ, எவ்வளவுதூரம் எதிர்பார்க்க முடியும்! இவ்வளவும் இங்கிலீஷ் படிப்பு ஜீவனம் வந்த காலத்தில், அந்த மோஹத்தை எதிர்த்து நின்று, ஊழியம் வேண்டாம், ஊதியம் வேண்டாம், கந்தையும், கூழும், பசு மாடும் போதும், அல்லது மரணமும் போதும்', என்று தன் நிலையில் நிற்காத குற்றமே.

அதே மாதிரி இன்றும் இங்கிலீஷ் படிக்காமல் சாமான்ய ஜீவனம் செய்து, எவ்வளவு ஜாதிகள் பிழைத்துக் கொண்டிருக்கவில்லை? இவ்விதம் சாச்வத தாரித்ரியத் தன்மையை உண்டுபண்ணின இச் சப்பள ஜீவனமே முதல் அபரிசுத்தி.

அது குட்டிபோட்ட அபரிசுத்திகளைக் கணக்கிட முடியாது. இது அப்பாஷையின்மீது பழிசுமத்துவதன்று. அப்பாஷையை ஜீவனோத்தேசமாய் கற்றதே தப்பாகும். கற்பதும்தப்பு; கற்கப்போவதும் தப்பு; எதுவரினும் உத்தியோகத்திற்குப் போவதில்லை; தேசத்திற்குச் சுதந்திரம் பின்னுல் வந்தாலும் நம் குடும்பத்தின் ஜீவனத்திலாவது சுதந்திரம் வைத்துக் கொள்வோம்; நம்முடைய அனுஷ்டானத்திலும் ஆஹாரத்திலுமாவது சுதந்திரத்தை வைத்துக்கொள்வோம்; இதை மனதில் வைத்துக் கொண்டால் போதும்.

ப்ராஹ்மணர்கள் இங்கிலீஷ் படித்தாலென்ன, படிக்காமற் போனாலென்ன? உத்தியோகம் செய்தாலென்ன, செய்யாமற் போனாலென்ன? அவர்கள் ஜீவித்தாலென்ன, மரித்தாலென்ன? அவர்கள் வீடு நிலம் போனாலென்ன, இருந்தாலென்ன? ப்ராஹ்

மணன் இங்கிலீஷ் படிக்காமலும், ஊழியம் செய்யாமலும் இருப்பதனால் பொதுமக்களுக்கு என்ன பிரயோசனம்?

ல்:— பொதுமக்களுக்கு நல்ல பிரயோஜனம் உண்டு. பொதுமக்கள் ஆஸ்திகர், நாஸ்திகர் என இருவகைப்படுவர். ஆஸ்திகர்களுக்கு "வேதமோதிய வேதியர்க்கோர்மழை" என்ற படியும், "வாழ்க அந்தணர் வானவரானினம்-வீழ்க தண்புனல்,' என்றபடியும், "பார்ப்பான் பிறப்பு ஒழுக்கம் குன்றக்கெடும்" என்ற திருக்குறளின் படியும், ப்ராஹ்மணர்கள் வாக்கிலும் நடத்தையிலும் இங்கிலீஷ் வாஸனை குன்றி, வேதமும் ஒழுக்கமும் வளர்ந்தால், வானுலகமும் இவ்வுலகமும் செழிக்கும்.

ப்ராஹ்மணர்கள் இங்கிலீஷ் அனுசாரத்தைக் கைவிட்டுப் பரம்பரை ஒழுக்கத்தைக் கடைபிடித்தால், பார்ப்பனரிடம் ஒழுக்கக் குறைவைக்கண்டு, அதனால் ப்ராஹ்மணத் துவேஷமும் அதனால் நாஸ்திகத் தன்மையும் வளர்த்துக் கொண்டிருப்பவர்களுக்குக்கூட நாஸ்திக்கியம் குறைந்து, அவர்கள் நரகத்திற்குப் பாத்திரமாகாமலும், அவர்கள் குடும்பத்திலும் பெண்டிர்களுக்கு ஒரு அபிப்பிராயம், நாகரிக புருஷர் களுக்கு ஒரு அபிப்பிராயம், என்ற வேறுபாடின்றியும், குடும்பம் ஒற்றுமை அடைந்து, துயரின்றி வாழ்வார்கள்.

பிடிவாதமான நாஸ்திகர்களுக்குக்கூட ஒரு பிரயோஜனம் உண்டு. ஒரு புது நாகரிக முறையை ப்ராஹ்மணர்கள் பின்பற்றி, அதனால் தங்களுடைய சமூகத்தையும் கெடுத்துக்கொண்டு, நிர்கதியாகவும் ஆகிவிட, மற்றைய பொதுமக்கள் அதே முகத்தைப் பின்பற்றித் தாங்களும் கொஞ்சம் கொஞ்சமாய் அந்த நிலைமைக்கு வந்து விடுகிறார்கள். கெடுவதில் போட்டி போடுகிறார்கள்

ப்ராஹ்மணர்கள் தங்கள் வேதத்தையும் ஆடம்பரமில்லாத ஜீவனத்தையும் விட்டு விட்டு, இங்கிலீஷ் படித்து ஆடம்பர ஜீவனம் செய்கிறார்கள், என்று வேளாளர்களும், செட்டியார்களும், நாயர்களும் ஏராளமாகத் தங்கள் பண்ணையையும், பெருத்த வியாபாரங்களையும் விட்டு விட்டு, இங்கிலீஷ் படித்து, பட்டம் பெற்று, ஆரம்பத்தில் அல்லாதர் தலைவர்கள் என்ற முறையில்

வெகு வேகமாக உத்தியோகம் கிடைக்கப்பெற்று, வர வர மூகமதியர், கிறிஸ்தவர், ஒதுக்கப்பட்ட ஜாதியினர், என்ற முறையினர் படிக்கப்படிக்க இவர்கள் பட்டத்தை மாத்திரம் கையில்வைத்துக்கொண்டு, பண்ணையும் தெரியாமல், வியாபாரமும் தெரியாமல், குடும்பத்தின் பாரமாகத் திண்டாடுவதில் ப்ராஹ்மணச் சிறுவர்களைத் தோற்கடித்துவிடுகிறார்கள். அதுவே வேண்டாம். இப்பொழுது பறையர்களைப் படிப்பிக்கவேண்டுமென்று அரசாங்கத்தார் பக்ஷம் காட்டுகின்றனர். எல்லாப் பறையர்களும் எம்.ஏ. (M. A.) பட்டம் பெற்றுவிட்டால் எவ்வளவு பறையர்கள் இருக்கிறார்களோ அவ்வளவு உத்தியோகங்கள் இருக்கின்றனவா? அவர்கள் திரும்பி வீட்டுக்குத்தானே வரவேண்டும்! உத்தியோகமும் கிடைக்காமல், உழவும் தெரியாமல் போய்விட்டால் என்ன செய்வார்கள் பாவம்! சட்டைக்கும், கிராப்புக்கும், வாஸனை திரவியத்திற்குங்கூட காசு கிடைக்காதே! ஆகையால் பொதுவாக ப்ராஹ்மணர்கள் கெடுவதால் எல்லோரும் கெடுகிறார்கள். ப்ராஹ்மணர்கள் கெடாத வழியில் நடந்தால், நாஸ்திகர்கள் உள்பட எல்லா பொதுமக்களும் கெட்டவழியில் போட்டிபோடாமலும் வீணுகப்போகாமலும் இருப்பார்கள்.

அப்படியானால் எல்லா மக்களும் படிக்கவேண்டாமா? படிக்கவே வேண்டாமா? எல்லோரும் படிக்கத்தான் வேண்டும். என்ன படிக்கிறது? குடும்பச்சொத்தைச் செலவழிக்காத படிப்பு படிக்கவேண்டும். கடன்படாத படிப்பைப் படிக்கவேண்டும். பரீக்ஷையில் தேறிய பட்டக்கடுதாசை ஜீவனத்துக்கு உபயோகப்படுத்துவோம், என்ற எண்ணமாயில்லாமல் படிக்கக்கூடிய படிப்பை படிக்கவேண்டும். அவர்களுடைய குல பரம்பரை, ஆசாரங்கள் கெடக்கூடிய ஸஹவாஸங்களையும், ஆஹாரங்களையும் பழிக்காத இடங்களில் படிக்கவேண்டும்.

அப்படியானால் மிஞ்சியது என்ன படிப்பு? அவரவர்களுடைய பரம்பரைத் தர்மங்களையும் தொழில்களையும் நன்றாக நடத்தக்கூடிய படிப்பு. விச்வகர்மாக்கள் சிற்பப்பள்ளிகளில் படிக்கட்டும். இசைவேளாளர்கள் ஸங்கீத கலாசாலைகளில் படிக்கட்டும். செங்குந்தர்கள் நெசவு பள்ளிகளில் படிக்கட்டும்.

வேளாளர்கள் விவசாய பள்ளிகளில் படிக்கட்டும். வேதியர்கள் நான்கு வேதங்களையும், ஆறு அங்கங்களையும், உபாங்கங்களையும் எல்லா குலத்தவர்க்கும் அவரவருக்கு வேண்டிய அறிவை ஊட்டும் எல்லாக்கலைகளடங்கிய நான்கு உபவேதங்களையும், வேதமறிந்து அனுஷ்டானமுள்ள பெரியோர்களின் இல்லமாம் குருகுலத்தில் கற்கட்டும். அம்பஷ்டர்கள் வைத்ய பள்ளியில் படிக்கட்டும். சக்கிலியர்கள் தோல்சாலைகளில் கற்கட்டும். அரசாங்கத்தில் செல்வாக்குள்ளவர்கள் அந்தந்தப் பள்ளியில் அந்தந்த வம்சத்தவர்களுக்குப்போக மிஞ்சியதையே பிறருக்குப் பங்கிடுவோம், என்று சொல்லுமாறு, முயற்சிகளையும் கிளர்ச்சிகளையும் செய்யட்டும். அவ்வக்கல்வி சம்பந்தப்பட்ட உத்தியோகங்களைக் கொடுக்கும் விஷயங்களிலும் அந்தந்த வம்சத்தவர்களுக்கு முதல் சலுகையை காட்டட்டும்.

இந்த ராஜாங்கம் வர்ணாச்ரம ராஜாங்கம் இல்லையென்பது எல்லோருக்கும் தெரிந்ததே. பொதுமக்களுக்குத் தலைவர் என முன்னணியில் நிற்பவர்கள் இக்காலத்தில் இருக்கும் மோக நிலைமையில் இதையெல்லாம் காதால் கேட்பதற்கு முன்னமே தூற்ற ஆரம்பித்துவிடுவார்கள். ஆனாலும் ஒருவர் ஒருகாலத்தில் இகழினும் புகழினும் உண்மை உண்மையே. அதை உணர்வதே பெரும்பணி. உணர்வு எந்த மூலையில் இருந்தாலும், அது ஒரு காலத்தில் படையையும் இடிக்கும் தொழிற்போட்டியே உலகம் பாழாவதற்குக்காரணம். தொழிற்போட்டியே பல கலகங்களுக்குக்காரணம். தொழிற்போட்டியினால் இங்கிலாந்து இந்தியாவை உறிஞ்சினால், தொழிற்போட்டியினால் இட்டாலி ஆப்ரிக்காவை உறிஞ்சினால், மற்றொருநாள் கலகப்பிசாசோ, அதன் பிள்ளையான யுத்தப்பிசாசோ, எல்லா லாபத்தையும் சேர்த்து உறிஞ்சிவிடுகிறது. முதலில் காமம்; அதன் கைகண்ட பலன் துக்கம்; காமம், கோபம், துக்கம் எல்லாவற்றிற்கும் விதை பணிப்போட்டி. வர்ண முறையின் சுதர்மமே இதற்கெல்லாம் கைகண்ட மருந்து. பரம்பரையை ஒட்டிய தொழிலிலேயே நாம் ஜீவிக்கவேண்டும். மேன்மைவரினும் அதிலேயே வரட்டும், புன்மை வரினும் அதிலேயே வரட்டும், மரணம் வரினும் முகமலர்ச்சியோடு வரவேற்போம். வையகம் பெறினும் பிறர்தொழில் வேண்டாம். மேளம்

நன்றாய் வாசித்தால் கச்சேரிக்கு ஐந்நூறு ரூபாய்கள் கொடுப்பார்கள்; அதற்காகச் சைவப்பிள்ளைமாரோ, கோமுட்டிச் செட்டியாரோ, தொண்டை மண்டலம் முதலியாரோ, பிள்ளைகளுக்கு நாயனம் வாசிக்கப் பழக்கி வைப்பாரா? தாம் ஏழையாயிருப்பினும் பிறர் தொழிலில் இச்சை கொண்டிலதான் மக்கள் இன்று வரை போட்டி போடாமல் இருக்கிறார்கள். ஆதலால், இது ஒன்றுதான் திருஷ்டாந்தத்துக்கு அகப்படுகிறது. இதைப் போலவே உத்தியோகத்தை நினைக்கவேண்டும்.

தம் தம் தொழிலுக்கு வேண்டிய கல்வியைத் தவிர வேறு ஒரு கலையைத் தெரிந்துகொள்ளக்கூடாதா? முதலில் தம் தொழிலுக்கு வேண்டிய கல்வியையே கற்கவேண்டும். அந்தந்தத் தொழிலில் நவீன ஆராய்ச்சி எவ்வளவு வரை சென்றிருக்கிறதோ அவ்வளவு தூரம் முடிந்தவரை கற்கலாம். அம்முறையை நன்கு அறிந்த தனிப்பட்டவர் ஓரிடத்தே கிடைக்காமற்போன விஷயத்தில் பள்ளிக்கூடத்தில் சென்று கற்கலாம்.

கல்வியை எப்படியாவது கற்றுக்கொண்டுவிடலாம். ஆசாரம் அல்லது ஒழுக்கம் தவறினால் அது ஈடு செய்யக்கூடியதே இல்லை. "மறப்பினும் ஓத்துக்கொளலாகும் பார்ப்பான்—பிறப்பொழுக்கம் குன்றக்கெடும்" அல்லவா?

ஆதலால் பள்ளியில் சேரின் தம் வம்சத்தின் ஆசாரம் கெடாதபடி, எவர் இகழையும் புகழையும் பொருட்படுத்தாது, கிடைத்த கல்வியையே கற்கவேண்டும். தம்தம் தொழிலுக்குவேண்டிய கல்வியைக் கற்ற பின்னர் முடிந்தால் தர்மநூல்களில் தம் குலத்துக்கு விலக்கப்படாத கல்விகளை எல்லாம் கற்றுக்கொள்ளலாம். ஆனாலும் அக்கல்விகளை ஒட்டிய தொழிலில் பிரவேசிக்கக்கூடாது அவ்விதம் பிரவேசிப்பதே போட்டி. அங்கேயே ஆபத்து. முன் யுகங்களில் வர்ணாச்ரமமும் வம்ச சுத்தியும் உலகம் முழுவதுமே இருந்தன. பரதர்மம் என்றும் தொழிற்போட்டியும் இல்லாமல் இருந்தது. அதனால் பொய், திருட்டு, வறுமை, முதலியவை இல்லாமலும் உண்மை நிலைமையை ஒழுக்கமும் நிறைந்து இருந்தன. பொருள் நூல் என்றும் அர்த்த சாஸ்த்ர நூல்களில் க்ருதயுகத்தில்

வழக்கே இல்லாமையால் நீதி மன்றங்களுக்கு அவசியமே இல்லை என்று கூறப்பட்டிருக்கிறது.

தமது தரும நூல்படி பிறர் பொருள் பிறர் மனைவி என்பன எப்படி விலக்கப்பட்டவையோ, அப்படியே பிற குலத் தொழிலும் விலக்கப்பட்டது. ஆபத்துக்களில் ப்ராண ரக்ஷணத்திற்காக சிலதொழில்கள்வரையில் அவ்வவ்வர்ணங்களுக்கு அனுமதிக்கப்பட்டிருப்பினும், ஊழியத்தொழில் எக்காலத்திலும் வேதியரானை யதன்று, என்பதைத் திண்ணைப்படுத்தியிருக்கிறது. நூறு வருடங்களுக்கு முன் நம் நாட்டில் வேதியர்க்கு ஊதியத்தொழில் இல்லை. தஞ்சையில் பெரியகோவில் கட்டிய ஸ்ரீ ராஜ ராஜ சக்ரவர்த்தி சுவாமி நைவேத்திய பரிசாரத்திற்குக் கூட ப்ராஹ்மணன் ஊதியத்திற்கு வேலை செய்யக்கூடாதென்று தம் ராஜ்யத்திலுள்ள அகரங்க (அக்ரஹாரங்கள்)ளிலுள்ள பிரம்மசாரிகள் எல்லாம் முறை போட்டுக்கொண்டு பெரிய உடையாரெனும் பிரஹதீசுவரருக்கு பரிசாரகம் செய்யவேண்டும் என்று கல்வெட்டு மூலம் கட்டளையிட்டிருக்கிறார். தில்லைவாழ் அந்தணர், திருச்செந்தூர் முக்காணியர், நான்கூர் நாலாயிரவர், திருவீழிமிழலை ஐந்நூற்றுவர் என்றும், வீழியர் திட்டக்குடி ஐயாயிரவர் என்றும், பண்டை நூல்களில் வழங்கப்பட்ட அந்தணர் திருக்கூட்டத்தவர்கள்போல ஒவ்வொரு கோயிலிலும் கல்வெட்டுக்களில் தானத்தோம், சபையோம் எனக் காணப்படும் கல்வி கேள்வி அறிந்த அந்தணர் குழுவினர் தம்தம் மரபுக்குரிய தொழிலையும் அறத்தையும் நடாத்திக்கொண்டு, ஆண்டுக்கு ஒரு நாளோ, இரு நாட்களோ, நான்கு நாட்களோ, தம் கூட்டத்தொகைக் கணக்கு முறைப்படி ஊதியமின்றிச் சிவத் திருமேனிக் கைங்கர்யம் செய்துவருவர். இன்றும் தாமிரவர்ணிக்கரையில் சில அகரங்களில் பொதுச் சத்திரம் நடந்து வருகிறது. அக்ரஹாரத்திலுள்ள முறைக்காரர்கள் தங்கள் முறைப்படி சத்திரம் சென்று, சமைத்து, அதிதி அப்யாகதர்களுக்கு அன்னமிட்டு உபசரித்துச் சுத்திசெய்து விட்டுத் தாம் அங்குச் சாப்பிடாது வீடு வந்தே சாப்பிடுகிறார்கள்.

மனிதன் தன்னுடைய அறத்திற்கும் தொழிலுக்கும் வேண்டிய கல்வி முதலில் கற்கவேண்டும். யோ—அனதீத்ய—த்விஜோ

—வேதான் — அன்யத்ர —குருதே—ச்ரமம், என்பது மனுவாக்கு. வேதம் ஓதாமல், வேறு வித்தைகளை அப்யஸிக்கும் வேதியனை நிந்திக்கிறார் மனு. தத்தம் அறத்திற்கும் தொழிலுக்கும் உற்ற கல்வியே அவரவருக்கு ஏற்ற கல்வி. எல்லா வர்ணங்களுக்கும் பொதுவாக எல்லா மாணவர்களுக்கும், ஒவ்வொரு நாள் சாயங் காலத்தில் ஊரில் பொதுவாகக்கேட்கப்படவேண்டிய எல்லா தத்வங்களுமடங்கிய புராண இதிஹாஸ படனமே தர்மநூல்களின் படி பொதுக்கல்வி. எல்லா வர்ணங்களுக்கும் அநுலோம ப்ரதிலோம குலத்தவர்க்கும் தனித்தனி அவசியமான அறுபத்து நாலு கலைகளுமடங்கிய பதினெட்டு வித்தைகளையும் ஒரு வேதியன் கற்றுணரினும், அத்தொழில்களைக்கொண்டு தன் ஜீவனத்தை நடத்தாது, அவ்வவைகளை அவ்வவர்க்குக் கற்பிக்கும் தொழிலை மேற்கொண்டு கற்பித்ததின் முடிவில் அவர்கள் கொடுக்கும் குரு தக்ஷிணையைக்கொண்டு தன் வாழ்க்கையை நடத்தவேண்டும்.

இவைகளையெல்லாம் இந்த யுகத்தில் லக்ஷத்தில் ஒருவர் சாதித்தாலும் சாதிக்கட்டும், சாதிக்காவிட்டால் போகட்டும். சென்ற ஒரு நூற்றாண்டுக்குள் பிற நாகரீகப் புரட்சியில் கலந்து விட்டதின் கைகண்ட பலனான ஆசார வறுமையையும், ஆஹார வறுமையையும் சாச்வதமாக தீர்க்கும் இயக்கத்தின் முதல் அறி குறியாக அந்தணர் தங்களுக்கும் உலகத்திற்கும் வழிகாட்டியாய் நின்று, ஊதியத்தொழிலையாவது முதலில் விடவேண்டியது. தம் அறத்தையும் தம் வைதிக நெறியையும் அனுஷ்டிப்பதற்கு விரோத மான பழக்கவழக்கங்களினின்று (தாத்காலிகமாக உலகோர் இகழினும் புகழினும்) விலகிக்கொள்ளவேண்டும். இதுவே த்யாகம்; இதுவே உலகசேவை; இந்த நெறியில் தீரமாக நிற்றலே உண்மைத் தன்மதிப்புக்கு வித்தாம்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Printed at Sarada Vilasa Press, TE. 21, Kumbakonam — 2,500 Copies, 11—3—1948. Paper Supplied by Party. Published by the K. Kosasthanam, Kumbakonam.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

**கும்பகோணம்.**

# நமது சாஸ்த்ரங்கள்.

*ப்ரசுரம் 17.* [விலை அணா ஒன்று]

ஸர்வஜித்-ஆு மார்கழி-மீ 4உ வெள்ளிக்கிழமை, 19-12-47.

---

நமது தேசத்திற்கு ‘இந்தியா’ என்று பெயர் வழங்குகிறது. ஹிமாலயம்முதல் கன்யாகுமரி வரையில் இந்தியாதான். பண்டைநாளில் இதற்குப் பாரதபூமி என்று பெயர். இதில் வஸிக்கிற ஜனங்களின் க்ஷேமத்திற்காக ஒவ்வொரு சாஸ்த்ரம் ஏற்பட்டிருக்கிறது. தேஹத்தைச் சௌக்யமாக வைத்துக் கொள்வதற்காகவும், அகால மரணம் இல்லாமலிருக்கும்படி செய்வதற்காகவும் ஒரு சாஸ்த்ரம் உண்டு. அதற்கு ஆயுர்வேதம் என்று பெயர். ஆயுள் விருத்தி ஆகவேண்டியதற்கும், இருக்கிற வரையில் கஷ்டமில்லாமலிருக்கும்படி செய்யவும் இந்த சாஸ்த்ரம் பல உபாயங்களைச் சொல்லுகிறது. இந்த நாட்டில் உற்பத்தியாகும் ஔஷதிகளைக்கொண்டு இந்தநாட்டு ஜனங்களின் ரோகங்களை நிவர்த்திக்க ஆயுர்வேதம் வழிகளைச் சொல்லியிருக்கிறது. ராஜாங்கம் ஆதரிக்காததால் அதன் ப்ரஸித்தி குறைந்துபோயிருக்கிறது. ராஜாங்கத்தார் மேல்நாட்டாரின் சிகித்ஸை முறைகளையே ஆதரித்து வந்திருக்கிறார்கள். ஆனால் ராஜாங்கத்தில் மந்திரிகள் நமது ஜனங்களானபிறகு பனகால் ராஜா அவர்கள் நமது தேச ஔஷதிகள்தான் நமக்குத்தகுதி என்றும், இதரமுறைகள் விபரீதமென்றும் நினைத்து, சென்னையில் ஆயுர்வேத பள்ளிக்கூடத்தை ஸ்தாபித்தார். மேல்நாட்டு வைத்தியமுறைக்குச் செய்யப்படும் உபகாரத்தில் ஆயிரத்தில் ஒன்றுகூட இந்தப்பள்ளிக்கூ

திற்குச் செய்யப்படவில்லை. ஆயினும் பனகால் ராஜா ஸம்ஸ்கிரு தத்தில் நல்லபடிப்புள்ளவராகையால் நமது சாஸ்த்ரங்களை ஆதரிக்க வேண்டுமென்று அபிமானமுடையவராக இருந்தார். அவர் இன்னும் சிறிது காலமிருந்தால் இன்னமும் அதிகமாய்ச் செய் திருப்பார். ஆயுர்வேத சாஸ்த்ரம் ஒன்றுதான் சிறிது ஆதரிக்கப் படுகிறது. நமது கணிதம் முதலியவைகளை இன்னமும் ராஜாங்கத்தார் ஆதரிக்கவில்லை. மேல்நாட்டு சாஸ்த்ரங்களையே நமது பிள்ளைகளுக்குக் கற்பிக்கிறார்கள். பனகால்ராஜா ஒருவர் மந்திரியானதால் ஆயுர்வேதம் சிறிது கடாக்ஷம் பெற்றது.

தேகத்தைப்பற்றி ஆயுர்வேதம்சொல்லுவதுபோல் ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒரு சாஸ்த்ரம் இருக்கிறது. மேல்நாடுகளி லும் இப்பொழுது பல சாஸ்த்ரங்கள் இருக்கின்றன. ஆனால் சென்ற நூறு வருஷங்களில்தான் அவை அவர்களால் வ்ருத்தி செய்யப்பட்டன. பிற நாடுகளைப் பிடித்து அவர்கள் செல்வத் தில் ஓங்கினபிறகே சாஸ்த்ர அபிவிருத்திக்காகப் பணத்தைச் செலவிட்டுப் பலன் அடைந்திருக்கிறார்கள். நமது தேசத்திலும் முன் காலத்தில் ப்ராஹ்மணர்களுக்கு ராஜாக்கள் மான்யங்களைக் கொடுத்து அவர்களைச் சாஸ்த்ரங்களை ஆராய்ச்சி செய்யும்படி அபிமானித்துவந்தார்கள். நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னமே, மேல்நாடுகளில் இப்பொழுது சாஸ்த்ரங்கள் அடைந்திருப் பதைக்காட்டிலும் அதிக அபிவிருத்தியை நமது தேசத்தில் அவை அடைந்திருந்தன. நம்முடைய தேஹஸௌக்கியத்திற்கும் ஆத்ம ச்ரேயஸிற்கும் அவைதான் ஸிலாக்கியம். அவைகளைத் தள்ளி விடக்கூடாது. கிருஷியில்கூட நமது தேசமுறையையே அனுஷ் டிக்க வேண்டும். கிருஷியோ, வைத்தியமோ, ஆத்மலாபமோ நமது சாஸ்த்ரங்களால் பெறக்கூடியபயன் மற்ற தேச சாஸ்த்ரங் களால் உண்டாகாது. வெள்ளைக்காரதேசம் சீதளதேசம்; அதற்குத் தகுந்தபடி வைத்தியமோ சில்பமோ ஏற்பட்டிருக் கின்றன. அவர்கள் மேஜைமேல் ஆகாரத்தை வைத்துக்கொண்டு சாப்பிடுவார்கள். அதற்குத் தகுந்தபடி வீடுகட்ட அவர்களு டைய சில்பம் ஏற்பட்டது. நாம் இலை போட்டுக்கொண்டு சாப்பிடுகிறோம். அவர்களுடைய சில்பப்படி நாம் வீடு கட்டி னால் நம்முடைய ஆசாரங்கள் ஸாத்தியப்படமாட்டா. நம்முடைய

கணிதம் வெகு ஸுலபமானது. எண்சுவடி, கீழ்வாய் இலக்கம் முதலியவை தெரிந்திருந்தால் ஸுலபமாகக் கணக்குப் போட்டு விடலாம். சட்டை, பௌண்டன்பேனா முதலியது நமது தேச கணிதத்திற்கு அவசியமில்லை. வாயாலேயே கணக்குப்போட்டுவிடலாம். நமது நாட்டில் ஒரு வித்தை இல்லையானால் அதைப் பிறரிடமிருந்து எடுத்துக்கொள்ளலாம். நம்மிடம் இருக்கும் வித்தையைத் தள்ளிவிட்டுத் பிறரது வித்தையைக் கற்றுக்கொள்ள முயற்சி செய்வது ஸரியல்ல. வீடு கட்டவும், சாகுபடி செய்யவும், வைத்தியம் செய்யவும், கணக்குப் போடவும், பரிசுத்தமாக இருக்கவும், ஜீவன் முக்தன் ஆகவும் நம்மிடம் அதி சிரேஷ்டமான வித்தைகள் இருக்கின்றன. ஸங்கீதத்தில் இரண்டு மேள கர்த்தாதான் அவர்களுக்குத்தெரியும்; நமது ஸங்கீத சாஸ்திரப்படி 72 மேள கர்த்தாக்களுண்டு. நம்முடைய வித்தைகள் ஏதேனும் மறைந்திருந்தால் அதை அவர்களிடமிருந்து தெரிந்துகொள்ளலாம். நம்முடைய வித்தைகளை அடியுடன் தள்ளி விடுதல் பெரிய தவறு. மனுஸ்ம்ருதியில் கன்னிகையின் குணம் நன்றாக இருந்தால் குலம் நல்லதாக இராமல் போனாலும் பாதகமில்லை, என்று சொல்லப்பட்டிருக்கிறது. பொன் சாக்கடையில் கிடந்தால் எடுத்துக்கொள்ளக் கூடாதா? அப்படியே வித்தையை நீசனிடமிருந்தும் கிரஹித்துக் கொள்ளலாம். ஆனால் அவனிடமிருந்துதான் கிரஹிக்கவேண்டுமென்று வைத்துக்கொள்ளக்கூடாது. நமது நாட்டிலுள்ள பள்ளிக்கூடங்களில் நம்முடைய இஹலோக சாஸ்த்ரங்கள் பரலோக சாஸ்த்ரங்கள் ஆகியவைகளை எடுத்துக்கொண்டு அதிகமாக அவர்களிடமுள்ளதைத் தெரிந்துகொள்ளலாம். ஸர்ஜரி அதாவது ரண சிகித்ஸை, ஸுச்ருதம் என்ற சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக்காலத்தில் எத்தனை விதமான ஆயுதங்கள் ஆஸ்பத்திரிகளில் உபயோகத்திலிருக்கின்றனவோ அத்தனை ஆயுதங்களும் அதில் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்கிலீஷ் பாஷையில் 'என்ஸைக்ளோபீடியா ப்ரிட்டானிகா' என்று ஒரு புஸ்தகமிருக்கிறது. இருபது முப்பது வருஷங்களுக்கு ஒரு முறை அது திருத்தி வெளியிடப்படுகிறது. அதில் ஸகல விஷயங்களையும் பற்றி விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சாஸ்த்ரத்தைப் பற்றியும் சொல்லுகையில் அதன் சரித்திரம் சொல்லப்பட்டிருக்

கிறது. எங்கு அது முதலில் தோன்றியது, எந்தக்காலத்தில் தோன்றியது, எந்தக்காலத்தில் யார் அதைப் பிறதேசங்களுக்குக் கொண்டுபோனார்கள், என்ற விவரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. வான சாஸ்த்ரம், வைத்ய சாஸ்த்ரம், ஜ்யோதிஷ சாஸ்த்ரம், ரண சிகித்ஸை சாஸ்த்ரம், கணித சாஸ்த்ரம், பாஷா சாஸ்த்ரம், தத்துவ சாஸ்த்ரம், இலக்கண சாஸ்த்ரம், விருக்ஷ சாஸ்த்ரம் ஆகியவைகளை எல்லாம் பற்றி அதில் சொல்லப்பட்டிருப்பதில், ரண சிகித்ஸை வித்தை இந்தியாவிலேயே முதலில் இருந்ததாகவும், அது அரேபியா வழியாக கிரீஸ் (Greece) தேசத்திற்குப்போனதாகவும், அங்கிருந்து இத்தாலி (Italy)க்குப் போனதாகவும், பிறகு ஐரோப்பா (Europe) கெடுகப்பரவினதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற சாஸ்திரங்களும் இந்தியாவில் பூர்வத்திலேயே இருந்ததாக ஒப்புக்கொள்ளுகிறார்களாயினும், ரண சிகித்ஸையை இந்தியாவிலிருந்தே தெரிந்துகொண்டதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். நம்முடைய வைத்தியமும் வான சாஸ்த்ரமும் அரபி (Arab பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டு அங்கிருந்து ஐரோப்பாவுக்குப் போயின. ரண சிகித்ஸையை அவர்கள் அறியவேமாட்டார்கள். இந்தியாவிலிருந்துதான் கற்றுக்கொண்டார்கள். அப்படிப்பட்ட ரண சிகித்ஸை முறை இப்பொழுது ஒருவருக்கும் தெரியாது. காரணம் அரசர்களின் ஆதரவில்லை. இப்பொழுது நமது ஜனங்களுக்கு உரிமை வந்திருக்கும்பொழுது பனகால் ராஜா சொல்பமாக ஆரம்பித்தது இனி பெரியதாக ஆகிவிடக்கூடும். அந்நிய தேச வித்தையைத் தள்ளக்கூடாது, கிரஹித்துக்கொள்ள வேண்டுமென்று மனு சொல்லியிருக்கிறார். நமது வித்தையைத் தெரிந்துகொள்வதுதான் தேசியக் கல்வி. வித்தைக்குப் பிரயோஜனம் ஆத்ம லாபமே. தர்மசாஸ்த்ரம் அதற்காகவே ஏற்பட்டிருக்கிறது. ராஜாங்க தர்மங்களைச் சொலவது அர்த்த சாஸ்த்ரம் சுக்கிரநீதி, சாணக்கிய தந்திரம் முதலியன அர்த்த சாஸ்த்ரங்கள். ஒருவன் பாபத்தை மூட்டை கட்டிக்கொள்ளாமல் எப்படிக் கடைத்தேறலாமென்பதையே தர்மசாஸ்த்ரம் சொல்லுகிறது. ஆத்மா எப்பொழுதுமுள்ளது. சரீரம் அநித்தியம். சரீரத்தைப்பற்றிச்சொல்லும் சாஸ்திரம் எங்கேயாவது தர்மசாஸ்த்ரத்துடன் முரண்படுமானால் தர்மசாஸ்த்ரத்தையே பின்பற்றவேண்டும்.

காட்லிவர் ஆயில் என்ற மருந்தைச் சாப்பிடும்படி வைத்தியர் சொன்னால் தர்மசாஸ்த்ரம் அது கூடாதென்கிறது. அந்த இடத்தில் தர்ம சாஸ்த்ரத்தை எடுத்துக்கொள்ளவேண்டும். ஆத்மாவைக் கெடுத்துக்கொண்டு ராஜாங்க தர்ம வியவஹாரங்களில் ஈடுபடவேண்டியதில்லை ஆகையால் அர்த்த சாஸ்த்ரத்திற்கும் தர்ம சாஸ்த்ரத்திற்கும் சண்டை வருமானால் அர்த்த சாஸ்த்ரத்தையே தள்ளிவிடவேண்டும்.

தர்ம சாஸ்த்ரம் நமது நித்திய நடவடிக்கைகளைச் சொல்லுவது. ஈச்வர ஆக்ஞைகளை நிறைவேற்றுவதால் பக்திசெய்து கடைத்தேற தர்ம சாஸ்த்ரம் வழிகாட்டுகிறது.

பகவானுடைய அடிமை என்பதற்காகச் சில அடையாளங்கள் உண்டு. பள்ளிக்கூடங்களில் 'ஸ்கௌட்' (Scouts) என்ற கோஷ்டிகள் இருக்கின்றன. அவர்களுக்கு ஓர் அடையாளம் உண்டு. கச்சேரியில் சேவகனாகயிருப்பவனுக்கு அடையாளத்திற்காக டவாலி உண்டு. ராஜாங்கத்தில் ஸர் பட்டம் பெற்றவர்களுக்கு ஓர் அடையாளமுண்டு. இந்தச் சின்னங்களைத் தரித்துக்கொள்ள எவரும் ஸங்கோஜப்படுவதில்லை. ஆனால் ஈச்வரனுடைய அடிமை என்பதற்கு அடையாளமாக ருத்திராக்ஷ மாலையையோ துளஸி மாலையையோ தரித்துக்கொள்ள ஸங்கோஜப்படுகிறார்கள். ஆத்மாவின் க்ஷேமத்தைப்பற்றிய நூல்கள், வேதங்கள், சாஸ்த்ரங்கள், ஆகமங்கள், புராணங்கள், இதிஹாஸங்கள் முதலியன. இதிஹாஸங்களும் புராணங்களில் சேர்ந்தவைதான். இவைகளுக்கு மூலம் வேதம். தர்ம சாஸ்த்ரம் நாம் வீட்டில் தினப்படி எப்படி நடக்கவேண்டு மென்பதையும், குலத்தின் ஒழுக்கத்தையும் சொல்லும். அது ஆசார காண்டம் என்றும் வியவஹார காண்டம் என்றும் இருவகைப்படும். மனு, யாக்ஞவல்கியர் பராசரர் முதலிய 18 மகரிஷிகள் தர்மசாஸ்த்ரம் எழுதியிருக்கிறார்கள். அவைகளுக்கு ஆதாரம் வேதமே. வேதங்களை ஆதாரமாகக்கொண்ட மதங்களுக்கு வைதிகமதங்கள் என்று பெயர். மற்றவை நாஸ்திக மதங்கள். ஜைனம், பௌத்தம் முதலியன ஈசுவரனில்லையென்றோ, வேதம் ப்ராமணமில்லை யென்றோ சொல்லுகின்றன. ஜினர் புத்தர்

முதலியவர்களின் உபதேசங்கள் அந்த மதங்களுக்கு ஆதாரம். சைவம், வைஷ்ணவம் முதலியன வைதிக மதங்கள். சைவத்திற்கு வைதிகசைவம் என்றே பெயருண்டு. 'வேத நெறிதழைத்தோங்க' என்று பெரியபுராணம் சொல்லுகிறது. 'வேதம் தமிழ் செய்தான் மாறன் சடகோபன்' என்று நம்மாழ்வாரைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. நம்மாழ்வாருக்குத்தான் சடகோபர் என்றும் பெயர். விஷ்ணுகோயிலில் ஸ்வாமி தர்சனம் ஆனபிறகு சடகோபம் வைக்கிறார்கள். சடகோபர் பரமபாகவதர்களைத் தலைமேல்கொள்வது என்பது அதன் கருத்து. அவர் பகவத்பாதத்தில் இருக்கிறார். அவரை நமது சிரஸின்மேல் வைக்கிறார்கள். இப்படிப்பட்ட வைதிக ஸமயங்கள் வேதம் முதலிய நூல்களை ஆதாரமாகக்கொண்டவை. வைதிகம் என்று அவைகளுக்குப்பெயர் ஏற்பட்டிருப்பதேயல்லாமல், ஒருவருடைய பெயரைத் தனக்குப் பெயராகப் பெற்றிருக்கவில்லை. கிருஸ்துமதம் கிருஸ்துவால் ஸ்தாபிக்கப்பட்டது என்பதுபோல், நமது மதம் ஒருவரால் ஸ்தாபிக்கப்பட்டதல்ல. வேதத்தை உணர்த்தவே க்ருஷ்ணன் தான் வந்ததாக சொல்லுகிறார். அந்த வேதம் அநாதிகாலம் தொட்டுவருவது. வேதத்தை மகரிஷிகளின் ஹ்ருதயத்தில் ஈசுவரன் தோன்ற வைத்து அவர்கள் மூலம் நமக்கு அருளினார். அவை எப்பொழுது ஏற்பட்டன என்று சொல்ல முடியாது. இப்படிப்பட்ட வேதம் முதலியன நமது ஷண்மதங்களுக்கு ப்ரமாணங்கள். வேதம் ஆறு ஸமயங்களுக்குப் பொது.

ஆகமங்கள் அதற்குத் தனியாக ஏற்பட்டிருக்கின்றன. சைவாகமங்கள், அம்பாள் ஆகமங்கள், விஷ்ணு ஆகமங்கள், கணேசாகமங்கள், குமாரதந்திரம் என வெவ்வேறுண்டு. அந்தந்த தெய்வத்தை எப்படி ப்ரதிஷ்டை செய்து எப்படி வழிபட வேண்டுமென்பதை அந்தந்த ஆகமங்கள் சொல்லுகின்றன.

சைவாகமங்கள் 28-ம், அம்பாள் ஆகமங்கள் 64-ம் இருக்கின்றன. ஒவ்வொரு ஆகமத்திலும் வாமபாகம் என்றும், தக்ஷிணபாகம் என்றும் இரண்டு வகை உண்டு. வலக்கை இடக்கை என்று அவைகளுக்கு அர்த்தம். இப்படி ஆகமங்களில் இரண்டு பிரிவிருப்பதற்குக் காரணம் தர்மசாஸ்த்ரம். சிலருக்கு

ஆசாரங்களைக் கடுமையாகவும் சிலருக்கு லகுவாகவும் சொல்லியிருப்பதே யாகும். ப்ராஹ்மணன் குடிக்கக்கூடாது. வேறு சிலர் குடிப்பது அவ்வளவு கீழ்த்தரமல்ல. ஆசாரங்கள் சில ஜாதிகளுக்குப் பாரமாக ஏற்பட்டிருக்கின்றன. மாம்ஸம் சாப்பிடக் கூடிய ஜாதியினர்கள்கூட சில மாமஸங்களைச் சாப்பிடக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. மாம்ஸம் சாப்பிடுகிறவர்கள் கூட தாங்கள் செய்யும் காரியங்களைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட்டுச் சாப்பிடும்படி வாமமார்க்க ஆசாரம் ஏற்பட்டது. தக்ஷிணாசாரமாகச் செய்யவேண்டியவர்கள் வாமாசாரமாகச் செய்தால் நிந்திக்கப்படுகிறார்கள். (வாம மார்க்கம் என்று ஸ்ரீ ஆசார்யாள் சொன்னது பதார்த்தங்களை ஈச்வரார்ப்பணம் செய்யும் வழி). வாமமார்க்கத்தை அனுஸரித்துப் பிராணிகளைக் காவு கொடுப்பதை ஜீவகாருண்யச் சங்கங்கள் ஆக்ஷேபிக்கின்றன. கசாப்புக்கடைகளில் தினம் எத்தனையோ ப்ராணிகள் கொல்லப்படுகின்றன. அந்தக்கடைகளை இந்த ஜீவ காருண்ய சங்கங்கள் மறியல் செய்வதில்லை. ஆனால் ஒரு கிராம தேவதை கோயிலில் பூசாரி கொல்லுவதை மறியல் செய்வார்கள். ஸர்வப்பிராணிகளையும் ஹிம்ஸிக்கக்கூடாதுதான். ஆனால் வேதம் சொல்லியிருப்பதைச் செய்வதில் பக்தி யிருந்தால் தோஷம் ஒட்டாது. திருக்கண்ணப்பர் பகவானுக்கு மாம்ஸத்தைக் கொடுத்தார். அதை ஸ்வாமி ஏற்றுக்கொண்டார். ஏனெனில் கண்ணப்பருடைய மனதில் பக்திதான் இருந்தது. தோஷநினைப்பே யில்லை. பக்தி பூர்வமாக பாவமாகத் தோன்றும் ஒரு காரியத்தைச் செய்தாலும் தோஷமில்லை. ஆனால் ஜீவகாருண்ய சபையார்கள் ப்ராஹ்மணன் யாகம் செய்தாலும், பூசாரி தேவதைக்குக் காவு கொடுத்தாலும் மறியல் செய்கிறார்கள். வெள்ளைக்காரர்களின் ஆகாரத்திற்காகப் பிரதிதினமும் எத்தனையோ ப்ராணிகள் கொல்லப்படுகின்றன. இச்சங்கங்கள் அதைப்பற்றி ஏன் கவனிக்கவில்லை? யாகங்களைச் செய்வதிலும் கிராமதேவதை கோயிலில் ப்ரார்த்தனை நிறைவேற்றுவதிலும் மனதில் கெட்ட எண்ணமில்லை ஆகையால் பாபமுண்டாகாது. அதிதிக்குப் பசுவைக் கொடுக்கும்படி சாஸ்த்ரம் சொல்லியிருக்கிறது. அந்த அதிதி அந்தப்பசுவை விஸர்ஜனம் செய்துவிட வேண்டுமென்றும் சாஸ்த்ரம் சொல்லியிருக்கிறது. அது தன்னிஷ்டப்

படித் திரியும்படி அவன் விட்டுவிடவேண்டும். ப்ராணிகளிடத்தில் கருணையாலேயே அப்படி விதிக்கப்பட்டிருக்கிறது. சிறுத்தொண்டர் பிள்ளைக்கறி ஸமர்ப்பித்தார். ஸர்வத்தையும் பரித்தியாகம் செய்துவிட வேண்டுமென்பதையே அது அறிவுறுத்துகிறது.

ஆகமங்களில் நான்கு பிரிவுகள் உண்டு. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவைகளைப்பற்றிச் சொல்லுமுன் ஒரு விஷயத்தைச் சொல்லவேண்டும். அநாதியான மதங்கள் எல்லாம் வைதிகமதங்களே. ஆனால் நவீன ஆராய்ச்சிக்காரர்கள் வேதம் வடக்கிலிருந்து வந்ததாகவும், தென்னாட்டில் வேறு நூல் இருந்ததாகவும் சொல்லுவதுடன், ஆரியர்கள் வைதிகர்கள் என்றும், திராவிடர்கள் தென்னாட்டினர் என்றும் சொல்லி ஒரு சண்டையைக் கிளப்பிவிடுகிறார்கள். வடமொழியில் ஒன்பது இலக்கணமிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளில் ஐந்திரம் என்பது ஒன்று. அது இந்திரனால் செய்யப்பட்டது. தமிழிலுள்ள இலக்கணங்களில் எல்லாவற்றிற்கும் புராதனமாகிய தொல்காப்பியம் ஐந்திரத்தை யனுஸரித்து இயற்றப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வைதிக ஸமயந்தவிர வேறு ஸமயமிருந்ததாக நமது நாட்டு நூல்களைக்கொண்டு சொல்லுவதற்கில்லை. சில தமிழ்ச் சொற்களே அதை விளக்குகின்றன. யாகம் என்பதை வேள்வி என்ற தமிழ்ச்சொல் உணர்த்துகிறது. வேதத்திற்கு மறை என்று பெயர். ஆசாரத்திற்கு ஒழுக்கமென்று பெயர். மறை என்பது எப்படி வேதம் என்ற பொருளைத் தருகிறது? வேதம் அதிருஷ்டமான—அதாவது கண்ணுக்குத் தெரியாத—அதாவது மறைந்திருக்கிற—ப்ரயோஜனத்தைச் சொல்வது. ஆகையால்தான் வேதம் மறை என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அநாதியாக இப்பதங்கள் தமிழில் இருக்கின்றன. ஆகையால் அவை குறிக்கும் விஷயங்களும் அநாதியாக இருக்கின்றனவென்று அறியப்படும். பழைய தமிழ் நூல்களில் வேதங்களையும், யாகங்களையும், பரமசிவனையும் பற்றி ஏராளமாகச் சொல்லப்பட்டிருக்கையில், வேதம் வடக்கிலிருந்து வந்ததாகச்சொல்லுவது ஸரியல்ல. ஆகமம், சரியை, கிரியை, யோகம், ஞானம், என்பவைகளைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. சரியை ஈச்வர பக்தியுள்ளவன் செய்ய வேண்டிய காரியங்களைச் சொல்லுவது. கிரியை என்ற பாகத்

தில்தான் ஆலயம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வாமி எங்கும் இருக்கிறார்; அவரைக் கல்லில் வைப்பானேன், என்று கேட்கலாம். எங்கும் அவர் இருப்பதாகச் சொல்லுகிறோமாயினும், எங்கும் இருக்கிறார் என்ற நினைவு மனதில் இல்லை. ஸ்வாமி எங்குமிருக்கிறார் என்ற எண்ணம் இருந்துவிடின் பொய் சொல்லுவானா? கெட்டகாரியம் செய்வானா? எங்குமவர் இருப்பது உண்மையே அவர் இருப்பது மாத்திரம் நமக்குப் போதாது. அவருடைய அருளைப்பெறவேண்டும். அதற்கு அவரை எப்படி உபாஸிப்பது? அதைத்தான் ஆகமம் சொல்லுகிறது. ஸூர்ய கிரணம் இருக்கிறது. ஒவ்வொரு கிரணமும் நெருப்பே. ஆனால் ஒரு துணியை வெயிலில் காட்டினால் அதில் தீப்பற்றிக்கொள்ளவில்லை. லென்ஸ் என்ற பூதக்கண்ணாடியை வெய்யிலில் காட்டி அதன் கீழ் ஒரு துணியைப் பிடித்தால் அதில் தீப்பற்றிக்கொள்ளுகிறது. பூதக் கண்ணாடி அனேக கிரணங்களை ஒருமிக்கக் குவிக்கிறது. மின்சார சக்தி (Electricity) எங்குமிருக்கிறது. அதை வெளிப்படுத்த ஒரு சக்தி ஸ்தாபனம் ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. அப்படியே எங்குமுள்ள ஈச்வரனுடைய அருள் நமக்குக் கிடைக்கும்படி செய்ய ஆலயம் அவசியமாயிருக்கிறது. குருக்கள் அனுஷ்டானமில்லாதவர்களாக இருக்கிறார்களே, யார் உள்ளே போனால் என்ன, என்று சொல்லுகிறார்கள். அதாவது பாக்கி இருக்கும் ஸ்வாமியையும் வெளியே அனுப்பிவிடுவோம் என்கிறார்கள். கோயிலில் இருக்கும் அநாசாரத்தை நிவர்த்திசெய்யவேண்டுமே தவிர, புது அநாசாரத்தைப் புகுத்தக் கூடாது. ஒரு வீட்டில் ஒரு திருடன் புகுந்துவிடின் அதற்காக கதவைக் கழட்டி எப்போதும் திறந்துகிடக்கும்படி விடுவதுண்டா? ஸமான்ய அநாசாரங்களினால் ஸான்னித்தியம் குறைந்துவிட முடியாமல் மகரிஷிகள் பெரிய க்ஷேத்திரங்களைச் செய்திருக்கிறார்கள். நிறைய சக்தி இருக்கும்படி செய்திருக்கிறார்கள். ஆகையால்தான் நம்மூரில் கோயிலிருப்பினும், க்ஷேத்திரத்திற்குப் போய் தரிசனம் செய்யவேண்டும். இருக்கிற அனாசாரத்தை நிவர்த்தி செய்து கோயிலை பரிசுத்தமாக்கவேண்டும். ராஜ்ய வியவகாரங்களின்பொருட்டு மதத்தை மாற்றக்கூடாது. மின்சார சக்தியுள்ள ஒரு இயந்திரத்தில் நாம் தாறுமாறாகக் குறுக்கிட்டால் தேஹம் போய்விடும். ஆத்ம க்ஷேமத்தைப்பற்றிய இயந்திரத்தில் குறுக்கிட்டால் ஆத்மா போய்விடும். உள்ள குறைகளை நிவர்த்தி

செய்ய முயற்சி எடுப்பதே கிரமம். கோயில்களை சுத்தமாய் வைத்துக்கொள்ள நாம் சிரத்தை எடுத்துக்கொண்டால் குருக் களும், தர்மகர்த்தாக்களும் ஸரியாய்விடுவார்கள். புதிது ஸ்திரமாக இராது. ஆடி மாதத்தில் வெள்ளம் வரும் போது கரைகளைச் சில இடங்களில் இடிக்கும் அதைப் பற்றி நாம் கவலைப்படுகிறதில்லை. புது ஆவேசத்தைப்பற்றியும் நாம் கோபப்படவேண்டாம். அது தானாகப் போய்விடும். உலகில் எது ஸ்திரம்? ஒவ்வொரு காலங்களில் ஏதேச்சாதிகாரிகள் ராஜ்யம் ஆண்டிருக்கிறார்கள்; பிறகு வரையறைக்குட்பட்ட அதிகார முடைய அரசர்கள் ஆண்டிருக்கிறார்கள். இப்பொழுது உலகில் அபேதவாத அரசியல்முறை செல்வாக்கடைந்து வருகிறது. ஒன்றும் ஸ்திரமில்லை. ஆலயங்களில் யாவரும் போகலா மென்று ஏற்பட்டுவிட்டமாத்திரத்தில் எல்லாரும் போய்விடமாட்டார்கள். ஜனங்களிடத்தில் நாம்போய் எது நியாயமென்பதைச் சொன்னால் அவர்கள் கேட்பார்கள். கோயில்கள் சரியாக இராததற்குக் காரணம் நாம் போகாததே. இப்படிப்பட்ட விஷயங்களை யெல்லாம் ஆகமத்தில் கிரியை என்ற பாகம் சொல்லுகிறது.

பிறகு யோகம், ஆத்மா ஈச்வரனிடத்தில் எப்படிக் கலக்க வேண்டு மென்பதைச் சொல்லுகிறது. அவரை எப்படித் தியா னம் செய்யவேண்டு மென்று யோகம் சொல்லுகிறது. பிறகு அங்குள்ள நிலையைச் சொல்லுவது ஞானம். ஆகமம் என்பது இதுதான். தர்மசாஸ்த்ரம் நாம் தனியாக நடக்கவேண்டியதை யும் பிறருடன் சேர்ந்து நடக்க வேண்டியதையும் சொல்லுகிறது.

ஆகமம் உபாஸனைக்கிரமங்களைச் சொல்லுவது. சைவாகமம் 28. ஒவ்வொன்றும் நான்கு பிரிவுகளை உடையது. இவை யெல்லாம் ஸ்வதேச சாஸ்த்ரங்கள். இவைகளை நாம் படிப்பதில்லை. ஆகையால் விழிப்புமில்லை. படிப்பெல்லாம் வெள்ளைக்காரப் படிப்பு. ஆகையால் அவர்கள்மாதிரி நடக்கவேண்டு மென்ற ஆசை. உள்ளும் புறமும் சுதேசியாக இருப்பதே சுதேசியம். உள்ளே பரதேசியாக இருந்துகொண்டு வெளியில் மாத்திரம் சுதேசிய மெதற்காக? சீர்திருத்தக்காரர்கள் நமது சாஸ்த்ரங்களை யறியவில்லை. அவைகளை படிக்காததால் கோபமடைகிறார்கள். அப்படி அவர்கள் செய்வதற்காக நாம் அவர்களிடத்தில் கோபப் படக்கூடாது. எதிர்க்கக்ஷியிடத்திலும் பிரியம் வேண்டும். ஆக

மத்தின் கருத்தை நாம் அவர்களுக்குச் சொல்லவேண்டும். ஒருவரும் கவனிக்காதிருந்த ஆகமத்திற்கு இப்பொழுது கொஞ்சம் கௌரவம் வந்திருக்கிறது. கிராம தேவதைகளைப்பற்றியும் ஆகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் கோயில்களில் இன்னமும் சக்தி அதிகமாகவே இருக்கிறது. அநுசாரம் அதிகமாக ஏறவில்லை. இதர மதஸ்தர்கள் பூட்ஸ்காலுடன் சிவன் கோயில் விஷ்ணுகோவில்களுக்கு போவதுபோல் கிராமதேவதை கோயில்களுக்குப் போவதில்லை. சிவன் கோயில், விஷ்ணு கோயில்களில் ஐவேஜி அதிகமாகவிருப்பதால் வேடிக்கை பார்க்க அங்கு வருகிறார்கள். கிராமதேவதை கோயில்களில் ஐவேஜி அதிகமில்லையாகையால் அநுசாரமும் குறைவு. எங்கு ஏற்றம் அதிகமோ அங்கு இறக்க மேற்பட்டுவிடின், மளமளவென்று இறங்கும். தமிழ்நாட்டிலும் தெலுங்கு நாட்டிலுமே ஆசாரம் அதிகம் ஏறின. இப்போது இங்குதான் அநுசாரம் அதிகம். வடதேசத்து ப்ராஹ்மணன் மீசை வைத்துக்கொண்டிருப்பான், உக்கா குடிப்பான், தலையை மொட்டை அடித்துக்கொண்டாலும் சிகை வைத்துக்கொண்டிருப்பான். நமது தேசத்தில் அடியோடு கத்தரித்துக்கொண்டு விடுகிறார்கள். வடதேசத்தில் தென்னாட்டு ஆசாரியர்களுடைய சிஷ்யர்கள் இருக்கிறார்கள். இவ்விடத்தியாரின் ஆசாரங்கள் அந்தக்காலத்தில் அப்படி ஜனங்களை வசியப் படுத்தி வந்தன. எச்சில், சுருட்டு, உக்கா, மத்ஸ்யம், மாம்ஸம் முதலிய அநுசாரங்கள் தெற்கில் வர வரக் குறைவு. ஆனால் இங்கிலீஷ் ஆசாரம் இங்கு அதிகம். இங்கிலீஷ்காரர்கள் முதலில் இங்கேதானே வந்தார்கள். அவர்களுடைய பழக்க வழக்கங்கள் நம்மிடமே அதிகமாக இருக்கின்றன. வடநாட்டாரிடம் ஆசாரம் குறைவாயிருப்பினும் பக்தி அதிகமுள்ளது. குஜராத்தில் சாந்த ஸ்வபாவமும் உறுதியும் அதிகம். அது பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் இருந்த இடம். அது கோபிகைகள் பக்தி செய்த நாடு. ஆகையால் பக்தி அதிகம். மஹாராஷ்டிரத்தில் வேகமும் பக்தியும் அதிகம். தெலுங்கு தேசத்தில் முரட்டுத்தனமும் பக்தியும் அதிகம். வங்காளத்தில் கபடமும் பக்தியுமதிகம். தமிழர்கள் எதிலும் பட்டுக்கொள்ளமாட்டார்கள். மற்றவர்கள் வேலை செய்தால் நாம் ஸமயத்தில் தலைமை வஹிப்போம். இங்கு எல்லாரும் புத்திசாலிகளாகையால் ஒருவனைப் பின்பற்ற ஜனங்கள் கிடையாது. கூர்ஜரத்தில் 100-க்கு 70 ஜனங்கள் மாம்ஸ சாப்

பிட மாட்டார்கள். அங்கு வைஷ்ணவர்கள் என்றால் மாம்ஸம் சாப்பிடாதவர்கள் என்று அர்த்தம். நமது தேசத்தில் ப்ராஹ்மணரல்லாத வைஷ்ணவர்களில் மாம்ஸம் சாப்பிடக்கூடா தென்ற கட்டுப்பாடில்லை.

வேதம், ஆகமம், தர்மசாஸ்த்ரம், இதிஹாஸம், புராணம் ஆகியவைகளில் ஆத்ம க்ஷேமத்திற்கான வழிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. எல்லாத் தர்மங்களையும் கதையாகச் சொல்லுவது இதிஹாஸம். ஒவ்வொரு தர்மத்தைக் கதையாகச் சொல்லுவது புராணம். இந்த தர்மங்கள் அநாதியானவை. நமது மதத்திற்கு ஆள் பேரில்லை. நடுவில் வந்த ஆசார்யர்கள் ஒவ்வொரு மார்க்கத்தை வற்புறுத்தினவர்களே. ஸ்ரீ ராமானுஜர் பக்தி பெரிதென்று சொன்னார். ஸ்ரீ சங்கரர் ஞானம் பெரிதென்று சொன்னார். 56-தேசங்களிலும் பூர்வத்தில் இந்தமதமே அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. 56-தேசங்களில பாரஸீகம் முதலியனவும் சேர்ந்தவை. இந்த தர்மங்களை ஜனங்கள் ஏற்று அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டும். நமது சாஸ்த்ரங்களில் இஹம், பரம் இரண்டுக்கும் ஸாதனமான வழி ஏராளமாய் இருக்கிறது. இதர மத கிரந்தங்களில் தற்போது ஸௌக்கியமாயிருப்பதுக்கு மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் நமது சாஸ்த்ரங்களிலோ இருக்கும் வரையில் ஸௌக்கியமாயிருப்பதற்கு வழி சொல்லியிருப்பதோடு இறந்த பிறகும் கஷ்டப்படாமல் நல்லகதி அடையவேண்டிய அளவு மார்க்கங்கள் சொல்லியிருக்கிறது. நமது சாஸ்த்ரங்களைப்படித்து, அதிலுள்ள தத்துவங்களை அறிந்து, நடக்காததால் எப்போதும் கவலையுள்ளவர்களாயும், கஷ்டப்பட்டுக்கொண்டு மிருக்கிறோம். ஸாத்தியமான அளவாவது நமது சாஸ்த்ரங்களைப் படித்தும், தெரிந்தவர்களிடம் கேட்டும், இப்பொழுது நமக்கு ஏற்பட்டிருக்கிற கஷ்டங்களிலிருந்து கரையேற ஈச்வரன் நமக்கு நல்ல ஞானத்தைக் கொடுக்க வேண்டுமென்பது எங்கள் ப்ரார்த்தனை.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

---

Printed at Sarada Vilasa Press, TE. 21, Kumbakonam — 2,500 Copies, 11—3—1948. Paper Supplied by Party. Published by the K. Kosasthanam, Kumbakonam.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

**(Regd.)**

**கும்பகோணம்.**

# அடிமைத்தனமும் கடனும்.

ப்ரசுரம் 18. [விலை அணு ஒன்று]

ஸர்வஜித்-ஹு மார்கழி-மீ 18உ வெள்ளிக்கிழமை, 2—1—48.

ஒவ்வொரு வகுப்பைக்கொண்டு ஒவ்வொரு கடமைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. அக்கடமைகளுக்குரிய ஆசாரங்கள் அவரவர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாசாரங்களும் கடமைகளும் வழுவாது முறையே அநுஷ்டிக்கப்படும்போது பரஸ்பரம் ஸஹாயமாகி முடிவில் உலகத்தின் பொதுவான நன்மைக்குக் காரணமாகின்றன. அதில் பார்ப்பனப் பிறப்புக்கு தெய்விகமான அநுஷ்டானங்களால் பொது உலக நன்மையில் பங்கெடுத்துக்கொள்ளும் கடமை வகுக்கப்பட்டிருக்கிறது. அவன் எவ்வளவு ஏழையா யிருப்பினும், கடனாளியாகவோ அடிமைத்தொழில் பூண்டோ இருந்தால், தன் பிறப்பை விற்க வேண்டியதுதான். தனக்கு வகுக்கப்பட்ட கடமையைச் செய்வது இயலாது போய்விடுகிறது.

இவ்விஷயத்தில் சாஸ்த்ரம் என்ன சொல்லுகிறது.

पञ्चमेऽहनि षष्ठे वा शाकं पचति यो नरः।
अनृणोऽप्रवासेष्यः तं विद्याद्ब्राह्मणं
बुधाः

*பஞ்சமே அஹனி ஷஷ்டே வா சாகம் பசதி யோ நர: |*
*அக்ருணோபி அபரப்ரேஷ்ய: தம் விது: ப்ராஹ்மணம் புதா: ||*

பகல் முழுவதும் ஆகாரம் கிடைக்காமல் போனாலும், ஸூர்யன் சாயும்பொழுதிலாவது, ஒருவரும் சீந்தாத இலை கீரைகளைச் சேகரித்து வேகவைத்து உண்டு ப்ராணனை ரக்ஷித்துக்கொள்ள வேண்டும். கடனாளியாகவோ, ஸேவைத்தொழில் புரிபவனாகவோ இருக்கவேண்டாம். இவ்விதம் தீரமாக இருப்பவனே ப்ராஹ்மண ஜன்மத்தை ரக்ஷித்துக்கொடுப்பவன். நித்தியப்படி வாழ்க்கையையும் பொது வாழ்க்கையாகிய கல்யாணம் முதலிய காலங்களையும் சீர்படுத்துவது ஒரு நாளில் ஆகாத கார்யமானாலும், சுற்றிப்பற்றி எரியும் தீயைப் பார்த்தாவது, உலக க்ஷேமத்தின் பொருட்டு ஒவ்வொருவரும் உடனே வாழ்க்கையை தெய்விக முறையில் சீர்திருத்துவதையே முதல் காரியமாகக்கொண்டு நிற்காமல் பாடுபடவேண்டும். தானும் தன் குடும்பமும் சம்பந்தப்பட்டவரையில் தெய்விக விரோதமான முறைகளை யெல்லாம் வேறொன்றுமாலோசியாமலே உடனே மாற்றிக்கொள்ளவேண்டும். இதுவே எங்கள் அன்பார்ந்த வேண்டுகோள்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Printed at Sarada Vilasa Press, TE 21, Kumbakonom—
2,500 Copies, 11—3—1948. Paper Supplied by Party.
Published by the K Kosasthanam, Kumbakonam

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

# ப்ராஹ்மணன் பிறப்பை எப்படிக் காப்பது

ப்ரசுரம் 19. [விலை அணா ஒன்று

ஸர்வஜித்-௵ தை-௴ 3௳ வெள்ளிக்கிழமை, 16—1—1948.

---

ஒழுக்கங்களுடைய குறைவினால் எந்தப் பார்ப்பனப் பிறப்பு வீணாகுமென்று திருவள்ளுவநாயனார் விளக்கி யிருக்கின்றாரோ, வேதமோதி ஒழுக்கத்துடன் கர்மானுஷ்டானங்களைச் செய்து ஜீவர்கள் உத்தமலோகங்களை எய்த எப்பிறப்பு த்வாரமாக இருக்கின்றதோ, பெரியோர்களெல்லாம் "ஜன்மத்தை வீணாக்காதே" என்று எந்தப் பிறப்பைக் குறித்துப் போதிக்கின்றார்களோ, அவ்விதமானப் பார்ப்பனப்பிறப்பைக் காத்துக்கொள்வது தங்களுடைய ச்ரேயஸ்ஸுக்கு மாத்திரமின்றி உலகத்தின் க்ஷேமத்திற்கே ஆதாரமான கடமை, என்பது நம் வேத சாஸ்த்ரங்களின் துணிபு.

உலக மக்களில் அநேகர் இந்த தத்வத்தை அறியாமலும் நக்கலாய். .

சென்ற நூறு வருஷங்களாக நம் நாட்டு மக்கள் சிறுவயது முதலிலேயே பிற நாட்டுப் படிப்பிலும் பழக்கவழக்கங்களிலும் பயின்றுவிட்டதால் நம் சிஷ்டாசாரப் பழக்கமும், சாஸ்த்ர தத்வ

விசாரமும் இல்லாமற்போய்விட்டது. அதன் விளைவு தற்காலம் வெகு க்ரூரமாய்ப் பரிணமித்திருக்கிறது. ஆனாலும் ஒருவரையும் குற்றம் கூற இடமில்லை.

எது எப்படியாயினும் ப்ராஹ்மண ஜன்மாவை எவ்வளவு ச்ரமம் எடுத்துக்கொண்டாவது வீணாக்காமல் ரக்ஷித்தல், க்ரமமாக உலகத்திலுள்ள எல்லா ஜீவகோடிகளுக்குமே க்ஷேமத்தையுண்டு பண்ணுமாதலால், ஆபத்துக்காலங்களில்தான் அதை இன்னும் விசேஷமாக ரக்ஷிக்கவேண்டும்.

அதை நாம் எப்படிக் காப்பது?

ப்ராஹ்மண்யத்தைக் காக்கத் தடபுடல் வேண்டாம். ஆடம்பரம் (Demonstration) வேண்டாம். தன்னைத்தவிர வேறு எவருக்கும் தெரியக்கூட வேண்டாம். பழைய நாட்களில் கல்யாணம் முதலிய சுப கர்மாக்கள் வெகு சுலபமாக ஆடம்பரமின்றிச் செய்ததாகப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். மேளத்திற்குப் பதிலாக சோமக்கல மணியடித்துக்கொண்டு தாலி கட்டியதாகச் சொல்லுகிறார்கள்.

அபரக்கார்யத்திலுமப்படியே. இப்பொழுதும் உலகத்தில் இதரவர்ணஸ்தர்களில் யாராவது ப்ரேதஸம்ஸ்காரத்திற்குச் செல்லும்பொழுது ஏழ்மைத்தனத்தால் வாத்திய கோஷங்கள் முதலிய ஆடம்பரங்களின்றிச் செல்ல ஏற்பட்டால், "பார்ப்பாரப் பிணம் போலப் போகிறது", என்று சொல்லும் பழமொழியைக் கேட்டிருக்கிறோம். இதனால் வெளியாவது என்ன? பார்ப்பான் எவ்வித உயர்நிலையில் இருந்தாலும் அவன் மற்றெல்லா மக்களையும்விட ஆடம்பர விஷயங்களில் மிகவும் தாழ்ந்து நடந்துகொண்டு வந்தான் என்பதே. இதுவே பிறப்பை ரக்ஷிக்க உண்மையான கவசம்.

ஞானம் வேண்டியதுதான். பலமும் வேண்டியதுதான். ஸத்கார்யங்களைச் செய்ய பொருளும் வேண்டியதுதான். ஆசாரமும் வேண்டியதுதான். இவை யெல்லாவற்றிற்கும் ஆதாரமாக ஊரில் பெரியோர்களான சிஷ்டர்களைத் தலைமையாகக்கொண்ட

ஒற்றுமையும் வேண்டியதுதான். ஆனால் ஆடம்பரவாஸனையே இருக்கக்கூடாது. அந்த ஆடம்பரமின்மையே ப்ராஹ்மண்யத்தின் முதல் லக்ஷணம்.

எவ்வளவு கிலேசத்துடன் கிடைத்த தேகத்தை ஆத்மார்த்தமாகவும், உண்மையான உலக க்ஷேமத்துக்காகவும் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமோ அக்கடமையைச் செய்யவேண்டும்.

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌦𑍇𑌹𑍋𑌽𑌯𑌂 𑌨𑍋𑌪𑌭𑍋𑌗𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ।
𑌇𑌹 𑌕𑍍𑌲𑍇𑌶𑌾𑌯 𑌮𑌹𑌤𑍇 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑌸𑍁𑌖𑌾𑌯 𑌚 ॥

'ப்ராஹ்மணஸ்ய ஹி தேஹோயம் நோபபோகாய கல்பதே|
இஹ க்லேசாய மஹதே ப்ரேத்ய அனந்தஸுகாய ச ||'

இது மனுவின் வசனம்.

மனுநீதியே அற வளர்ச்சிக்குக் காரணம், என்பது சைவமரபு. சைவநாயன்மார்களில் ஒருவர் அரசனும் மனுநீதிகண்ட சோழர். வைஷ்ணவர்களுக்கும் இதில் வேற்றுமையில்லை. தேசிகன் முதலிய பெரியோர்கள் மனுவை எவ்வளவோ ப்ரமாணமாகக் கொண்டிருக்கிறார்கள்.

உலக கவிகளுக்குள் இன்று முதலாக போற்றப் படுகிறவன் காளிதாஸன். மனு முறையினின்று ஒரு கோடும் தவறுமலிருப்பதே ப்ரஜைகளுக்கு உண்மையான க்ஷேமத்தைத்தரும், என்பது அவனுடைய சுய அனுபவம்.

𑌰𑍇𑌖𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌪𑌿 𑌕𑍍𑌷𑍁𑌣𑍍𑌣𑌾𑌦𑌾𑌮𑌨𑍋𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑌰𑌮𑍍 ।
𑌨 𑌵𑍍𑌯𑌤𑍀𑌯𑍁𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑍁𑌰𑍍𑌨𑍇𑌮𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌃 ॥

'ரேகாமாத்ரம் அபி க்ஷுண்ணாத் ஆமனோ: வர்த்மன: பரம் |
ந வ்யதீயு: ப்ரஜா: தஸ்ய நியந்து: நேமிவ்ருத்தய: ||'

இது அவருடைய வாக்கு.

மனு, யோக சாஸ்த்ரத்தை அருளிய பதஞ்சலி முதலிய பெரியோர்கள் 'அபரிக்ரஹம்' என்ற ஒரு உத்தமமான குணத்தை உபதேசித்திருக்கிறார்கள். 'பரிக்ரஹம்' என்றால் தனது போக ஸாதனத்திற்காக அவச்யமில்லாத அதிக வஸ்துக்களைச் சேர்ப்பது என்பது தாத்பர்யம். இவ்வுலகத்தில் நாம் பிணியில்லாமல் உயிரோடு வாழ அவச்யமான பொருள்களுக்குமேல் உலகத்தினின்று எடுத்துக்கொள்வது ஒரு திருட்டுக்குச் சமானம். இந்தத் திருட்டு இல்லாமலிருப்பதே உண்மையில் ஆடம்பரமின்மை நூறு வருஷங்களுக்குமுன் ஒரு ப்ராஹ்மணனுடைய வீட்டில் தர்ப்பை ஆஸனமும், ஔபாஸனப்பானையும், சுரக்குடுக்கையும், சிக்குப்பலகையும் சாதனங்களாக இருந்தன. வ்யாதிக்கு இடம் கொடாமல், காற்றோட்டமுள்ள முற்றத்துடன்கூடிய அடக்கமான சிறு வீடுகளிலேயே வாசம். தெய்வவசத்தால் பொருள் கிடைத்தால் சிஷ்டர்களுக்கும் பக்தர்களுக்கும் அதைப் பகிர்ந்து கொடுத்துத் தாமும் அவரும் ஒரே முறையான வாழ்க்கையை நடத்துவதே வழக்கமாயிருந்தது. ஆனால் ஒவ்வொருவருக்கும் கொஞ்சம் பூமியாவது ஒரு கூரை வீடாவது இருந்தது. இப்பொழுதோ அளவில்லாமற்ற ஆடம்பரம் ஆகாசத்தை அளாவி நிற்கின்றது. ப்ராஹ்மண்யத்திற்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தின் காரணங்களில் இது முதன்மையானது.

அளவில்லாமற்ற ஆடம்பரம் என்றால் என்ன?

நூற்றில் தொண்ணூறு ப்ராஹ்மணர்களுக்கு சொந்தமான மேன்கூரைகூடக் கிடையாது. மற்ற எவ்வருணத்தினருக்கும் இந்தநிலை வரவில்லை. ப்ராஹ்மணர்களுக்கு அநேகமாக மூன்று தலைமுறைகளாக வாடகை வீடுகளிலேயே வாசம். அதன் சுகம் யுத்தத்தால் ஏற்பட்ட ஊர்மாற்ற (Evacaution) காலத்தில் நன்றாகத் தெரிந்தது. ஆஹாரத்திற்கு பூதேவிதான் உண்மை ஆதாரம். ஆங்கிலேய ராஜ்யம் வந்ததுமுதல் அநேக தடவைகளில் நிலவரித் திட்டம் ஏற்படுத்தி மேலும் மேலும் அதிகப்படுத்தி வந்தார்கள். முதல்தடவை திட்டத்தில் (Settlement) ப்ராஹ்மணர்களுக்கு எவ்வளவு பட்டா பூமி இருந்ததோ அதில் ஐந்தில் ஒரு பங்குகூட கடைசித்திட்ட சமயத்தில் (Last Settlement) அவர்களிடமில்லை. ஆனால் ஆடம்பரமோ நூறுமடங்கு அதிகமாகிவிட்டது.

பொருள் கையைவிட்டுப் போய்விட்டதே, என்பதற்காக இங்கு அழவில்லை. ஆடம்பரமே ஒரு பெரு விஷம். ஆடம்பரமே அசூயைக்குக் காரணம். தாமும் நல்வழி நடந்து, பிறரும் நல்வழிச் செல்ல தொண்டுபுரிய வேண்டியவர்கள் அசூயைக்குப் பாத்திரமாகிவிட்டால், அது துவேஷத்திற்கும், அதனால் ஏற்படும் இடையூறுகளுக்கும் காரணமாகி, தாம் நல்வழிச் செல்வதே கஷ்டமாகிவிடுகிறது. அதிலும் அஸ்திவாரமற்ற ஆடம்பரமாயிருந்தால் அது இன்னும் க்ரூரமான விஷத்தைக் கக்கக்கூடியது. ஆகையால், ப்ராஹ்மணன் ப்ராஹ்மணனாக இருக்கவேண்டுமானால், தன் பிறப்பை அனுஷ்டானங்களாலும், ஒழுக்கங்களாலும் தானும் பயன்படுத்திக்கொண்டு, பிறரும் உய்ய உதவவேண்டுமானால், வீண் ஆடம்பரங்களைக் களைய வேண்டும். நாட்டில் பரம ஏழையானவன் ஒரு வருஷத்தில் எவ்வளவு பொருள் செலவில் உண்டும் உடுத்தும் வாழ்கிறானோ, அதே செலவில் தானும் உண்டு, உடுத்து, வாழ்ந்து, ஒருக்கால் அதிகமாகப் பொருள் கிடைத்தால் உண்டு உடுக்கக் கஷ்டப்படுகிறவர்களையும், விசேஷமாகக் கல்வியும் ஒழுக்கமும் உள்ளவர்களையும் தம்மைப்போல் வாழவைக்க வேண்டும்

ஒவ்வொரு ஆடம்பரக் குடும்பத்திலும் ஜவுளிச் செலவையும் பானச் செலவையும் கவனித்துக் குறைத்தால் எவ்வளவோ ஏழைக் குடும்பங்கள் பிழைக்கலாம் கல்யாணங்களில் பதினாயிரக் கணக்காகப் பணம் வீணாக்கப்படுகிறது. நான்கு நாட்களில் அனுஷ்டிக்கவேண்டிய வ்ரதங்களும் மந்திரங்களும் மாத்திரம் ஒரு மணியில் சுருக்கப்பட்டு விடுகின்றன. முன்னாட்களில் தெய்விகக்காரியங்கள் பூராவிலும், ஆடம்பரகார்யத்தில் மணியடித்துத் தாலி கட்டுவதாகவு மிருந்தது. தெய்விகக் காரியங்களைப் புறக்கணிப்பதால் தெய்வானுக்ரஹம் குன்றி, வீணாடம்பரங்களை (Demonstrations) அதிகரிப்பதால் உலக மக்களின் அசூயைக்கும் பாத்திரமாவதால், தெய்வபலம் மக்கள்பலம் இரண்டும் விரோதமாகி, உண்மையான உலகக்ஷேமத்திற்குக் காரணமான ப்ராஹ்மண்யத்தை நாமே இந்நிலைக்குக் கொண்டு வந்து விட்டுக்கொண்டிருக்கிறோம். எந்த ஆபத்திலும் தீரமும் விவேகமும் இருந்தால் தப்பலாம். வெளி யாடம்பரமில்லாமல், நம்மையே நாம் சோதித்துப் பார்த்து, என்ன கஷ்டம் வந்தாலும்

அதைப் பொறுத்து, ஆபத்து நேரிடினும் அந்த ஆபத்தையும் அனுஷ்டானத்துடனும் பக்தியுடனும் ஏற்று, நாம் ஜீவித்தாலும் மரித்தாலும் நாமும் கடைத்தேறிப் பிற ஜீவன்களுக்கும் ஒரு எடுத்துக்காட்டாக இருந்து, நம் பிறப்பை நற்பயன் படுத்திக் கொள்ளவேண்டும்.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

Printed at Sarada Vilasa Press, Kumbakonam, Published by Veda Dharma Sastra Paripalana Sabhai Kumbakonam, Copies, 2,500, 20—5—1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

# திருக்குறளில் ஒரு குறள்.

ப்ரசுரம் 20. [விலை அணா ஒன்று]

ஸர்வஜித்-ஞு தை-மீ 17உ வெள்ளிக்கிழமை, 30—1—1948.

தர்மம், அர்த்தம், காமம் இவைகளைப்பற்றி நமது மதத்திற்கு ஆதாரமாயிருக்கும் சாஸ்த்ரங்களில் பரமசூக்ஷ்மமான கருத்துக்களையெல்லாம் தமிழில் ஒருங்கே திரட்டி யெழுதப்பட்ட நூல்களில், திருவள்ளுவருடைய திருக்குறளுக்கு ஈடாக வேறொன்றையும் சொல்வதற்கில்லை.

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

என்பது ஒரு குறள். வேதியன் வேதத்தை மறப்பது ஒரு பெரிய தோஷம். அதை தர்மநூல்கள் 'வேதோஜ்யதோஷம்' எனக்கூறுகின்றன. இதையே "ஆபயன் குன்று மறுதொழிலோர் நான்மறப்பர்", என கெட்டகாலத்திற்கு அறிகுறியாக குறள் கூறியிருக்கிறது. "ஆ பயன் குன்றும்"-"வானம் பெயலொல்லா தென்பதாயிற்று", என்பது பரிமேலழகர் உரை. நூல் மறத்திலினால் பார்ப்பானுடைய பிறப்புக்கு ஏற்படும் இழுக்கை விட அதிகமாக, தன்பிறப்புக்குரிய ஒழுக்கம் குன்றும்பொழுதே பார்ப்பானுடைய பிறப்பு கெடுகின்றது, என்பது இக்குறளின் மொத்தக் கருத்து.

தர்மத்தைப்பற்றிச் சொல்லும் மகரிஷிகளுடைய ஸூத்ரங்களில் கௌதமர் தர்மஸூத்ரமே முக்கியமானது. அதில் ஜீவனுடைய சரீரபிண்டம் தாய் வயிற்றில் ஏற்படும் காலத்தில் செய்ய வேண்டிய "நிஷேகம்" என்னும் மந்த்ரபூர்வகமான கர்மாமுதல், சரீரபிண்டத்திலிருந்து ஜீவன் வெளிப்பட்டபிறகு இப்பிண்டத்தை தேவதைகளை யுத்தேசித்து மந்த்ரபூர்வகமாக அக்னியில் ஆஹுதி செய்யும் ச்மசானகர்மாவரையில் சுமார் 40 வைதிககர்ம ரூபமான ஸம்ஸ்காரங்கள் ஜீவர்களுடைய பரிசுத்திக்காக கொஞ்சம் கொஞ்சமாக ஆத்மா பரிசுத்தி அடையும் நோக்கத்துடன் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வித ஸம்ஸ்காரங்களோடு நாம் பழக்கத்திற்கு கொண்டுவரவேண்டிய 8 ஆத்ம குணங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. தமிழ் மொழியில் ஆத்ம குணங்களையே ஒழுக்கமென்றும், கர்மானுஷ்டானங்களை வழக்கமென்றும் பண்டைய அறிஞர் கூறுவர்.

திருஞானசம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் மதுரைத் தேவாரத்தில் வேதோக்த கர்மானுஷ்டானமில்லாத சமணர்களைப்பற்றிக் கூறும்போது, அவர்கள் வேதோக்த கர்மானுஷ்டானத்தைப் புறக்கணித்ததை மகாபாபமென்று பொருள்படும்படி "மறை வழக்கமிலாத மாபாவிகள்", என்று கூறி, அவர்களுக்கு அவ்வித மகாபாபம் தீருவதற்காக, அவர்களை வாதில் வெல்லக் கருணை புரியவேண்டும், என ஸோமஸுந்தரக்கடவுளிடம் பதிகரூபமாக விண்ணப்பித்துக்கொண்டிருக்கிறார்.

கௌதம தர்மஸூத்ரத்திலும் மேற்சொன்ன 40 ஸம்ஸ்காரங்களும் 8 ஆத்மகுணங்களும், அதாவது வழக்கமும் ஒழுக்கமும், சிறந்து விளங்குபவன் உத்தமமான புண்யலோகத்தை அடைகிறான், எனக் கூறப்பட்டிருக்கிறது.

"மறப்பினும் ஓத்துக் கொளலாகும்" என்று இந்த வியாசத்தின் ஆரம்பத்தில் காட்டப்பட்ட குறளில் உள்ள 'ஓத்து" என்னும் பதம் இன்றும் கேரளத்தில் உலகவழக்கத்தில் இருந்து வருகிறது. இன்றும் கேரளநாட்டவர் வேதத்தை 'ஓத்து" என் வழங்கி வருகின்றனர். ஓதப்படுகின்றது "ஓத்து".

"ஓதாம லொருநாளு மிருக்கவேண்டாம்", என்பது ஔவையார் வசனம். இப்பொருளையே ஸ்ரீ ஆசார்யஸ்வாமிகள் 𑌵𑍇𑌦𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌧𑍀𑌯𑌤𑌾𑌂 (வேதோ-நித்யம்-அதீயதாம்) என்று ஸோபான பஞ்சகத்தின் ஆரம்பத்தில் அருளியிருக்கிறார்கள். வேதத்தை அத்யயனம் செய்யவேண்டும். சாஸ்த்ரத்தை ச்ரவணம் செய்யவேண்டும். இதையே முறையே வேதமோதல் சாஸ்த்ரங்கேட்டல் என தமிழறிஞர்கள் வழங்கிவருகிறார்கள்.

'வேதமோதிலென், சாஸ்த்ரம் கேட்கிலின்' என்பது ஆன்றோர் ப்ரயோகம். இதனால் "ஓத" என்பது அத்யயனத்தையே குறிக்கிறது. வெறும் வேதாத்யயனமும் சாஸ்த்ரச்ரவணமும் மாத்திரம்போதாது. இப்படி அத்யயனம்செய்யப்பட்ட மந்த்ரங்களைக் கொண்டு வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மானுஷ்டானங்களைச் செய்து, அவைகளும் ஈச்வரார்ப்பணம் பண்ணியே தீரவேண்டும்.

நம்முடைய ஸ்ரீ ஆசார்யஸ்வாமிகள் கைலாஸத்திற்குப் போகும்பொழுது சிஷ்யர்களெல்லாம் பரமேச்வரனுடைய க்ருபையைப்பெற சுலபமான வழி ஒன்று சொல்லவேண்டுமென்று ப்ரார்த்தித்தார்கள். இதுவரையில் சொன்ன வேதாந்தவிஷயங்களில் ஒன்றும் புரியவில்லை, சுலபமாக ஒன்று சொல்லவேண்டும், என்று வேண்டிக்கொண்டார்கள். அப்பொழுது ஸ்ரீ ஆசாரியர்கள் ஐந்து ச்லோகங்களைச் சொன்னார்கள்.

𑌵𑍇𑌦𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌧𑍀𑌯𑌤𑌾𑌂 𑌤𑌦𑍁𑌦𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌤𑌾𑌂
𑌤𑍇𑌨𑍇𑌶𑌸𑍍𑌯 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑌾𑌮𑌪𑌚𑌿𑌤𑌿𑌃 𑌕𑌾𑌮𑍍𑌯𑍇 𑌮𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌯𑌜𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 ।
𑌪𑌾𑌪𑍌𑌘𑌃 𑌪𑌰𑌿𑌧𑍂𑌯𑌤𑌾𑌂 𑌭𑌵𑌸𑍁𑌖𑍇 𑌦𑍋𑌷𑍋𑌽𑌨𑍁
𑌸𑌨𑍍𑌧𑍀𑌯𑌤𑌾𑌂 𑌆𑌤𑍍𑌮𑍇𑌚𑍍𑌛𑌾 𑌵𑍍𑌯𑌵𑌸𑍀𑌯𑌤𑌾𑌂 𑌨𑌿𑌜𑌗𑍃𑌹𑌾𑌤𑍍𑌤𑍂𑌰𑍍𑌣𑌂
𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌗𑌮𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 ॥

'வேதோ நித்யமதீயதாம் ததுதிதம் கர்ம ஸ்வநுஷ்டீயதாம்
தேநேசஸ்ய விதீயதாமபசிதி: காம்யே மதிஸ்த்யஜ்யதாம் |
பாபௌக: பரிதூயதாம் பவஸுகே தோஷோநுஸந்தீயதாம்
ஆத்மேச்சா வ்யவஸீயதாம் நிஜக்ருஹாத்தூர்ணம்
விநிர்கம்யதாம் ||'

என்பது அவைகளில் ஒன்று. நித்யம் வேதாத்யயனம் செய்யவேண்டும். கர்மாவைத் தவறாமல் அனுஷ்டானம்பண்ணு. அந்தக் கர்மாதான் ஈச்வரபூஜை. அவர் எந்தெந்தக் கார்யத்தை எப்

பொழுது பண்ணச் சொல்லியிருக்கிறரோ அப்படிச் செய்து வருவதுதான் பூஜை, என்ற கருத்து இதில் இருக்கிறது. சிலர் உத்ஸவம், பூஜை, பஜனம் முதலியவை பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். வேறு சிலர் ஔபாஸனம், அக்னிஹோத்ரம் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களைப்பார்த்து பூஜைபண்ணுகிற வர்கள் "இவர்கள் என்ன பண்ணி என்ன ப்ரயோஜனம்? கொஞ்சம்கூட பக்தி கிடையாது". என்று தூஷிக்கிறார்கள். அவர்கள் இவர்களைப்பார்த்து, "கொஞ்சங்கூட ஆசார அனுஷ்டானங்கள் இல்லை; தாளம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள்; ம்லேச்சரைப் போல இருக்கிறார்கள்; அகங்காரந்தான் இருக்கிறது", என்று சொல்லுகிறார்கள். நியாயமாக மத்தியஸ்தமாகப் பார்த்தால், கர்மானுஷ்டானம் பண்ணுவதுதான் பெரிய பக்தி என்பது தெரியவரும். அதுதான் பஜனை.

ஒரு ப்ரபுவிடம் இரண்டு வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஒருவன் எப்பொழுதும் எதிரில் நின்றுகொண்டு ப்ரபுவை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டே இருக்கிறான். மற்றொருவன் பேசவே மாட்டான், எதிரில் வரமாட்டான். ப்ரபு எந்தக்காரியத்தைச் செய்யவேண்டுமென்று மனதில் நினைக்கிறாரோ அந்தக் காரியத்தைச் செய்வான். பொதுஜனங்கள், கிட்ட இருக்கிறவனிடத்தில்தான் ப்ரபுவுக்குப் பிரியம், என்று நினைத்துக்கொண்டிருப்பார்கள். ஆனால் வேலை செய்கிறவனிடந்தான் அவனுக்குப் பிரியம் இருக்கும். அசடனாயிருந்தால் தான் ஸ்தோத்திரம் பண்ணுபவனிடத்தில் அதிகப் பிரியமாக இருப்பான். அவன் விதித்த கர்மானுஷ்டானங்களைச் செய்வதுதான் பூஜை. அதனால்தான் 'பரமேச்வர ப்ரீத்யர்த்தம்', என்று ஸங்கல்பம் செய்துகொண்டு கர்மாக்களைச் செய்யவேண்டும். வாஸ்தவமான கர்மானுஷ்டானம், பக்தியும் கர்மாவும் கலந்ததுதான். அதனால்தான் நம்முடைய ஸ்ரீ ஆசார்யர்கள் கர்மானுஷ்டானம் செய்வதுதான் பரமேச்வர பூஜையென்று சொல்லியிருக்கிறார்கள்.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

---

Printed at Sarada Vilasa Press, Kumbakonom. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam Copies, 2,500 31—5—1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபைக்கு வேதியர் எப்படி உபகாரம் செய்யலாம்?

ப்ரசுரம் 21. [விலை அணா ஒன்று]

ஸர்வஜித்-ஸு மாசி-மீ 1உ வெள்ளிக்கிழமை, 13—2—1948.

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபைக்குப் பத்து லக்ஷம் ரூபாய்கள் மூலதனம் வேண்டும். 10 லக்ஷம் ரூபாய் இருந்தால் வருஷத்திற்கு ஒருவராவது வேத மந்த்ரங்களின் அர்த்தத்தையும் தர்மசாஸ்த்ரங்களையும் தெரிந்துகொண்டவராக முன் வருமாறு செய்யலாம். இந்தக்காலத்தில் இதர ஜீவனோபாயங்களில் விசேஷ வருமானம் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் நிலைமையில், ஸாமான்ய ஜீவனங்கூட விசேஷச்செலவை அபேக்ஷிக்கும் நிலைமையில், ஒருவர் தன் வாழ்நாளை வேதத்திற்கும் தர்மசாஸ்த்ரத்திற்கும் அர்ப்பணம் செய்தால் அதைவிடப் பெரிய த்யாகம் கிடையாது. அப்படியிருக்க அப்படி முன்வருபவர்களுக்கு ப்ரதி வருஷமும் அவருடைய குடும்பயோகத்தில் பாதிபாகமாவது நாம் உபகரித்தாலொழிய ஏழைகள் வேதார்த்தத்தைக் கற்பது ஸாத்யமில்லாமல் போய்விடும். இவ்விதம் கற்றவர் ஒருவருக்கு

வருஷத்தில் 200 அல்லது 300 ரூபாய் கொடுத்து உதவினல், ஐம்பதாவது வருஷத்தில் சுமார் ஐம்பது 300 ரூபாய்கள் ஸம்பாவனையாகக் கொடுக்கவேண்டிவரும். இதைத்தவிர பரீக்ஷாதிகாரிகள் ஸம்பாவனை, கற்றவர்கள் தங்கள் வித்யா குருவிற்கு அர்ப்பணம் செய்யவேண்டிய குருதக்ஷிணை, முதலிய செலவுகள் இருக்கின்றன. இவைகளை எல்லாம் சேர்த்துப்பார்க்கும்பொழுது சுமார் 10 லக்ஷம் ரூபாய் மூலதனமிருந்தால் வருஷத்திற்கு வேதத்தின் பொருளை விளக்கும் சக்தியுள்ள ஒரு விளக்கையாவது ஏற்றிவைக்கலாம்.

இதுவரையில் இந்த மூலதனத்திற்கு உபயோகப்படும்படியாக ஒரு லக்ஷம் ரூபாய்க்குள்தான் சில அடியார்களால் உபகரிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் ஒன்பது லக்ஷம் ரூபாய்க்கு மேல் ஆஸ்திகர்களுடைய உபகாரத்தை உத்தேசித்த காரியம் பூர்த்தியாக இந்த ஸபை எதிர்பார்த்து நிற்கிறது.

ஆனல், ஆஸ்திகர்களெல்லோரும் சேர்ந்து ஒரே நாளில் பத்து லக்ஷம் மட்டுமல்ல, இருபது லக்ஷம் ரூபாய்கள் வசூல் செய்து கொடுத்துவிட்டார்கள் என்று வைத்துக்கொள்வோம். அதனலேயே வேத தர்மசாஸ்த்ர ஸபையின் நோக்கம் பூர்த்தியாகிவிடுமா? மஹாஜனங்கள் வேததர்மசாஸ்த்ர ஸபைக்குச் செய்யவேண்டிய உபகாரம் செய்தாகிவிட்டது, என்று நினைத்துக் கொள்ளமுடியுமா? பணத்தைக் குவித்துவிட்டால் மாத்திரம் வேத தர்மசாஸ்த்ர ஞானமும் அனுஷ்டானமும் உலகத்தில் ஸ்திரப்பட்டுவிட்டதென்று சொல்லமுடியுமா? வேதங்களையும் தர்மசாஸ்த்ரங்களையும் படிப்பவர்கள் ஒன்றுக்கும் உதவாத ஒரு தனிக்கூட்டத்தாரென்று மற்றவர்களெல்லாம் நினைத்துக்கொண்டிருக்கும் வரையில், இந்த மதிப்பிழந்த கார்யத்திற்கு நாம் ஏன் போகவேண்டும்? நாம்தான இதற்கு அகப்பட்டுக்கொண்டோம்! பெரிய பண்டிதர்கள், அக்னிஹோத்ரிகள், வேதவித்துக்கள், மந்த்ரசாஸ்த்ரக்ஞர்கள், , யோகாப்யாஸிகள், இவர்களுடைய வம்சத்தில் பிறந்த புத்திமான்களும் தேஜஸ்விகளுமான எல்லோரும் சிகையை எடுத்துவிட்டு ஆஹார நியமமில்லாமல், கண்ட தவறுதல்களைச் செய்துகொண்டு, அட்டஹாஸத்தோடு இருந்துகொண்டு, வேத தர்மசாஸ்த்ரம் கற்றவர்களைப் பரிஹஸித்துக்

கொண்டும் இழித்துக்கொண்டும் இருந்தால் வேத தர்மசாஸ்த்ர ஸபைக்கு எத்தனை ரூபாய் சேர்த்து வைத்தால்தானென்ன? வேறு ஒரு வழிக்கும் லாயக்கில்லாமல், புத்தியிலும் கடைசி மட்டமானவர்கள்தான் எல்லாப்பழிப்புக்கும் ஆளாகிக்கொண்டு பரீக்ஷைக்கு வரவேண்டும் என்ற நிலைமையை மாற்றுவதே ப்ராஹ்மண மஹாஜனங்கள் வேத தர்மசாஸ்த்ர ஸபைக்குச்செய்ய வேண்டிய பரம உபகாரம்.

## இந்த உபகாரத்தை எப்படிச் செய்வது?

நாம் ஒவ்வொருவரும், பணமோ கௌரவமோ கொடுக்கக் கூடிய ஒரு பரீக்ஷையின் நியமங்கள் தேசாந்திரத்தில் இருந்தாலும் அதை வரவழைத்து, அதன்படி படிக்கவேண்டியவை களைப்படித்து, அந்த பரீக்ஷைக்கு அதி சீக்கிரத்தில் நம்மைத் தயாராக்கிக்கொண்டு விடுகிறோம். உலகத்திற்கே அநாதியான நமது வேதம், அதிலும் நம்முடைய பரம்பரையில் வந்த ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், இம்மூன்றில் ஏதாவதொன்று அதையும் பூராவாக அறிந்துகொள்ள முடியாவிட்டால், நாம் நம் ஜன்மத்தில் செய்துகொண்டுவரும் உபநயனம், உபாகர்மா, விவாஹம், பிதுர்கார்யம், ஒளபாஸனம், ஸ்தாலீபாகம், இவை போன்ற ப்ரயோகங்களுக்கு அவச்யமான மந்த்ரங்கள், அவைகளின் அர்த்தங்கள் இவைகளைப்பற்றியும் ஒரு சிறு பரீக்ஷை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அந்தப் பரீக்ஷையும் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இரண்டு வருஷங்களில் கொடுக்கலாம். ஒரு வருஷத்திலேயே பரீக்ஷை கொடுக்க வேண்டுமென்று நிர்ப்பந்தமில்லை. ஸந்தியாவந்தன முடிவில் ஒவ்வொருவரும், நான் ஆச்வலாயன ஸூத்ரம், அல்லது காத்யாயன ஸூத்ரம், அல்லது ஆபஸ்தம்ப ஸூத்ரம், அல்லது போதாயன ஸூத்ரம், அல்லது த்ராஹ்யாயன ஸூத்ரம் என்று ஏதாவதொரு ஸூத்ரத்தைப் பரம்பரையாகச் சொல்லி வருகிறோம். நம் பரம்பரையில் வந்த வேதத்தை யனுஸரித்துச் செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களை ஒவ்வொரு மஹரிஷியினால் தொகுத்துக் கொடுக்கப்பட்டதே நமது அந்தந்த ஸூத்ரம். நாம் சொல்லி வரும் ஸூத்ரமே என்னவென்பது நமக்குத்தெரியாது. தெரிந்தவர்களோ வரவர அரிதாகி வருகிறார்கள்.

ஆதலால், உடனே நமது கடமையென்னவெனில், நம்முடைய ஒரு ஸூத்ரத்தை தெரிந்தவர்களிடமிருந்து தெரிந்து கொண்டு, ப்ரயோகத்தையும் ஸ்வாதீனமாக்கி, இரண்டு வருஷங்களில் நடத்தப்படும் ப்ரயோக பரீக்ஷைக்கு லௌகிக வ்ருத்தியில் உள்ளவர்களுள்பட வரவேண்டும். இதுவே பாக்கி ஒன்பது லக்ஷம் ரூபாய்களைச்சேர்த்துக் கொடுப்பதைவிட வேதசாஸ்த்ர ஸபைக்குச் செய்யும் பெரிய உபகாரம். அப்பொழுதுதான் வேத சாஸ்த்ரங்கற்றவன் மட்டம், கல்லாமல் வேறு தொழில் செய்பவன் உயர்ந்தவன், என்னும் விஷமபாவம் நீங்கும். நல்ல புத்திமான்கள் நிறைந்து பரீக்ஷைக்கு வருவார்கள். பணமில்லாமலேயே ஸபை வளரும். பணமும் பத்து லக்ஷமல்ல, பத்துக் கோடியாகச் சொரியும். வேத விளக்கு எங்கும் கார்த்திகை தீபமாய் விளங்கும். மங்களம் பொங்கும்.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

Printed at Sarada Vilasa Press, Kumbakonam, Published by Veda Dharma Sastra Paripalana Sabha, Kumbakonam, Copies, 2,500, 31—5—1948.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

---

ப்ரசுரம் 22.

[விலை அணா ஒன்று.]

# யார் பேரில் தப்பு.

இப்பொழுது எங்கே பார்த்தாலும் அக்கிரமம். ஸூர்ய உதயத்துக்கு முன் நாற்றுக்கணக்காக வேதியர்கள் ஸ்நானம் செய்து ஸஹஸ்ராவர்த்தி ஜபம் செய்துகொண்டிருந்தார்கள். தற்காலம் ஸ்னான கட்டங்களிலெல்லாம் ஒருவர் ஸ்னானம் செய்வது கூட அத்திப்பூவைப்போல் ஆகிவிட்டது. ஈச்வர பூஜை செய்து, நிவேதனம் செய்த பிறகுதான் நாக்கில் ஜலம் விடுவது, என்கிற நியமம் இருந்த குடும்பங்களிலெல்லாம், ஸூர்யோதயத்துக்கு முன் காபி சாப்பிடும் பழக்கம் வந்துவிட்டது. விதிப்படி ஈச்வரார்ப்பணம் செய்யாமல் ஒன்றையும் உட்கொள்வதில்லை, என்கிற நியமம் பரிஹாஸத்துக்கு இடமாகிவிட்டது. 50, 60 வருஷங்களுக்கு முன் ஜலமல விஸர்ஜனத்துக்குப் பின்னர் மண்ணைக்கொண்டு சுத்தி செய்துகொள்ளாதவர்களைக் காண்பது அரிதாக இருந்தது. இப்பொழுது ஜலத்தைக்கொண்டு சுத்தி செய்துகொள்ளுவதுகூட பரிஹாஸத்துக்கு இடமாகிவிட்டது. நாகரீகம் முத்தியதென்றால் ஜலமல சௌசம்கூட பறந்துபோய் விட்டது, என்று அர்த்தம். நாகரீகம் என்றால் மிருகத்தைப் போல ஆவது. கெட்டுப்போன ஆசாரங்களை அடக்கிக்கொண்டு போனால் முடிவு சந்தேகம். ஆதலால் இந்த இடத்திலேயே நிறுத்திக்கொள்வோம்.

2. ஆனால், இதற்கு எல்லாம் யார்பேரில் தப்பு, அதைப் பின்னால் நிர்ணயத்துக்கொள்வோம்.

3. இதுவரையில் சொன்ன அக்ரமங்கள் ஒருவிதம். இப்பொழுது தற்காலத்தில் திடீரென்று கிளம்பியிருக்கும் அக்கிரமங்கள் நினைக்கக்கூட முடியாதபடி கோரமாகக் காணப்படுகின்றன. போன வருஷம் ஆகஸ்ட் மாதம் பிரிட்டிஷ் ராஜாங்கமும் ஸைன்யமுமிருக்கும்போதே கல்கத்தாவில், இங்கிலீஷ்கார உத்தியோகஸ்தர்களால் துருஷ்கர்களுக்கு கொடுக்கப்பட்ட ஆயுதங்களைக் கொண்டு, கடைகளுக்கும் வீடுகளுக்கும் நெருப்பு வைப்பது, ஸ்த்ரீகளை இன்ன விதத்தில்தான் என்று சொல்லமுடியாதபடி சித்திரவதையைக்காட்டிலும் அதிக சித்திரவதையான மான பங்கம் செய்வது, குடும்பம் குடும்பமாக கொலை செய்வது முதலியன, நாகரீக மனிதனின் முறையை மாத்திரமல்லாமல் மிருகங்களின் முறையையும் மீறிவிட்டன. அவைகள் முளைத்து, பூத்து, காய்த்து, ஸிந்து, பாஞ்சாலம், வங்காளம், எல்லைப்புறம் முதலிய தேசங்களில் அநேகமாக ஹிந்து மதத்தையே அழித்துவிட்டன. வரவர வெளியாகும் சமாசாரங்களைப்பார்த்தால், இவ்வளவையும் வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்தது இங்கிலீஷ்காரர்கள். அதுமாத்திரமல்ல, தூக்கிவிட்டதும் இங்கிலீஷ்காரர்கள். அதுமாத்திரமும் அல்ல. ஆயுதம் கொடுத்ததும் இங்கிலீஷ்கார உத்தியோகஸ்தர்கள். ஆகவே, உண்மையில் பாகிஸ்தான் (Pakistan) கிடைத்திருப்பது துருஷ்கருக்கு அல்ல, இங்கிலீஷ்காரர்களுக்குத்தான். இவ்வளவு அக்ரமங்கள், அதிலும் ஸ்திரீகளுக்கு செய்யப்பட்ட அக்கிரமங்கள், உலகம் தோன்றியது முதல் மனுஷியவர்க்கத்தால் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை.

4. நமது சாஸ்த்ரப்படி ராஜ்யங்கள் நடந்துகொண்டிருந்த காலத்தில், ராஜ்யங்கள், பரஸ்பரம் யுத்தம் ஏற்பட்டால், ஸ்திரீகளுக்கோ குழந்தைகளுக்கோ, வயோதிகர்களுக்கோ, சிஷ்டர்களான பெரியோர்களுக்கோ, ஒரு தீங்கும் நேராதபடி ஜாக்கிரதையாகக் கவனிக்கப்பட்டு வந்தது. நிராயுதபாணியான ஒருவனைக் கொல்லுவதே பேடித்தனமாக கருதப்பட்டது. நிராயுதபாணியான ஒருவன் ஆயுதபாணியான ஒருவனால் கொல்லப்பட்டால், கொல்லுபவனுக்கு அவமானம். இப்படியிருக்க,

தற்காலம் யுத்தத்தில் நிரபராதியாகவும், நிராயுதபாணியாக குடும்பங்கள் வசிக்கும் வீடுகளுக்கு நெருப்பு வைப்பதும், ஸ்த்ரீ கள் சொல்லவொண்ணாத வழிகளில் துன்புறுத்துவதுமே உயர்ந்த யுத்தம், என்பதும் ஸகஜமான பழக்கத்திற்கு வந்துவிட்டது. இவைகளுக்கெல்லாம் தப்பு யார்பேரில்? தப்பு எங்கே இருக்

## ஒரு கதை.

5. துர்யோதனரும், தர்மபுத்திரரும் பால்யமாக இருக்கும் பொழுது, ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவ்விருவரையும் கூப்பிட்டு துர்யோதனனைப் பார்த்து: "உலகத்தைச் சுற்றிப்பார்த்து, உனக்கு நல்லவர்களாகத் தோன்றுகிறவர்களை எல்லாம் எழுதிக் கொண்டுவா" என்று சொன்னார். தர்மபுத்திரரை நோக்கி, "உலகத்தை சுற்றிப்பார்த்து, தப்புமட்டும் செய்யும் அயோக்கி யர்களை எல்லாம் எழுதிக்கொண்டுவா" என்று சொன்னார். இரு வரும் சுற்றிவிட்டு வந்தார்கள். துர்யோதனன் ஸ்வாமியைப் பார்த்து, "ஸ்வாமி, உலகத்தில் ஒருவன் வெளிக்கு எவ்வளவு நல்லவனாகத் தோன்றினாலும் அவனிடத்தில் உள்ளே ஏதாவது ஒரு அயோக்கியத்தனம் இருந்தே இருக்கிறது. அதனால் நான் எவ்வளவு சுற்றிப்பார்த்தும் ஒருவனையும் நல்லவனென்று சொல்ல முடியவில்லை", என்று சொன்னான். தர்மபுத்திரர் உலக மெங்கும் சுற்றிப்பார்த்து, எல்லா மனிதர்களிடத்தில் பூராவாக வும் கெட்ட குணத்தையே பார்க்க முடியாமற்போய், கடைசி யாக, ஜீவஹிம்சை செய்கிறவனும், மஹாகிராதகமான தொழில் செய்துகொண்டிருப்பவனுமான ஒரு கசாப்பு கடைக்காரனைப் பார்த்து, அவன்தான் பூர்ணமான கெட்டகுணவடிவுள்ளவன் என்று நினைத்தார். அவன் மாம்ஸ வியாபாரம் செய்து கொண் டிருக்கையில், ஒரு நாய் மிக்க பசியுடன் கடையை அண்டிற்று. அவன் அதைப் பார்த்து, அனுதாபப்பட்டு, கடையிலிருந்த மாம் ஸத்தில் ஒரு பாகத்தை நாய்க்கு ஆகாரமாக அளித்தான். இதைப் பார்த்த தர்மபுத்திரர். மஹா க்ரூரமான ஜீவஹிம்சையில் ஈடுபட்ட ஒரு கசாப்புகடைக்காரனுக்குக்கூட அனுதாபமும் தர்ம சிந்தனை யும் இருப்பதைக்கண்டு வியந்து, கிருஷ்ணபகவானைப் பார்த்து "ஸ்வாமி, உலகத்தில் மிகக்கெட்டவனாக தோன்றுபவனுக்குக்

கூட ஒரு நிவலையாவது நல்லகுணம் இருக்கிறது. பூராவாகவும் கெட்ட ஸ்வபாவமுள்ள மனிதனை நான் பார்க்க முடியவில்லை'', என்று சொன்னார்.

6. இக்கதையை நோக்குங்கால், யாரிடம் தப்பு என்கிற கேள்வியே பறந்து ஓடுகிறது. முதலில் பார்த்தால், துருஷ்கர்கள் செய்வது அயோக்கியத்தனமாக காணப்படுகிறது. இன்னும் கொஞ்சம் உள்ளே ஊன்றிப்பார்த்தால் "அடாடா! துருக்கன் ஏமாந்த அப்பாவி; வெள்ளைக்காரன் ஆட்டிவைக்கிறபடி ஆடிக்கொண்டு அவனும் கஷ்டப்படப் போகிறானே, ஐயோ, பாவம்!'' என்று தோன்றுகிறது. இன்னும் ஊன்றி வெள்ளைக்காரனைப் பார்த்தாலோ, "அவன்தான் என்ன செய்வான். இந்தியாவும், ருஷியாவும், சீனவும் அமைப்பில் அடுத்தடுத்து அமைக்கப்பட்டிருக்கின்றன. இம்மூன்றிலும் உள்ள ஜனங்கள் ஒன்று சேர்ந்து விட்டால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமோ, அல்லது அதற்குப் பரிந்துவரும் அமெரிக்க ஆதிக்யமும், எல்லாம் பறக்கவேண்டியதுதான். எப்படியாவது இம் மூன்றையும் தடுத்தாலல்லாது தான் பிழைக்க வேறு வழி உண்டா'', என்று யோசிக்கிறான் வெள்ளைக்காரன். இந்தியாவுக்கும் ருஷியாவுக்கும் நடுவே மேற்கு பாகிஸ்தான். இந்தியா, ருஷியா, சீன, இந்த மூன்றுக்கும் இடையே உள்ளது காச்மீரம். தான் பிழைக்க எப்பாடாவது பட்டல்லவா ஆகவேண்டும்.

## "யார் பேரில் தப்பு"

7. இவ்விதம் விசாரித்துக் கொண்டே போனல், இவ்வளவுக்கும் தப்பு யாரிடமுமில்லை. பிறரிடம் தப்புச்சொல்லுவதே பேடித்தனம். உலக இயற்கையிலேயே, ஒவ்வொரு பிராணியும் தன்னையும் தன் குடும்பத்தையும் ரக்ஷித்துக்கொள்ள கடமைப் பட்டிருக்கிறது. எவனே ஒரு இங்கிலீஷ்காரன் நம்மை ரக்ஷிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுவிட்டான். ஆதலால் நாம் அந்த பொறுப்பில்லாமல், இதர சுகங்களில் ஈடுபடலாம் என்று எண்ணி மூன்று நூற்றாண்டுகளாக ஏமாந்ததிலேயே தப்பு இருக்கிறது. இவ்விதம் வெளியே நடக்கும் அக்கிரமங்களுக்கு எல்லாம் தப்பு நம்மிடம் என்று உணர்வது போல, உலகத்தில், வளர்ந்து வரும்

அனுசாரங்களுக்களுக்கெல்லாம் யார்பேரில் தப்பு? இவ்விஷயத்தில், யார் பேரில் தப்பு என்று ஆலோசித்துக்கொண்டிருப்பது, முன் விஷயத்தைப் போலவே இலவங்காத்த கிளி போலவே ஆகும். "நம்மிடம் ஊறியிருக்கும் புது அனுகரீகமான அனுசாரங்களை எவ்வளவுவரை நாம் சீர்படுத்திக் கொண்டிருக்கிறோம்", என்று நம்மைப் பார்த்துக்கொள்ளாமலிருப்பது தப்பு.

8. வாசகர்களிடம் சிலகாரியங்களை ஞாபகப்படுத்துகிறோம். அவைகளில் ஒன்றிரண்டாவது தங்கள் குடும்பத்தில் சீர்திருத்திக்கொள்ள முடிந்ததா, என்பதை வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபைக்கு அறிவிக்கும்படி வெகு வணக்கத்துடன் வேண்டிக் கொள்ளுகிறோம். இது சபையின் ஒரு அதிகப்பிரசிங்கித்தனம் தான். அதற்கு அவசியம்மன்னித்துவிடவும். கீழே விவரிக்கப்படும் காரியங்களில் எந்தெந்த விஷயத்தில் தங்கள் குடும்பத்தில் சீர்திருத்தம்செய்ய முடிந்தது என்பதை எழுதவேண்டாம். காரியத்தின் பெயரைக் கூறுமல் "ஒரு காரியம் சீர்திருத்தம் செய்ய முடிந்தது. அல்லது இரண்டு காரியங்கள் சீர்திருத்தப்பட்டன. அல்லது பிரயத்தனப்பட்டும், ஒன்றும் சாத்தியமாகவில்லை" என்றாவது பதில் தெரிவித்தால் போதும். அவ்வித பதிலுக்கே ஸபை நன்றியுள்ளதாகவே இருக்கும்.

## கவனிக்கவேண்டிய காரியங்கள்.

1. ப்ராஹ்மண குடும்பத்திலுள்ள ஆண் குழந்தைகளுக்கு எட்டுவயதிற்குள் உபநயனம் செய்யவேண்டும்

2. ஹோட்டல்களில் சாப்பிடுவதை நிறுத்தவேண்டும்.

3. ஸ்திரீகள் சினிமாவுக்குப் போவதை நிறுத்தவேண்டும்.

4. ஸ்திரீகள் ரஜோதூரதீட்டை அனுஷ்டிப்பது.

5. பெண்களை பள்ளிக்கூடத்துக்கு. அனுப்பாமல் வீட்டிலேயே முடிந்த பக்திமார்க்க கல்வி போதிப்பது.

6. பெண்களுக்கு கூடிய வரையில் காலத்தில் விவாஹம் செய்வது.

7. சிகையை எடுக்காமலிருப்பது.

குறிப்பு:—இந்த கெட்ட வழக்கம் பறையர்களினும், அடுத்தபடி நாட்டுப்புறத்து குடியானவர்களிடமும் அவ்வளவு அதிகமாக இல்லை. மற்றவர்களும் இன்னும் அதிகமாக பரவாமல் காத்துக்கொள்ள வேண்டும்.

9. ஒவ்வொருவரும் தங்கள் இஷ்ட தேவதா மூர்த்தியின் மந்த்ர அநுஷ்டானமுள்ள ஒரு பெரியோரிடம் உபதேசம்பெற்று தம் ஆத்ம க்ஷேமத்துக்கு ஊன்றுகோலாக வைத்துக்கொள்ளுவது இவை முதலியன.

தவிர, நமது ஸபைவெளியிடும் ப்ரசுரங்களை மக்களுக்கு இன்னும் அதிக உபயோகமாகும்படி எந்த முறையில் சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று வாசகர்கள் ஒவ்வொருவரும் தங்கள் அபிப்பிராயங்களை கார்யதர்சிக்கு எழுதியனுப்பவேண்டியது. இவ்விதம் எழுதி அனுப்பும் உதவி, பணம் முதலியவைகளைவிட பெரிய உதவி. இதுவே உண்மையில் ஸபையை வளர்த்து, ஸபை பொது ஜனங்களுக்கு நல்ல வழியில் தொண்டாற்றும்படி செய்து, எல்லா பெரியோர்களுடைய ஆசீர்வாதத்துக்கும் நாம் எல்லோரும் பாத்திரமாகக் கூடியது.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

Printed at Sarada Vilasa Press, Kumbakonam; Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 2,500, 19—6—1948.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

ப்ரசுரம் 23.

[விலை அணா ஒன்று.]

# ஜீவனத்துக்கு திட்டம்.

ஒருவர் அஸ்ஸாம் பக்கத்தில் ரயில் வேலையில் இருந்தார். வெகு சீக்கிரத்தில் ரூ. 600 சம்பளமாகிவிட்டது. ஆனால் அந்த உத்யோகத்தில் ஸத்யத்திற்கும், ஸ்வதந்திரத்திற்கும் இடமில்லை. சுமார் 30 வயதுக்குள் ராஜிநாமா கொடுத்துவிட்டார். அந்த மூலை ரயில்வேயில் ஆள் அகப்படாததால் ராஜிநாமாவை அங்கீகரிக்க மறுத்தார்கள். வெகு சிரமப்பட்டு Medical Certificate சம்பாதித்தர். தன் வருமானத்தை நஷ்டப்படுத்திக்கொண்டும், ஸத்யமான வாழ்க்கையை எட்டிப்பிடிக்க ஸத்யத்தை தளர விடவேண்டியதாயிற்று. எப்படியோ வெகு சிரமப்பட்டு ராஜிநாமாவை அங்கீகரிக்கும்படி செய்துவிட்டார். சென்னைக்கும் வந்துவிட்டார்.

"எவ்வளவோ குஜராத்தி ப்ராஹ்மணர்கள் தன்னைப்போல் ப்ராஹ்மணராக இருந்தும், ஒரு படிப்பும் ஒரு உத்யோகமுமில்லாமல் வெகு சுலபமாக இந்த சம்பளத்துக்கு மேல் சம்பாதித்துவிடவில்லையா? அவர்களை யாராவது அதிகாரம் செய்கிறார்களா? நாமும் ஏன் அப்படி சுதந்திரமாக சம்பாதிக்கக்கூடாது?" என்ற எண்ணமே அவரை ராஜிநாமா செய்யத் தூண்டிற்று.

"பம்பாயிலும் கல்கத்தாவிலும் தென்னிந்தியர்கள் அதிகமாக ஊழியம் செய்து, ஊதியம் பெற்று ஜீவிக்கிறார்கள். அநேக

மாய் கம்பெனி வைத்திருக்கும் வெள்ளைக்காரர்கள் தற்பொழுது ஊருக்குப் போவதற்கு மூட்டை கட்டிக்கொண்டிருக்கிறார்கள். பம்பாய் மாகாணமும் பாஷைவாரியாக குஜராத், மஹாராஷ்டிரம் என்று பிரிக்கப்பட்டுப்போய்விட்டால், கம்பெனிகளுக்கெல்லாம் அம்மம்மாகாணத்தவரே தலைவரும் ஆகிவிட்டால், கீழ் வேலைகளுக்கெல்லாம் அம்மம்மாகாணத்தவர்களையே வைத்துக்கொள்வார்கள். ஆதலால் பல்லாயிரக் கணக்கான தென்னிந்தியர்களுக்கு அப்பொழுது ஊருக்குத் திரும்ப சீட்டு கிடைத்துத்தானே ஆக வேண்டும்'', என்றார் ராஜிநாமா கொடுத்தவரைப்பார்த்து ஒரு சிநேகிதர்.

பேச்சுவாக்கில் மற்றொரு சிநேகிதர் சொன்னதாவது:—

''அப்படி சில கம்பெனிகள் போனாலும், பார்ஸிகளும், மார்வாடிகளும், பாதிக்குமேல் வியாபாரங்களை கையில் வைத்துக் கொள்ளுவார்கள். அவர்களுக்கு வேலைக்கு வைத்துக்கொள்ளும் விஷயத்தில் மாகாண மனப்பான்மை கிடையாது. ஆகையால், தென்னிந்தியர்கள் அவர்களை நம்பி பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களில் ஜீவித்துக்கொண்டு இருக்கலாம்.''

ராஜிநாமா கொடுத்த முதல் பேர்வழிக்கு வெகு கோபம் வந்துவிட்டது. ''அந்த பார்ஸிகளுக்கும், மார்வாடிகளுக்கும் இருக்கும் மூளை நமக்கில்லையா? போய் போய் அவர்களிடத்தில் சேவகாவ்ருத்தி செய்யும் ஸங்கல்பத்தை திடப்படுத்திக்கொண்டு, உச்சி குளிர்ந்து தலையாட்டிக்கொண்டு இருக்கிறீர்களா'', என்று கடிந்தார். ''அவர்களுக்குமேல் நான் சம்பாதிக்காவிட்டால் பார்'' என்று கர்ஜனை செய்தார்.

அப்பொழுது அங்கு ஒரு கிழவர் வந்தார். ''உத்தியோகம் செய்வது நல்லதே ஒழிய, வியாபாரம் செய்வது நல்லது அல்ல,'' என்றார்.

பாக்கி மூவரும் ஒன்று சேர்ந்து, ''இதென்ன! நீர் கிழவர் இப்படி சொல்லுகிறீர்? ராஜாங்கத்திலும் ப்ராஹ்மணர்களுக்கு உத்தியோகம் இல்லை என்கிறார்கள். ஸ்வயமரியாதைக்காரர்களும் கடுமையாக ப்ரசாரம் செய்கிறார்கள், புதிதாக கூட்டப்பட்ட

முற்போக்கு ப்ராஹ்மணக் கூட்டத்தவர்களும், ப்ராஹ்மணர்கள் உத்தியோகத்துக்கு போகக்கூடாது, என்கிறார்கள். பழைய கிழ வித்வான்களும், ப்ராஹ்மணர் ஸேவிகாவ்ருத்தி செய்வது மஹா பாபம், என்று சொல்லி வந்திருக்கிறார்கள். அப்படியிருக்க, நீரும் கிழவராக இருந்துகொண்டு, வியாபாரம் செய்வதைவிட உத்தியோகம் செய்வது உயர்ந்ததென்று எப்படிச் சொன்னீர்'', என்று அதட்டினார்கள்.

'என்னவோ, ஐயா, எனக்குத் தோன்றியதைச் சொன்னேன்'' என்று சொல்லிவிட்டு நகரப்போனார்.

ஒரு சிநேகிதர் அந்தக் கிழவரை கையைப் பிடித்து இழுத்தார். ''நான் உமக்கு வக்காலத்து வாங்கிக் கொள்ளுகிறேன். பயப்படாதேயும்'' என்று சொல்லிக்கொண்டே, அவரை கையைப்பிடித்து உட்கார்த்தி வைத்தார். உட்கார்த்தி வைத்துவிட்டு, வாதம் (Argument) பேசத் தொடங்கினார்.

''குஜராத்தி ப்ராஹ்மணனும் ப்ராஹ்மணன், நானும் ஒரு ப்ராஹ்மணன். அப்படியிருக்க குஜராத்தி ப்ராஹ்மணன் மட்டும் ஒருவரிடமும் கைகட்டிநிற்காமல், பணத்தைக்குவித்துக்கொண்டு இருக்கிறான். நான் மாத்திரம் மேஜைக்கு ஒரு ஸலாம் செய்து கொண்டும், ஒவ்வொரு மாதமும் 5 தேதிக்கு மேல் கைம்மாற்றும் வாங்கிக்கொண்டும் ஏன் கஷ்டப்படவேண்டும், என்று சொல்லிக்கொண்டல்லவா நமக்கு இனி உத்யோகம் வேண்டாம், வியாபாரம் செய்துவிடுவோம், என்று வீரவாதம் பேசுகிறீர்கள். குஜராத்தி ப்ராஹ்மணன் வியாபாரம் செய்கிறானே, அவனுக்கு ஒரு ஸம்ஸ்க்ருத புஸ்தகமோ, ஒரு இங்கிலீஷ் புஸ்தகமோ, எதிலாவது சேர்ந்தாற்போல் ஒரு பக்கம் வாசிக்க முடியுமா? அவனைப் போல் நீங்களும் வியாபாரம் செய்ய ஆரம்பித்துவிட்டால் எல்லோரும் தற்குறிபேர்வழியாகத்தானே ஆகிவிடவேண்டும். நாம் வேதங்களையும், சாஸ்த்ரங்களையும், அவைகளில் ஆழ்ந்துகிடக்கும் உயர்ந்த தத்வங்களையும், ஒரு நூற்றாண்டாக கைவிட்டுவிட்டாலும், உத்யோக ஜீவனமென்ற ஒரு காரணத்தினால்தானே வேறு ஒரு பாஷையைக் கொண்டாவது எப்பொழுதாவது சில உயர்ந்த தத்வங்களை கொஞ்சமாவது எட்டிப் பார்க்கிறோம். உத்

யோக முறையை நாமே விட்டுவிட்டு வியாபாரிகளாக ஆகிவிட்டால் நாம் ஒரு மக்குகளாகத்தானே இருக்கவேண்டும். ஆகையால்தான், தாதா வியாபாரத்தைவிட உத்யோகம் மேலானது என்று சொல்கிறார்.''

உத்தியோகம் விட்டவர் :—

''அப்படி அல்ல தாதா. எல்லோரும் பால்யத்தில் கொஞ்சதூரம் படித்துவிடவேண்டும். அப்புறம் வியாபாரம் செய்ய வேண்டும். இதை நன்றாக ப்ரசாரம் பண்ணி அதே ஏற்பாட்டுக்கு கொண்டுவரவேண்டும். ஸேவகாவ்ருத்தியில் எவ்வளவு பாபம் தெரியுமா? ஸேவகாவ்ருத்தியினால் நாம் எவ்வளவு கஷ்ட நிலைமைக்கு வந்துவிட்டோம் தெரியுமா?''

தாதா :—''அது சரிதான் அப்பா. ஆனால் வியாபாரத்துக்குத்தான் போகவேண்டும் என்று ஓர் தீர்மானத்துக்குவந்து, அந்த ஒரு வழிதான் இந்த சமூகத்துக்கு, என்று ஏற்பட்டுவிட்டால், நீ தலை கீழே நின்றாலும், பையன்கள் உயர்ந்த வேதத்திலேயோ, சாஸ்த்ரத்திலேயோ, விக்ஞானத்திலேயோ (Science), கணித சாஸ்த்ரத்திலேயோ, (Mathematics), என் வீணாக காலத்தைக் கழிக்கவேண்டும், என்று கேட்கமாட்டார்களா? சிறகு முளைத்தஉடனே கடையில் கணக்கு எழுத அல்லவோ போய்விடுவார்கள். அப்படி இரண்டு தலைமுறை ஆகிவிட்டால், அந்த வம்சத்தின் புத்தி உலக்கைகொழுந்தாய் ஆகிவிடுமல்லவா. இரண்டு தலை முறை ஹோட்டல் வைத்துவிட்டால் அவர்களுடைய புத்தி எந்த நிலைமையிலிருந்துவருகிறது என்று இப்பொழுதே ப்ரத்தியக்ஷமாய் தெரிகிறதல்லவா. ஆகையால் சமூகம் முழுவதும் வியாபாரத்துக்குப் போகவேண்டும், என்று ஓர் தீர்மானம் செய்துவிட்டு, கொஞ்சகாலம் தத்துவ ஆராய்ச்சி மட்டும் செய்துதீரவேண்டும். என்று கட்டுப்பாடு செய்தால், அதை ஒருவரும் கேட்கப்போவதில்லை.''

மற்றெல்லோரும்கூடி சொல்லுகிறார்கள் :—

''எது சொன்னாலும் தாதா, அதற்கு கோணக்கக்ஷி சொன்னால், என்னதான் முடிவு செய்வது?''

தாதா :—

"எனக்குத் தோன்றினதைச் சொன்னேன். நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள், என்று அப்பொழுதே சொன்னேனே. என்னை உங்களில் ஒருவர் பரிந்து பேசுவது போல் கையைப்பிடித்து உட்கார்த்தி விட்டார். நான் திரும்பவும் எனக்குத் தோன்றியதை ஒரு உபன்யாஸம் செய்துவிட்டு ஓடிப்போய்விடப் போகிறேன். நீங்கள் என்னவேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். உபன்யாஸம் ஆரம்பிக்கிறேன் :-

"நாமெல்லோரும் கூட்டங்கூடி, கட்டுப்பாடு செய்து கொண்டு, உத்தியோகத்துக்கு ஆரம்பிக்கவில்லை. ஆகையால் கூட்டம் போட்டு, கட்டுப்பாடு செய்துகொண்டு விடவும் முடியாது. ஆசைகாட்டினான். நாம் உத்தியோகத்துக்குப்போனோம். இப்பொழுது விரட்டுகிறான். வேறுவழிகளைத் தேடித் தான் ஆகவேண்டுமென்று ஆரம்பித்திருக்கிறோம். ஜீவனம் என்பது ஒரு வெளி வியாஜம். உண்மையில்,

गोविन्देति सदा स्नानं, रामामृतम् जीवनम् ॥

கோவிந்தேதி ஸதா ஸ்நானம்
ராமாம்ருதம் ஜீவனம்

"ஒரு சமூகம் படிப்பையும் ஈசனிடம் எல்லையற்ற அன்பையுமே தன் காரியமாகக் கொண்டிருந்தால்தான் உலகம் ஜீவிக்கும். எல்லா சமூகங்களுமே சோற்றுக்காரியத்திலேயே இறங்கிவிட்டால், உலகத்துக்கு சோற்றுக்குக் கூட திண்டாட்டம் வந்துவிடும். உண்மை வாழ்வோ, போலி வாழ்வோ, ஒரு வாழ்வும் வாழமுடியாது. வாழ்வைப்பற்றி அவனவன் பார்த்துக்கொள்வான். வாழ்வைப்பொறுத்து ஒருவனும் பார்த்துக்கொள்ளாவிட்டாலும் பாதகமில்லை. ஆத்ம சாஸ்த்ர படிப்பும், உலகத்தில் நல்வாழ்வு வாழவேண்டிய "தற்காலசாந்தி" படிப்புமே, நமது காரியமாகக்கொண்டு, பகவானிடம் எல்லையற்ற நம்பிக்கையும், உருக்கமுமே நமது மனோ நிலையாகக்கொண்டு, ஒரு சமூகம் உலகே இருப்பின், அதற்கு ஆகாரம் கொடுக்க வேண்டிய

பொறுப்பு நம்முடையதல்லவென்று பகவானே அவருடைய கருவிகளான பொது மக்களோ நினைத்தால், அப்படியே நடக்கட்டும். இப்பொழுது இந்தியா சுதந்திரமடைந்த மஹோத்ஸவத்தில், எவ்வளவு மானபங்கம், எவ்வளவு பிராணன்களின் பங்கம் ஏற்பட்டிருக்கிறது! அப்படி இருந்தும் பெரிய பெரிய காங்கிரஸ் பிரமுகர்கள் இந்தியாவின் சுதந்தரம் (Indian Independence) என்னும் விலைமதிப்பற்ற ரத்தினத்திற்கு இந்தகஷ்டங்களெல்லாம் ஒரு சிறு தியாகமே என்கிறார்கள். பகவானிடத்தில் பூர்ணமாயும், முழுமையாயுமுள்ள நம்பிக்கைக்காக ஒரு ப்ராஹ்மண சமூகம்—இந்தியாவின் சுதந்தரத்துக்காக ப்ராணிகள் பிராணனை ஏராளமாக தியாகம் செய்யவில்லையா? தன்னையே தியாகம் செய்துவிட்டாலும் சரி, அல்லது அதை பகவானே கைவிட்டுவிட்டாலும் சரி, பொது மக்கள் எல்லோரும் சேர்ந்து இவர்களுக்கு இப்படித்தான் வேண்டும், என்று கர்வித்கொண்டு, கைவிட்டுவிட்டாலும் சரி, இது ஒரு பெரிதே அல்ல. ஆகவே ஜீவனத்தைப்பற்றி, நாம் இன்னதுதான் செய்வது, என்று நாம் கட்டுப்பாடு செய்யவேண்டாம். 'படிக்கவேண்டும், கடவுள்பக்தி வேண்டும், இதற்குப் பிறகுதான் எல்லாம்,' என்ற ஒன்றையே நான் சொல்லிக்கொண்டேபோகிறேன். இதற்கு ஸ்ம்ருதிகளில் இருக்கும் இரண்டு ச்லோகங்களையும் உருப்போட்டுக்கொண்டே போகிறேன். அதற்கு அர்த்தம் சொல்லப்போவதில்லை. அக்கறையிருப்பவர்கள் இன்னும் கொஞ்சம் கொஞ்சம் பாக்கி இருக்கும் ஸம்ஸ்க்ருதம் தெரிந்தவர்களிடத்தில் அர்த்தம் தெரிந்து கொள்ளட்டும்.'

ब्राह्मणस्य हि देहोऽयं न उपभोगाय कल्पते ।
इह क्लेशाय महते प्रेत्य अनन्तसुखाय च ॥
पञ्चमे अहनि षष्ठे वा शाकं पचति यो नरः ।
अनृणः अपि अप्रवासी (?) अपरप्रेष्यः तं विदुः ब्राह्मणं बुधाः ॥

ப்ராஹ்மணஸ்ய ஹி தேஹோயம் ந உபபோகாய கல்பதே।
இஹ க்லேசாய மஹதே ப்ரேத்ய அனந்தஸுகாய ச॥
பஞ்சமே அஹநி ஷஷ்டே வா சாகம் பசதி யோ நர:।
அந்ருண: அபி அபரப்ரேஷ்ய: தம் விது: ப்ராஹ்மணம் புதா:॥

"இதோ ஒரு சிறு கதையும் சொல்லிவிட்டு போகப்போகிறேன்.

"காவேரிக்கரையில் திருவிசலூர் என்ற ஊரில் சுமார் 50 வருஷங்களுக்கு முன் குட்டி என்று ஒரு பையன் இருந்தான். அவனுக்கு சுமார் 20 வயது இருக்கும். மூன்று சாஸ்த்ரங்களிலும் நல்ல தேர்ச்சி பெற்றுவிட்டான். திருவிசலூரிலிருந்து கிழக்கே 6 மைல் தூரத்தில் மணலூர் என்ற ஊர் இருக்கிறது. அவ்வூரில் ஸ்ரீனிவாஸய்யர் என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் கால் நடையாகவே வங்காளத்திலுள்ள நவத்வீபம் என்ற ஊருக்குச் சென்றார். அங்கு அநேக வருஷங்கள் தர்க்க சாஸ்த்ரம் படித்தார். அப்பொழுது வங்காளத்தில் கதாதர பட்டாச்சாரியரால் வெளியிடப்பட்ட நவீன தர்க்க முறைகளையும் அப்யஸித்தார். அநேக வருஷங்கள் அங்கு அப்யஸித்துவிட்டு திரும்பவும் தம் ஊர் வந்து சேர்ந்தார். அந்த ஸ்ரீனிவாஸய்யரிடத்தில் நமது குட்டி நவீன தர்க்கங்களை எல்லாம் அப்பொழுதுதான் படித்திருந்தார்.

"அந்தகாலத்தில் வங்காளத்திலிருந்து ஒரு தர்க்க பட்டாச்சாரியர் ராமேச்வரத்துக்குப் போய்விட்டு திரும்புங்காலையில், தஞ்சை சர்போஜி மன்னர் ஸபைக்குவந்தார். அந்த ஸபையிலிருந்த சோழநாட்டு தர்க்க பண்டிதர்கள் எல்லோரும் ப்ராசீன முறைப்படியுள்ள தர்க்க சாஸ்த்ரம் கற்றவர்களே யொழிய, நவீன தர்க்க முறையைப்பற்றி அதிகம் தெரிந்தவர்களல்ல. அப்படி ஒன்று வடக்கே ஆரம்பிக்கப்பட்டிருப்பதாக அவர்களுக்கு கேள்விமட்டும்தான். ஆதலால், அவ்வங்காள தர்க்க பண்டிதரிடம் எல்லோரும் தோற்றுப்போனார்கள். அரசனிடம் வங்காள பண்டிதர் விசேஷ ஸம்மானம் பெற்றார். அரசனுக்கு மாத்திரம், இவனுக்கு சமமானவர் நமது நாட்டில் இல்லையே, என்ற குறை குறைதான். அப்பண்டிதன் தஞ்சையைவிட்டு திருவிடைமருதூருக்கு வந்தான். திருவிடைமருதூரில் தஞ்சையினின்று பிரிந்துவந்த அமரஸிம்ஹ மஹாராஜா ஆண்டிருந்தது. அவ்வரசன் சகலகலாவல்லவன். அவனுடைய சபையிலும் அவ் வங்காள பண்டிதன் அந் நாட்டு பண்டிதர்களை வாதத்துக்கு அழைத்தான். பண்டிதர்கள் சற்றுதூரம் சமாளித்தார்களே

யொழிய பூராவாகவும் சமாளிக்க முடியவில்லை. அப்பொழுது திருவிசலூரிலிருந்து வந்த குட்டியும் சபையில் ஒரு மூலையில் இருந்தான். வெகுநேரம் வரையில் வாய்மூடிக்கொண்டு பொறுத்துக்கொண்டிருந்த குட்டிக்கு நம் நாட்டுப் பண்டிதர்கள் அடங்கிப்போனது பொறுக்கவில்லை. தான் இளவயதாக இருந்தும் வேறு வழியில்லாது, தான் சபைநடுவே வந்துநின்று, அவ் வங்காள பண்டிதனின் வாதங்களை யெல்லாம் தகர்த்து, தானும் புது வாதங்களை ப்ரயோகித்து, அப்பண்டிதன் திகைக்கும்படி செய்தான். அப்பண்டிதனுடைய செருக்கடங்கியது. அமரஸிம்ஹன் அளவிலா மகிழ்ச்சி அடைந்தான். உடனே குட்டிக்கு அவ்விடத்திலேயே ஒரு ஜயஸ்தம்பம் நாட்டவேண்டுமென்று அரசன் சொன்னான். குட்டி சபையோரின் காலில் விழுந்து நமஸ்காரம் செய்துவிட்டு "எனக்கு ஆசியைத் தவிர வேறு ஒன்றும் செய்யக்கூடாது", என்று சொல்லிவிட்டு ஓடிப்போய் விட்டான். முதியோரான பண்டிதர்களும், "இப்பையன் பேன் மேலும் வ்ருத்திக்கு வரவேண்டியவனாகையால் இவனுக்கு இவ்விளம்பிராயத்தில் ஜயஸ்தம்பம் நாட்டினால் திருஷ்டியாய் போய்விடும். ஆகையால் இப்பொழுது வேண்டாம்" என்றார்கள் இக்குட்டியே பின்னர் தஞ்சைக்கடுத்த ஒரத்தநாட்டில் சரபோஜி மன்னனாலும், ஸிமந்த அரசனாலும் (Peshwa) ஆதரிக்கப்பட்டும், அவ்வரசனுக்கு சிரமங்கள் ஏற்பட்டு, அவன் ஐக்கியமாகாணத்தில் சிறையில் இருக்கும் பொழுதும், அவனைக் கைவிடாது தானும் காசிக்கு சமீபத்தில் இருந்து கொண்டும், பின்னர் (Peshwa) ராஜ்யத்தைச் சேர்ந்த Jamkhandi, Miraj, Kurundwadi, முதலிய அநேக சிற்றரசர்களால் ஆதரிக்கப்பட்டும், பிறகு திப்புஸுல்தானுக்கு அடுத்தபடி பட்டத்துக்கு வந்த க்ருஷ்ணராஜ உடையார் மன்னனால் யாகங்கள் செய்விக்கப்பட்டும் ஆயுள் பரியந்தம் பூஜிக்கப்பட்டும் வந்தார். அவர் ஓரிடத்திலாவது ஸேவகா வ்ருத்தியை மேற்கொள்ள ஈடுபடவில்லை. ஒரு நாள் சரபோஜி மன்னரிடம் சிலர் துர்போதனைசெய்து, அதன்பேரில் அரசர் இவரை பார்க்குங்கால், "என்ன சாஸ்த்ரிகளே, எல்லா சாஸ்த்ரிகளைவிட தாங்கள் எனக்கு அக்ஷதை அனுப்புவது கொஞ்சம் காலதாமதமாகிறதே; தங்களுக்கு அனுஷ்டானங்கள் அதிகமோ" என்று கேட்டாராம். குட்டி

சாஸ்த்ரிகள் "ஸித்தம்" என்று சமாதானம் சொல்லிவிட்டு, அன்று மாலையே ஓத்தனூட்டைவிட்டு ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமல் புறப்பட்டு திருவையாற்றிற்குவந்து அர்த்தஜாம சமயத்தில் தர்மஸம்வர்த்தனி அம்பிகையின் ஸந்நிதானத்தில் நின்று கொண்டு கீழ்வரும் ச்லோகத்தை சமர்ப்பித்தார்:

कति इन्द्रयामः कति चन्द्रयामः चण्डं पुनः पूरयितुं पिचण्डम् ॥

கதி இந்த்ரயாம: கதி சந்த்ரயாம:
சண்டம் புன: பூரயிதும் பிசண்டம் ||

அப்படியே காசிக்குப் புறப்பட்டு விட்டார்.

"இவ்விதமானமனோபாவம் அக்காலத்தில் எல்லோருக்கும் இருந்தது. ஆனால் விசேஷமாக நமது குட்டி சாஸ்த்ரிகளுக்கு அரசன் கேட்ட அடுத்தக்ஷணமே இவ்விதம் உண்டானதற்குக் காரணம், திருவிடைமருதூரில் நடந்த வங்காளிதர்க்கபண்டித விஜயத்துக்கு அடுத்த சில காலத்திற்கெல்லாம் நடந்த ஒரு சம்பவமேயாகும். அது என்னவென்றால், இளம் குட்டி சாஸ்த்ரிகள் திருவிசலூரிலிருந்து அடிக்கடி கும்பகோணத்துக்கு ஸ்ரீமடத்துக்கு தரிசனத்துக்குப் போவதுண்டு. மடத்துக்கு சர்க்காரிலிருந்து ஒரு நாள் ஒரு தபால் வந்திருந்தது. அதில் Madras Sudder Dewany Adalat கோர்ட்டில் தர்மசாஸ்த்ர சட்டங்களை ஜட்ஜுகளுக்கு சகாயமாக எடுத்து விளக்க ஏற்பட்ட 'பண்டித' உத்யோக பதவிக்கு ஒரு தகுந்தவித்வான் தேவை, என்று எழுதப்பட்டிருந்தது. அந்தக் கடிதம் வந்தவுடன், ஸ்ரீஸ்வாமிகள் குட்டியைப்பார்த்து, "நீ போகிறாயா? உனக்கு அபிப்ராயம் இருக்கிறதா?" என்றார். உடனே குட்டி "நான் சிறுவன், எனக்கு என்ன ஸ்வாதந்திரியமிருக்கிறது. வீட்டில் பெரியோர்கள் சொற்படியல்லவா நான் நடக்கவேண்டியவன்" என்று சொன்னார். பிறகு ஊருக்குப்போன பின் இவ்விதம் நிகழ்ந்ததை தகப்பனாரிடம் சொன்னார். தகப்பனாருக்கு தாங்காத கோபம் வந்துவிட்டது. "ம்லேச்சண்டாள ஸேவகாவ்ருத்திக்கு நான் போனேனானால் நான் ப்ரஷ்டனாகப் போய்விடுவேனே" என்று ஸ்வாமியிடம் உடனே சொல்லாமல், "தகப்பனாரைக் கேட்கவேண்டும்"

என்று நீ சொன்னது, உனக்கே உள்ளூர உத்யோகத்திலுள்ள ஆசையல்லவா தெரிவிக்கிறது, என்று துக்கித்து, இது நம் குலத்திற்குகந்ததல்ல, "இனி நீ என் புதல்வனல்லன்; நீ எங்குவேண்டுமானாலும் செல்" என்று வீட்டைவிட்டு அகற்றிவிட்டார். மூன்று தினங்கள் வரை காவேரிக்கரையில் குட்டி தீர்த்தம் மாத்திரம் ஆஹாரம் செய்துகொண்டிருந்தான். பிறகு ஊரிலுள்ள இதர வித்வான்கள் எல்லோரும் இரக்கமுற்று தகப்பனாரைக் கோபித்துக்கொண்டு "பிள்ளைக்கு வேண்டியதிலும் அதிக அளவு ப்ராயச்சித்தமாய்விட்டது. உடனே அவனை சேர்த்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லி மகனை வீடு கொண்டுவந்து சேர்த்தார்கள். பால்யத்தில் இச்சம்பவத்தினால் ஏற்பட்ட இம்மனோநிலை குட்டி சாஸ்திரிகளை ஆயுள் வரை விடவில்லை. அவருக்கும் குறைவே இல்லை. சென்றவிடமெல்லாம் நிறைவே. அவர் புகழுடலாம் நூல்கள் இன்னும் பல நம் முன் நிலவுகின்றன. இக்கதையையும் நான் ஊர்ஊராக புலம்பிக்கொண்டே போகப் போகிறேன். உங்களுக்கும் இக்கதை ரஸித்தால், இதை நான் சொல்வது புலம்பலாகயிருந்தாலும், நீங்கள் அழகாக சொல்லிக் கொண்டிருங்கள். ஜீவனத்திற்கு மாத்திரம் ஒரு திட்டமும் போட்டுவிடாதீர்கள். ஜாக்கிரதை. நான் போய் திரும்பி வந்துவிடுவேன்."

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 2,500, 20—7—1948.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

ப்ரசுரம் 24.

[விலை அணு ஒன்று.]

# "ஆவணி அவிட்டம்"

இதுதான் இதற்கு ஸரியான பெயர். ஆவணியாவட்டமல்ல. பெயர் ஸரியான பெயரேயானாலும் இதுவும் அர்த்தத்தில் ஸரியில்லை. ஆவணி பூர்ணிமை என்றே சொல்லவேண்டும். ஆவணி பூர்ணிமை என்று சொல்வதுகூட தப்பு. ச்ராவண பூர்ணிமை என்றே சொல்லவேண்டும். சாந்திரமான கிரமத்தில் ச்ராவண மாதத்தில் பூர்ணிமையன்று வேறு தோஷங்கள் ஒன்றுமில்லாமலிருந்தால் உபாகர்மா என்ற ஒரு கர்மாவை ஆபஸ்தம்பிகள் செய்யவேண்டும். ச்ராவண பூர்ணிமை அநேகமாக ஆவணி மாதத்து அவிட்ட நக்ஷத்திரத்தில் வந்து சேரும். அதனால் அதற்கு ஆவணி அவிட்டம் என்றும், தவறுதலாகச் சொல்லிச்சொல்லி ஆவணியாவட்டம் என்றாகிவிட்டது.

இதே உபாகர்மா ரிக்வேதிகளால் ச்ராவண மாதத்தில் வரும் ச்ரவண நக்ஷத்திரம் அதாவது திருவோண நக்ஷத்திரத்தில் செய்யப்படவேண்டும். ஸாமவேதிகளால் ச்ராவண மாதத்துக்கு அடுத்த பாத்ரபதமாதத்தில் ஹஸ்த நக்ஷத்ரத்தில் செய்யப்படவேண்டும்.

## உபாகர்மா செய்வதற்கு உத்தேசமென்ன?

எந்த கர்மாவையும் செய்வதற்கு உத்தேச மென்னவென்பதை அந்தக் கர்மாவில் உபாத்தியாயர் சொல்லும் ஸங்கல்பத்தை கவனித்தால்தெரியும். ஸங்கல்பம் சொல்லும்போதே "உபாத்தியாயரே ஸங்கல்பத்துக்கு அர்த்தம் சொல்லுங்கள்" என்று

சொல்லவேண்டும். அப்பொழுதுதான், அவருக்காவது அர்த்தம் தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற அக்கரை ஏற்படும். ரிக்வேதிகளுடைய ஸங்கல்பம் பின்வருமாறு:—

ஃயாதயாமத்வாய ஃயஜுயந வீர்யவத்தாய (அதீதானாம் சந்தஸாம் அயாதயாமத்வாய அத்யயனவீர்யவத்தார்த்தம்)

இதன் தாத்பர்யம்:—

யாதயாமமில்லாதது அயாதயாமம். யாதயாமமென்றால் என்ன? பகவத்கீதையில்கூட "யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம்சயத்" என்று கேட்டிருக்கிறோமல்லவா! ஒரு யாமமென்றால் மூன்று மணி நேரம். சமையல் செய்து மூன்று மணி நேரமாகிவிட்டால் அன்னத்தின் ஸாரம் போய்விடுகிறது. அதைக் கொண்டுதான் உபயோகத்துக்கு அனர்ஹமான பொருள்களிலெல்லாம் யாதயாமம் என்ற பதம் ப்ரயோகிக்கப்படுகிறது. அன்னத்திற்கு 3 மணி. அதைப்போல் அந்தந்த பதார்த்தங்களுக்கு குறிப்பிட்ட சிலகால பர்யந்தான் ஸாரமிருக்கும். தாண்டிப் போனால் ஸாரம் குறைந்துவிடும். வேதத்திற்கும் அப்படித்தான். உபநயனமாகி முதல் ஆவணி அவிட்டத்தன்று வேதாரம்பம் செய்யப்படுகிறது. அதை அடுத்த புஷ்ய மாஸத்தில் யஜுர்வேதிகளுக்கும் மாகமாதத்தில் ரிக்வேதிகளுக்கும் உத்ஸர்ஜன கர்மாவை செய்துவிட்டு, வேதாத்யயனத்தை நிறுத்திவிட்டு, அடுத்த 6-மாத காலங்களில் சிக்ஷை-1, வியாகரணம்-2, சந்தஸ்-3, நிருக்தம்-4, ஜோதிஷம்-5, கல்பஸூத்ரம்-6 இவ்வாறு அங்கங்களில் யதாசக்தியான பாகங்களை அத்யயனம் செய்யவேண்டும். பிறகு அடுத்த வருஷம் ச்ராவண மாதத்தில் உபாகர்ம தினத்தில் உபாகர்மாவைச் செய்து, வேத மந்த்ராத்யயனத்தைப் புனராரம்பம் செய்யவேண்டும் இவ்வேதாரம்ப கர்மாவுக்கே உபாகர்மா என்று பெயர். இவ்விதம் உபாகர்மா செய்யப்பட்டால்தான் நம்மிடமிருக்கும் சொல்ப வேத மந்த்ரமானது வீர்யத்தோடு கூடியதாயிருக்கும். இல்லாவிட்டால், பகவத்கீதையில் அன்னத்துக்கு சொல்லியிருப்பதுபோல் யாதயாமமாக ஆகிவிடும்.

நம்மிடமிருக்கும் ஒரு காயத்ரீ மந்த்ரத்துக்காவது வீர்யமிருக்க வேண்டுமானால் உபாகர்மா என்னும் கர்மாவை தாத்பர்யங்களை மனதில் வாங்கிக்கொண்டே மந்த்ர லோபமில்லாமல்

அனுஷ்டித்தாகவேண்டும். ச்ரத்தையோடு உபாகர்மா செய்யாத குறையினுல்தான் இக்காலத்தில் செய்யப்படும் சில கர்மாக்கள் கூட மந்த்ர வீர்யமில்லாததால் பலனில்லாமல் போய்விடுகின் றன. **ஆகையால் உபாகர்மா அவச்யம் செய்யவேண்டும்.**

ஒரு மந்த்ரத்தை நாம் ஆரம்பிக்க வேண்டுமானுல், அந்த மந்த்ரத்தை நமக்கு ஆதியில் கொடுத்த ரிஷிகளேயும் தேவதைகளே யும் பூஜித்து, அவர்கள் அனுக்ரஹத்தைப் பெற்றுக்கொண்டு ஆரம்பித்தால்தான் பலன் தரும். அவர்களுடைய தப: சக்தி அந்த மந்த்ர மூலமாய் நம்மை அடையும். அவர்களை பூஜிக்கும் முறை மூன்றுவிதம். அவர்களை ஓரிடத்தில் ஆவாஹனம் செய்து (தர்ப்ப கூர்ச்சத்திலோ, பூர்ண கும்பத்திலோ, எலுமிச்சம் பழத்திலோ, பாக்குப்பழத்திலோ, பிடித்துவைத்த மணலிலோ) ஷோடசோப சாரங்களால் பூஜிப்பதொரு முறை. அந்த ரிஷிகளை உத்தேசித்து தீர்த்தத்திலுல் தர்ப்பணம் செய்வது ஒரு முறை. இரண்டையும் விட வீர்யவத்தான முறை அவர்களை உத்தேசித்து அக்னி முகத் தில் ஹோமம் செய்வது.

ஆதலால் ஆவணியவிட்டம் நடக்கும்போது ஹோமகாலத் தில் ஒரு உபாத்தியாயர் ஹோமம் செய்துகொண்டிருந்தால் மற் ெருரு உபவாத்தியார் இப்பொழுது இன்ன ரிஷி, தேவதைக்கு ஹோமம் நடக்கிறது என்று க்ருஹஸ்தர்களுக்கு சொல்லிக் கொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும்.

**இதைவிட ஒரு முக்யமான கார்யம் :—**

ஆவணியவிட்டத்திற்கு முன் ஞாயிற்றுக்கிழமையில் கூடிய வரையில் க்ருஹஸ்தர்கள் எல்லோரும் ஓரிடத்தில் சேர்ந்து விஷ யம் தெரிந்த வாத்தியார்களை அழைத்து வைத்துக்கொண்டு உபா கர்ம ப்ரயோகங்களை க்ரமமாக, பூர்த்தியாக, அர்த்தத்துடனும், தாத்பர்யத்துடனும் சொல்லச்சொல்லி, கேட்டு, உபாகர்ம தினத் தன்று மறந்துபோகாமல், அந்தந்த விஷயங்கள் மனதில் ஞாபகத் துடன் அனுஷ்டிக்கப்படவேண்டும்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

---

Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 3,000, 31—7—1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

---

ப்ரசுரம் 25.

[விலை அணு ஒன்று.]

# காயத்ரீ ஜபம்.

அநேகமாக "ஆவணி அவிட்டத்திற்கு" மறுநாள் காயத்ரீ ஜபம் வருகிறது. இதற்கு 'காயத்ரீ ஜபம்' என்கிற பெயரைவிட 'காயத்ரீ ஹோமம்' என்ற பெயரே தகுதி உள்ளது.

நாம் எல்லோரும் அநேகமாய் ஆபஸ்தம்பஸூத்ரம் என்று சொல்லிக்கொள்ளுகிறோம். நம்மில் சிலர் ஆச்வலாயனஸூத்ரிகளும், போதாயன ஸூத்ரிகளும், காத்யாயன ஸூத்ரிகளும், த்ராஹ்யாயன ஸூத்ரிகளும், ஹிரண்யகேசிய ஸூத்ரிகளுமாகயிருக்கின்றனர். ஆனால் எல்லோருக்கும் ஆபஸ்தம்ப மஹரிஷியே இந்த காயத்ரீ ஜப விதானத்தை உபதேசித்திருக்கிறார். ஆபஸ்தம்பர் தமது தர்ம ஸூத்ரத்தில் ச்ராவண மாஸம் க்ருஷ்ணபக்ஷம் ப்ரதமை திதியில் "காயத்ரீயா ஸமித்ஸஹஸ்ரம் ஆதத்யாத் ஜபேத்வா" 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾 𑌸𑌮𑌿𑌤𑍍𑌸𑌹𑌸𑍍𑌰𑌮𑌾𑌦𑌧𑍍𑌯𑌾𑌤𑍍 𑌜𑌪𑍇𑌦𑍍𑌵𑌾 என்று எழுதியிருக்கிறார். ஆயிரம் ஸமித்துக்களை ஒரு ஸமித்துக்கு ஒரு காயத்ரீ மந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு அக்னியில் ஹோமம் செய்யவேண்டியது. அல்லது ஆயிரம் காயத்ரீ ஜபமாத்திரமாவது செய்யவேண்டியது.

இப்போது நம்முடைய நாட்டில் ப்ரதம ச்ராவண ப்ரும்மசாரி மாத்திரம்தான் காயத்ரீ ஸஹஸ்ர ஹோமம் செய்வதென்பது அனுஷ்டானத்தில் இருந்துவருகிறது. ஆனால் மஹரிஷியின் அபிப்ராயம் எல்லா க்ருஹஸ்தர்களும் ப்ரும்மசாரிகளும் அன்றைய தினம் ஸஹஸ்ரஹோமம் செய்யவேண்டியது என்பதுதான். ஹோமம் செய்யமுடியாதபடி எதாவது விசேஷ அஸந்தர்ப்பம் ஏற்பட்டால்தான் ஜபமாவது செய்யட்டும், என்பது மஹர்ஷியின் கருத்து. ஆகையால் எல்லா ப்ரும்மசாரிகளும் க்ருஹஸ்தர்களும்

1000-க்கு குறையாமல் ஸமித்துக்களை தயார்செய்துகொண்டு அன்றையதினம் ஸம்ப்ரதாயப்ரகாரம் ஸங்கல்பம்செய்துகொண்டு ஹோமம் செய்யவேண்டும். அன்று விடியற்காலையில் ஏதாவது ஒரு மஹாநதிக்குச் சென்று ஸ்நானம் செய்துவிட்டு 8½-மணி சுமாருக்கு ஹோமம் ஆரம்பிக்கவேண்டும் இந்த ஹோமத்தை ஒரு ப்ராயச்சித்த கர்மாவாக வருஷாவருஷம் இந்த தினத்தில் செய்யவேண்டியது. ப்ராயச்சித்த கர்மாக்களெல்லாம் ஸங்கவ காலத்திலேயே செய்யப்படவேண்டியவை. ஸங்கவகாலமென்றால் காலை மணி 8-24 முதல் 10-48 வரையுள்ள காலம் பகலை 5 காலங்களாக சாஸ்திரங்களில் பிரித்திருக்கிறார்கள். 1. ப்ராத: காலம், 2. ஸங்கவ காலம், 3. மாத்தியாஹ்ன காலம், 4. அபராஹ்ண காலம், 5. ஸாயங்காலம். ஒரு காலத்திற்கு 6-நாழிகை வீதம் பகல் 30 நாழிகைகள் 5 காலங்களாகப் பிரிக்கப்படுகின்றன.

## காயத்ரீ ஜபத்திற்கு ஸங்கல்பமென்ன?

ப்ரும்மசாரிகள் செய்யவேண்டிய ஸங்கல்பத்தின் உத்தேசம் கீழ்வருமாறு:—

ബ്രഹ്മചര്യനിയമേന സമിദാധാന ഭിക്ഷാചരണ ഗുരുകുലവാസാദ്യകരണ പ്രായശ്ചിത്താർത്ഥം അപതനീയദോഷ പ്രായശ്ചിത്താർത്ഥം മിഥ്യാധീത പ്രായശ്ചിത്താർത്ഥം സംവത്സര പ്രായശ്ചിത്താർത്ഥഞ്ച—

**ப்ரம்மசர்ய நியமேந ஸமிதாதான பிக்ஷாசரண குருகுல வாஸாதி அகரண ப்ராயச்சித்தார்த்தம் அபதனீயதோஷ ப்ராயச்சித்தார்த்தம் மித்யாதீத ப்ராயச்சித்தார்த்தம் ஸம்வத்ஸர ப்ராயச்சித்தார்த்தஞ்ச.**

இவைகளில் മിഥ്യാധീത പ്രായശ്ചിത്തം முக்கியமானது. அதாவது நாம் வருஷ முழுவதிலும் அந்தந்த ஸந்தர்ப்பங்களில் உச்சரிக்கும் வேதமந்த்ரங்களில் வர்ணலோபம் அல்லது ஸ்வரலோபம் ஏற்பட்டிருப்பின் அதனால் ஏற்படும் தோஷத்திற்கு ச்ராவண பூர்ணிமைக்கு அடுத்த க்ருஷ்ணபக்ஷ ப்ரதமையில் செய்யப்படும் காயத்ரீ ஹோமம் ப்ராயச்சித்தமாகிறது. இந்த தோஷத்திற்கு மட்டுமல்ல. ப்ரம்மசர்யாச்ரமத்தில் இருக்கும் மாணவன் தன் வீட்டில் சாப்பிடக்கூடாது. தன் வீட்டில் வஸிக்கக்கூடாது. எவ்வளவு பணக்காரனாயினும் பிக்ஷை எடுத்து சாப்பிட்டுக்

கொண்டு, குருவின் வீட்டில் வஸித்துக்கொண்டு, காலை மாலை களில் அக்னியை உபாஸித்துக்கொண்டு குருவினிடத்தில் வித்தி யாப்பியாஸம் செய்யவேண்டும். எழுத்திலக்கணம் (சிக்ஷை), சொல்லிலக்கணம் (வ்யாகரணம்), பாவிலக்கணம் (சந்தஸ்), நிகண்டு (நிருக்தம்), கணிதத்துடன் வானசாஸ்த்ரம் (ஜ்யோதி ஷம்), கர்மானுஷ்டான முறை (கல்பஸூத்திரம்), என்னும் 6 அங்கங்கள் (சடங்கு) கூடிய ஒரு வேதத்தையாவது அப்பியஸித் தபின், ஸமாவர்த்தனமென்னும் கர்மாவை செய்துகொண்டு பின் னரே வீட்டிற்குத் திரும்பவேண்டும். இம்முறைக்கு மாறாக ப்ரும்மசாரிகள் நடப்பார்களேயானால் தர்மத்தை மீறி நடக்கும் தோஷத்திற்கு பாத்திரமாகிறார்கள். இவ்வித தோஷத்திற்கும் காயத்ரீ ஹோமம் ப்ராயச்சித்தமாகும். மொத்தமாக சென்ற வரு ஷத்தில் செய்த எல்லா தோஷத்திற்குமே இந்த காயத்ரீ ஹோமம் ப்ராயச்சித்தமாகும். எல்லா தோஷங்களுக்கு மென்பதி னால் எந்த தப்பைச் செய்தாலும் இந்த காயத்ரீ ஜபம் செய்தால் அது ஜீர்ணமாகிவிடும் என்று இல்லை. தனிப்ராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டிய சிலதோஷங்களுண்டு. பொதுவாக பாபங்கள் சாஸ்த்ரங்களில் இருவகையாக பிரிக்கப்படுகின்றன. ஒன்று பத னீயங்கள், மற்றொன்று அபதனீயங்கள். பதனீயங்களென்றால் ஒருவனை பதிதனாக்கக்கூடிய கொடுஞ் செயல்கள். அவ்வளவு கடுமையில்லாத ஸாமான்ய பாபங்கள் அபதனீயங்கள். சென்ற வருஷம் செய்த அபதனீய பாபங்களுக்கெல்லாம் இந்த காயத்ரீ ஹோமம் பரிகாரமாகிறது. இதேமாதிரி, க்ரஹஸ்தர்களும்

𑌗𑌾𑌰𑍍𑌹𑌸𑍍𑌥𑍍𑌯𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌔𑌪𑌾𑌸𑌨 𑌵𑍈𑌶𑍍𑌵𑌦𑍇𑌵 𑌪𑌞𑍍𑌚
𑌮𑌹𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍍𑌯𑌕𑌰𑌣𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 𑌅𑌪𑌤𑌨𑍀𑌯𑌦𑍋𑌷𑌪𑍍𑌰𑌾
𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌧𑍀𑌤𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿
𑌤𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌞𑍍𑌚 —

**கார்ஹஸ்த்ய நியமேந ஔபாஸன வைச்வதேவ பஞ்சமஹா யக்ஞாதி அகரண பிராயச்சித்தார்த்தம் அபதனீய தோஷ ப்ராயச் சித்தார்த்தம் மித்யாதீத ப்ராயச்சித்தார்த்தம் ஸம்வத்ஸர ப்ராயச் சித்தார்தஞ்ச.**

நித்தியம் செய்யவேண்டிய 5 மகாயக்ஞங்களிருக்கின்றன. அவையாவன: தேவயக்ஞம், பித்ருயக்ஞம், பூதயக்ஞம், மனுஷ்யயக்ஞம், ப்ரம்மயக்ஞம் என்பவை. தேவயக்ஞமென்பது

தேவர்களை உத்தேசித்து அக்னியில் ஹோமம் பண்ணவேண்டியது. அது அக்னிஹோத்ரமாக இருந்தாலும்ஸரி ஔபாஸனமாக இருந்தாலும்ஸரி. ச்ரௌத கர்மாவோ, ஸ்மார்த்த கர்மாவோ ப்ரதிதினம் அவச்யம் செய்தாகவேண்டும். பித்ரு யக்ஞமென்பது பித்ருக்களை உத்தேசித்து ச்ராத்தம் தர்ப்பணம் முதலியவைகளைச் செய்வது. பூத யக்ஞமென்பது உலகத்திலுள்ள ஸகல ஜந்துக்களையும் மனதால் உத்தேசித்து யதாசக்தி மந்த்ரபூர்வமாக நாம் ஸமர்ப்பிக்கும் ஆகாரம். மனுஷ்ய யக்ஞமென்பது அதிதிகளுக்கு அன்னம் போடுவது. ப்ரம்மயக்ஞ மென்பது தன்னுடைய வேதத்தில் ஒரு ப்ரச்னமோ, முடியாவிட்டால் ஒரு அனுவாகமோ, அதுவும் முடியாவிட்டால் ஒரு பஞ்சாதியோ, அல்லது ஒரு ருக்காவது ப்ரதிதினம் அத்தியயனம் செய்து தர்ப்பணம் செய்வது. இதில் ஏதாவது செய்யமுடியாமல் விட்டுப்போயிருந்தாலும் ஸம்வத்ஸர ப்ராயச்சித்தமாக பக்தி ச்ரத்தையுடன் காயத்ரீ ஹோமத்தையாவது அல்லது ஜபத்தையாவது மனதிற்குள் ஸ்வரத்துடன் 5-பாதமாகச் சொல்லிக்கொண்டு பண்ணிவந்தால் மேற் சொல்லியவைகளுக்கு பரிகாரமாகும்

**ஒரு வேண்டுகோள் :—**

வேதங்களை முறை தவறி சொன்ன தோஷத்திற்கு ப்ராயச்சித்தமாக காயத்ரீ ஜபம் ஏற்பட்டிருக்கிறது. அந்த காயத்ரீ ஜபம் செய்யும் காலத்திலும் அக்ஷரம் தவறுதலாகவும், ஸ்வரம் தவறுதலாகவும் செய்தோமானால் வேறு கதியே இல்லை. ஆகையால், காயத்ரீ ஜபத்திற்கு இரண்டு நாள் முன்னதாகவே நாம் உச்சரிக்கும் காயத்ரீ மந்த்ரமானது அக்ஷரலோபம் ஸ்வரலோபம் இல்லாமல் இருக்கிறதா என்பதை ஆங்காங்குள்ள பெரியோர்களிடம் சொல்லி திருத்திக்கொள்ளவேண்டும். காயத்ரீ ஜபத்திற்கு முதல் நாள், மறுநாள் காயத்ரீ ஹோமமோ ஜபமோ செய்பவர்களெல்லோருமே, எள்ளு தான்யத்தை ப்ராசனம் செய்துவிட்டு அன்று முடிய உபவாஸ மிருக்கவேண்டுமென ஆபஸ்தம்ப தர்ம ஸூத்ரம் தெளிவாய் விதித்திருக்கிறது.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

---

Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 3,000, 10—8—1948.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

ப்ரசுரம் 26.

[விலை அணா ஒன்று.]

# விநாயக சதுர்த்தி.

நமது தேசத்தை ஆண்டுவந்த ஆங்கிலேயர்கள் தேசத்தை விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். தேசம் சுதந்திரம் அடைவது என்றால் ஆஹார வியவகார விஷயங்களில் சுதந்திரமடைவது மாத்திரமேயல்ல. சரீரம் வளர்ந்தால் மாத்திரம் போதாது. தர்ம முறையும் சுதந்திரமாக வளரவேண்டும். தர்ம முறைக்கு சுவாதந்தரியமில்லாமல், அதிகாரத்தினாலோ, அதிகார செல்வாக்கினால் செய்யப்படும் அதர்மப் பிரசாரங்களினாலோ, தர்மநீதி முறையைக் குறைத்துக்கொண்டே வந்தால் ஜனங்களுடைய அந்தக்கரணம் நன்முறையில் வளராது. அந்தக்கரணத்திற்கு வியாதி பிடித்துவிடும். ஆஹார வியவஹார விஷயங்களில் எவ்வளவு சுதந்திரமாய் சரீரம் வளர்ந்தாலும், அந்தக்கரணம் அழுகிப்போனால், தானாகவே சரீரங்களும் அழுகிப்போகும்.

ஆனால் நம் நாட்டு சுவாதந்திரியம் அநேகமாக சாஸ்திர தர்மத்தில் நம்பிக்கையிழந்தவர்களுடைய கையிலேயே கிடைத்துள்ளது. அவர்களுக்குக் கிடைத்துள்ள சுவாதந்தரியத்துக்கும் ஒவ்வொரு நாளும் ஆயிரம் விக்கினங்கள் வந்துகொண்டேயிருக்கின்றன. அவ்விக்கினங்களால் அநேக இதர தேசங்கள் இவ்விக்கினங்களைக் கிளப்பிக்கொண்டும் வளர்த்துக்கொண்டும் வருகின்றன. நம் ராஜ்யபாரம் நம்பிக்கையில்லாத நாஸ்திகர்களுடைய கையிலிருந்தாலும், இவ்விக்கினங்களால் மடிவதும் சொல்லொணாத் துயரங்களை அடைவதும் பெரும்பாலும் ஆஸ்திகர்களான நம்மவர்களே.

பெயரளவில் வந்த சுதந்திரமும் நாஸ்திகர்களுடைய கையில் போகும்படி செய்தது நமது பெரும் குற்றம். குற்றத்துடன் சேர்ந்த துர்ப்பாக்யம்.

எந்த துர்ப்பாக்யம் வந்தாலும் அழுவதில் பிரயோஜனமில்லை. எந்த துர்ப்பாக்யத்தையும் விலக்கிக்கொள்வதே வீரலக்ஷணம். விக்கினங்கள் ஏற்பட்டாலன்றி வீரத்தன்மை வளராது. வெய்யில் கடுமையைக் கொடுக்கும் சூரியனே நிழல் சுகத்தையும் கொடுப்பவன். விக்னேச்வரனே விக்கின நிவர்த்தகன் 'ப(ஹ)யக்ருத்' எனப்படும் விஷ்ணுவே 'ப(ஹ)யநாசனன்.

வரும் விக்கினங்களை வெல்ல பகவான் புத்தியைக் கொடுத்திருக்கிறார். புத்தி அவன் கொடுத்த பொருள். புத்தி, சாமர்த்தியம் நம்முடைய சொந்தம் என்று நினைப்பதே அகம்பாவம். அகம்பாவத்தோடு புத்தி சாமர்த்தியத்தை உபயோகித்து வென்றுவிடுவோம் என நினைப்பது கடிவாளமற்ற குதிரை வெகு வேகமாக ஓடி ஓரிடத்தில் குடைசாய்ப்பதுபோலவே ஆகும்.

நாம் ஈசன் கொடுத்த புத்தியை உபயோகித்து எல்லா விக்கினங்களையும் வெல்லத்தலைப்படவேண்டும். அவ்விதம் ஆரம்பிக்கும்பொழுது அப்புத்தியைத் தந்தவனைப் பூஜித்து அருள் பெறவேண்டும். அருளுடன் கூடிய புத்திக்கு எதிர்கிடையாது.

பலர் சேர்ந்து ஒரு நாளில் ஒரே எண்ணத்துடன் அவனை வழிபடும்பொழுது, அவனது அருள் எல்லோரிடத்திலும் ஏக காலத்தில் பொழிகின்றது. பொழியப்பெறும் கூட்டமும் திருக்கூட்டமாகிறது. ஸ்ரீ ஞானசம்பந்தர் முதலியோரது திருக்கூட்டங்களே நாட்டில் நாஸ்திகத்தை வென்றன. இந்த ஆவணி மாதம் அமாவாசை கழிந்த சதுர்த்தி சாந்திரமானப்படி பாத்திரபதமாதத்திய சுக்கில-பக்ஷ சதுர்த்தி ஆகிறது. அன்றே விக்னேச்வரராகிய விநாயகரை வருஷத்திற்கொருமுறை பூஜிக்கவேண்டியதும், அன்று நாமெல்லோரும் ஒருமனப்பட்டு விநாயகரை வழிபடுவோம். அன்று சாயங்காலம் ஒரு சுலோகத்தைச் சொல்லுவோம். சொல்லிக் கேட்போம்.

3

சுலோகம்

ஸிம்ஹ: – ப்ரஸேனம் – அவதீ(யீ)த்–ஸிம்ஹோ–ஜாம்ப(வ) தா–ஹத :| ஸுகுமாரக–மா–ரோதீ (தீ):– தவ – ஹி – ஏஷ:– ஸ்ய மந்தக :||

இந்த சுலோகத்தையே அன்று சொல்லவேண்டுமென்று வ்ரத சூடாமணி கல்பத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீகிருஷ்ண பகவான் அநேக விக்கினங்களைத்தாண்டி ஸ்யமந்தகமணி என்னும் ரத்தினத்தை சுவாதீனம் செய்துகொண்ட கதையில் இந்த ச்லோகம் வருகிறது.

சௌகர்யமிருக்கும் ஊர்களில் வ்ரத சூடாமணியிலுள்ள இந்தக் கதையைப் படிக்கத் தெரிந்தவர்களைப் படிக்கச்செய்து முழு விபரத்தை கேட்போம். அந்த பூஜாகல்பத்தில் விநாயக பூஜையின் பூர்த்தியின் பொருட்டு இக்கதையைக்கேட்டு மனதில் தரித்துக்கொள்ளும்படியும் சொல்லப்பட்டிருக்கிறது.

"மூட நம்பிக்கை" வேண்டாமென்கிறார்கள் வெள்ளைக் காரர்கள். அவர்களைவிட ஒரு அடிதாண்டி அவ்விதமே பறை சாற்றுகிறார்கள் ஆசாரவிஷயத்தில் வெள்ளைக்காரர்களுக்கு தத்த புத்திரர்களாக விளங்கும் நம் நாட்டு நாஸ்திகர்கள். ஆனால் அவ் வெள்ளைக்காரர்களே சென்ற யுத்தம் கைமீறிப்போன தருணத்தில், ஊரில் உள்ள சந்துபொந்துகளில் எல்லாம் 'V' (வி) என்று எழு துங்கள், எழுதுங்கள் என்று தம்பட்டம் போட்டார்கள், எழு தவும் எழுதினார்கள். Victory (விக்டரி) அதாவது விஜயம் என் னும் பதத்தின் முதல் எழுத்தே வி என்பது. இந்த ஒரு எழுத்தை எழுதுவதால் தங்களுக்கு விஜயம் ஏற்பட்டுவிடுமென்ற "மூட நம்பிக்கை" மூட நம்பிக்கையை ஒழிக்கும்படி சொல்லிக்கொண் டிருந்த வெள்ளைக்காரர்களுக்கு ஜயத்திற்கு அனுகூலமாக இருந்தது.

நாம் சுவற்றில் எழுதவேண்டாம். விக்கினத்தைப்போக்கும் விநாயகாது திருமந்திரத்தை மனதில் அழகாக எழுதுவோம்.

அவருடைய பிரஸாதமாம் புத்தியினால் எல்லா விக்கினங்களையும் கருக எரிப்போம்.

யானை, குதிரை முதலிய ஸேனையைவிட விநயகருடைய துதிக்கை நமது தமிழ்க்கலையின் தாயாகிய ஔவையாரை அதி சீக்கிரமாக ஏற்றிச்சென்றது. இக்கதையின் விபரம் தமிழ் புலவர்களைக் கேட்டால் சொல்லுவார்கள். 'அத்துதிக்கையையே' நாமும் கையாளுவோம். விநாயகரை அன்று நாம் துதிப்போம். இக்கதையின் பகுதி "நாத பிந்து கலாதி நமோ நமோ" என்ற திருப்புகழின் கடைசி அடியில் பதிந்து கிடக்கிறது.

வரும் விநாயக பூஜையை ஆழ்ந்த மனத்தோடு செய்வோம். அவர் அருள் பெற்று புத்தியையும் சக்தியையும் கொண்டு ஆஸ்திக புத்தியைப் பரப்பப் பூரணமாக உழைப்போம். சாஸ்திரத்தின் கருத்தை ஆழ்ந்து ஆலோசித்துத் தெரிந்துகொள்வோம். அவ்விஷயத்தில் நன்றாய்த் தெளிந்து, அத்தெளிவை மக்கள் எல்லோரிடமும் அன்புடன் பரப்புவோம். பரப்பும் தீவிர சாதனங்களையெல்லாம் கையாளுவோம். 'ஜனங்கள் செய்யவேண்டியது என்ன? செய்யத்தகாதது என்ன?' என மக்கள் திகைத்திருக்கும் சமயத்தில், "தஸ்மாத்-சாஸ்த்ரம்-ப்ரமாணம்-தே-கார்ய-அகார்ய வ்யவஸ்திதௌ' என முழங்கும் பகவத்கீதையின் ஒலியைப் பரப்புவோம்.

சில நாட்களுக்கு முன்பு டில்லி சுதந்திர மத்திய சட்ட சபையில் ஒருவர் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். அத்தீர்மானத்தின் சாராம்சம் 'ஜாதி வர்ணங்களை ஒழித்துவிட வேண்டுமென்பதாம்'. அதற்கு மந்திரியான சர்தார் படேல் பதில் சொன்னாராம். சாராம்சம், 'ஒழித்துவிடுவோம், ஆனால் அவசரப்படாதே' என்றாராம். அந்தோ பாவம்! ஜாதிவர்ண முறை குலைய ஆரம்பித்த நாள் முதல்தான் இந்தியாவுக்கு இந்த கதி என்பதை அவர் அறியாமல் போய்விட்டார். அவர் அறிந்தவராயிருந்தால் இப்படிச் சொல்லி யிருக்கவேண்டும் 'அவசரப்படாதே! ஜாதி வர்ணங்களில் ஏற்பட்டிருக்கும் சீர்கேட்டை அழித்து விடுவோம்' என்றே.

"சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்" என்றார் பகவான். "மயா ஸ்ருஷ்டம்" என்றார். என்றால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது என்றார். என்றால் கல்பிக்கப்படவேண்டியது என்று சொல்லப் படவில்லை. கீதையின் இம் முழக்கத்தையும் ஒலிபரப்புவோம்.

ஜாதி நியாயமுறை பண்டைக்காலத்தில்போல் சீருடன் அமைக்கப்படின் பொய்யன் இருக்கமாட்டான், வியபிசாரி இராள், வியபிசாரன் இரான், லஞ்சக்காரன் இரான். பிராம் மணன் பணத்தைப் பெரிதாக நினையான். சு. ம. பிரசாரத்திற்கு அவசியமிராது. அவரவர் அவர் குலத்தொழிலிலே இருப்பார். மற்றொரு தொழிலிலே போட்டிபோட்டு இதரர்களுக்கு கஷ்டம் விளைவிக்கார். பொது உடமைப் பிரசாரத்திற்கு அவசியமிராது. எல்லோரும் அவரவர் ஆசாரத்தினின்று தவறார். நம்முடைய எல்லா குலாசாரங்களைப் பார்க்கும்பொழுது கிருஸ்தவர் முதலிய இதர மதஸ்தர்களின் அனுசாரங்கள் வெறுப்புக்கிடமாக நன்று கத் தெரியுமாகையால், கிருஸ்தவர் முதலியோரது பிரசாரம் பலிக்காது.

ஒவ்வொரு ஜாதிப் பஞ்சாயத்தும் தன் ஜாதி ஜனங்களை நல் வழியில் கட்டுப்படுத்தி மீறிப்போகாமல் செய்து விடும்பொழுது, கோயில்களின் முன்கூடும் எல்லா ஜாதிப் பஞ்சாயத்துகளின் பொதுக்கூட்டத்தைக்கொண்டு, எல்லா ஜாதி ஆஸ்திக மக்களையும் சுலபமாக ஒன்றுபடுத்தக்கூடுமாதலால், இதர மதஸ்தர்கள் அடாச்செயல்களைச் செய்து நம்மைப் பறிகொடுப்பது முடியாத காரியமாகிவிடும். ஹிந்துமகாசபைப் பிரசாரமும் அவசியமில் லாமல்போய்விடும். 'பார்ப்பார் முதல் பறையர்வரைப் பதினெட்டு ஜாதிப்பட்டரை' என்பது நம் பழமொழி. இது சீர் குலையும் பொழுது 'பலபட்டரை ஜாதி' என்ற பழமொழி ஏற்படுகிறது. அச்சீர்குலைதலைக் குலைப்போம்.

விநாயகரை உபாஸித்த சிவாஜி மன்னன் ஐநூறு வருஷங்கள் சுதந்திரமிழந்த இந்தியாவை வர்ணாசிரமத்தைக் கடைப்பிடித்துத் திரும்பவும் சுதந்திரமடையச் செய்தான். விநாயகர் கிருபை அவனிடம் இருந்தது. நாமும் விநாயக சதுர்த்தியை அனுஷ்டிப்போம். அவர் சீர்க்கணபதி ஜனகணம் சீராக வாழி.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies. 2,500. 3—9—1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

( Regd. )

கும்பகோணம்.

ப்ரசுரம் 27.

[ விலை அணா ஒன்று. ]

# ஸ்நானம் செய்யவேண்டிய :: :: :: :: :: :: :: முறை எப்படி ?

அநேகமாக ஒவ்வொரு நாளும் ஸ்நானம் செய்கிறோம். உடம்பின் மேல் அழுக்கும் நாற்றமும் போகிறது. செய்வதை விதி முறைப்படி செய்துவிட்டால் உள்ளே இருக்கும் அழுக்குக்கூட கொஞ்சம் குறையும். ஆதலால் விதிமுறைகளைத் தெரிந்துகொள்வது நலம்.

அநுஷ்டிக்க மனம் இருப்பினும் சிலருக்கு விதி முறை தெரியவில்லை. குறைவினால் அனுஷ்டிக்கமுடியாமல் போகிறது, எவ்விதமாகவாவது விதியைத் தெரிந்துகொண்டால் நலம்.

---

*நாம் சாச்வதமான சுகத்தையடைய மனதை சுத்தமாக வைத்துக்கொள்வதே சாதனம். மனதின் அசுத்தி பாபங்களே. அவைகளை போக்குவதற்காகவே கர்மானுஷ்டானங்கள் சாஸ்திரங்களில் பெரியோர்களால் விதிக்கப்பட்டிருக்கின்றன.*

**“ கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய: । ”**

*ஜனகர் முதலிய பெரியோர்கள் கர்மானுஷ்டானங்களாலேயே*

சித்தசுத்தியை அடைந்தார்கள் என்று பகவான் கீதையில் உபதேசிக்கிறார். 'ஸ்நாநமூலா: க்ரியா: ஸர்வா:' என்ற சாஸ்திரப்படி எல்லாவித கர்மாநுஷ்டானங்களும் ஸ்நானத்தை அடிப்படையாகக் கொண்டவை.

ஸந்த்யா ஸ்நாநம் ஜபோ ஹோமோ தேவதாநாம் ச பூஜநம் ।
ஆதித்யம் வைச்வதேவம் ச ஷட் கர்மாணி தினே தினே ॥

என்று பாராசரஸ்மிருதியில் ஸ்நானம் செய்து ஸந்த்யோபாஸனம் பண்ணுவது முதல்கர்மாவாக கூறப்பட்டிருக்கிறது. ஸ்நானம் சரீரத்துக்கு சுத்தியைக்கொடுத்து ஆரோக்யத்தைக் கொடுப்பதாயினும், சாஸ்திரங்களில் சொல்லிய விதிப்ரகாரம் செய்தால் அது பாபங்களையும் போக்கும், மனதின் அசுத்தத்தையும் நீக்கும். த்ருஷ்டமான பலனைக்குறித்துச் செய்யும் போஜனம் முதலிய காரியங்களையே சாஸ்த்ரோக்த நியமங்களுடன் செய்தால் மனதின் பாபத்தையும் போக்கடிக்கும்.

"யஜ்ஞசிஷ்டாசிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை:" ॥

த்ருஷ்டம் அத்ருஷ்டம் என்ற இரண்டு ப்ரயோஜனத்தைக் கொடுப்பதால் ப்ராதஸ்நானம் மிகவும் சிறந்தது.

"ப்ராத: ஸ்நாநம் ப்ரசம்ஸந்தி த்ருஷ்டாத்ருஷ்டகரம் ஹி தத் ।"
ப்ராதஸ்நானம் செய்ததாலேயே ரிஷிகள் ரிஷித்வத்தை யடைந்தார்கள்.

"ருஷீணாம் ருஷிதா நித்யம் ப்ராத: ஸ்நாநாந்ந ஸம்சய: ।"

ப்ராதஸ்நானம் செய்துகொண்டு வருபவர்களுக்கு சரீரத்தில் அழகும், தேஜஸ்ஸும், பலமும், சுத்தமும், ஆயுள்வ்ருத்தியும், ஆரோக்கியம், தைரியம், மேதை, அதிக ஆசையின்மை, கெட்ட ஸ்வப்னங்கள் வராமலிருப்பது முதலிய குணங்கள் உண்டு.

குணா தச ஸ்நாநபரஸ்ய ஸாதோ:
ரூபம் ச தேஜச்ச பலம் ச சௌசம் ।
ஆயுஷ்யமாரோக்யமலோலுபத்வம்
து:ஸ்வப்நநாசச்ச யசச்ச மேதா ॥

பாபிகளிடமிருந்து தானம் வாங்கினதாலுண்டான பாபமும், அகம்யாகமனத்தாலுண்டான பாபமும், ரஹஸ்யமாகச் செய்யப்பட்ட பாபமும் ப்ராதஸ்நானத்தால் போய்விடும்.

அகம்யாகமநாச்சைவ பாபேப்யச்ச ப்ரதிக்ரஹாத் ।
ரஹஸ்யாச்ச க்ருதாத் பாபாத் முச்யதே ஸ்நாநஸேவநாத் ॥

சாஸ்த்ரோக்த நியமத்தோடு மூன்று வருஷகாலம் ப்ராதஸ்நானம் செய்பவனுக்கு ஏழு ஜன்மங்களில் செய்த பாபங்கள் நாசமடைகின்றன.

ப்ராதருத்தாய யோ விப்ர: ஸந்த்யாஸ்நாநம் ஸமாசரேத் ।
ஸப்தஜந்மக்ருதம் பாபம் த்ரிபிர்வர்ஷைர்வ்யபோஹதி ॥

ப்ராதஸ்நானத்தை செய்துகொண்டுவருபவன் யமயாதனைகளை அனுபவிக்கமாட்டான்.

"யாம்யம் ஹி யாதநாது:கம் ப்ராதஸ்நாயீ ந பஶ்யதி ।"

சூரிய உதயத்துக்கு முன் நான்கு நாழிகைகள் அருணோதயம் எனப்படும். அந்த ஸமயம் செய்யும் ஸ்நானம் ப்ராதஸ்நானம்.

"ப்ராத: ஸ்நாயாதருணகிரணக்ரஸ்தாம் ப்ராசீமவலோக்ய ।"

"உதயாத் ப்ராக் சதஸ்ரஸ்து நாடிகா அருணோதய: ।
தத்ர ஸ்நாநம் ப்ரஶஸ்தம் ஸ்யாத் ஸ ஹி புண்யதம: ஸ்ம்ருத: ॥"

காலையில் சரீரசோதனம் செய்து தந்ததாவனம் செய்துவிட்டு ஸ்நானம் செய்யவேண்டும். கேவலம் ஸ்நானம் பண்ணுவதால் கீழ்ச் சொன்ன பலன்கள் ஸித்திக்காது. மீன், தவளை, ஆமை முதலியவைகள் இரவும் பகலும் எப்பொழுதும் ஸ்நானம் செய்துகொண்டேயிருக்கின்றன. ஆனால் அவைகளுக்கு ஸ்நான பலன் கிடையாது. அதுபோலவே, சாஸ்த்ரோக்த விதானம் இல்லாது செய்யும் ஸ்நானத்துக்கும் ஸ்நானபலம் ஏற்படாது.

"மத்ஸ்யகச்சபமண்டூகா: ஸ்நாயந்தே ச திவாநிஶம் ।
ந தேஷாம் ஹி ஸ்நாநபலம் ததைவ விதிவர்ஜிதே"

என்று யாக்ஞவல்க்யர் கூறுகிறார்.

மஹாநதிகளில், அதாவது ஸமுத்ரத்தில் ஸங்கமம் ஆகும் நதிகளில், ஸ்நானம் விசேஷம். வேறு புண்யதீர்த்தங்களில்லாவிடில், அந்தந்த க்ராம சிவலிங்கத்தின் ஸன்னிதியில் இருக்கும் தடாகம் சிவகங்கையெனப்படும். அதில் ஸ்நானம் செய்துகொண்டுவந்தால் சிவனையே அடைவர்.

“𑌶𑌿𑌵𑌲𑌿𑌙𑍍𑌗𑌸𑌮𑍀𑌪𑍇 𑌤𑍁 𑌯𑌤𑍍𑌤𑍋𑌯𑌂 𑌵𑌾 𑌹𑍍𑌰𑌦𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌶𑌿𑌵𑌗𑌙𑍍𑌗𑍇𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌾 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌨𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑌿𑌵𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ॥”

நதிகளில் பிரவாஹத்துக்கு அபிமுகமாக ஸ்நானம் செய்யவேண்டும். குளங்களில் ஸூர்யனுக்கு அபிமுகமாக ஸ்நானம் செய்யவேண்டும். (ராத்ரிவேளையானால் கிழக்குமுகமாகவாவது வடக்குமுகமாகவாவது செய்யவேண்டும்.)

ஸங்கல்பம், ஸூக்தபடனம், மார்ஜனம், அகமர்ஷணம், தர்ப்பணம் என்ற ஐந்து அங்கங்கள் ஸ்நானத்திற்கு இருக்கின்றன.

“𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌸𑍍𑌸𑍂𑌕𑍍𑌤𑌪𑌠𑌨𑌂 𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌂 𑌚𑌾𑌘𑌮𑌰𑍍𑌷𑌣𑌮𑍍 ।
𑌦𑍇𑌵𑌤𑌾𑌤𑌰𑍍𑌪𑌣𑌞𑍍𑌚𑍈𑌵 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌙𑍍𑌗𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇” ॥

எந்த புண்யகர்மங்களும் ஸங்கல்பம் செய்துகொண்டே செய்யவேண்டும். இல்லாவிடில் அவை நிஷ்பலமாகின்றன.

“𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍍𑌯 𑌤𑍁 𑌯𑌥𑌾 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑍍𑌨𑌾𑌨𑌦𑌾𑌨𑌵𑍍𑌰𑌤𑌾𑌦𑌿𑌕𑌮𑍍 ।
𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌾𑌨𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌵𑍈 ॥”

ஸ்நானம் செய்யும் தீர்த்தத்தில் ஸகலபுண்யதீர்த்தங்களையும் ஆவாஹனம் செய்யவேண்டும். 𑌆𑌪𑍋 𑌹𑌿𑌷𑍍𑌠𑌾 𑌮𑌯𑍋𑌭𑍁𑌵𑌃 முதலான மந்த்ரங்களால் மார்ஜனம் செய்துகொள்ளவேண்டும். வருணப்ரார்த்தனை செய்யவேண்டும். ஜலத்துக்குள்ளேயிருந்துகொண்டு மூன்றுதடவை அகமர்ஷணஸூக்தத்தைஜபம் செய்யவேண்டும். அகமர்ஷணர் என்ற மஹர்ஷியால் கண்டுபிடிக்கப்பட்ட அந்த ஸூக்தத்தில் ப்ரஹ்மா உலகத்தை ஸ்ருஷ்டி பண்ணின ப்ரகாரம் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதைவிடச் சுருக்கமாகவும் கௌதமர் சொல்லு

கிறார். அதாவது— காயத்ரீமந்த்ரத்தை பாதம் பாதமாகவும், பாதி ருக்காகவும், முழுவதுமாயும் மூன்று தடவை ஜலத்துக்குள் ஜபித்தால் எல்லா பாபங்களும் நாசமடைகின்றன. அல்லது ஓங்காரத்தை மூன்று தடவை ஜலத்துக்குள்ளே ஜபித்தாலும் ஸர்வபாபமும் போகும்.

[illegible]:—

“ [illegible] ” ॥

ஸ்நானம்செய்த பிறகு ஜலத்திலிருந்துகொண்டே இரண்டு கைகளால் ஜலத்தை கோசருங்கப்ரமாணம் எடுத்து ஜலத்திலேயே தேவதா, ருஷி, பித்ருக்கள் இவர்களுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும்.

“ [illegible] ” ॥

ஸ்நானத்துக்காகப் போகும் மனிதனைப் பித்ருக்கள் ஜலம் கிடைக்குமென்று பின்தொடருகிறார்கள். நாஸ்திக்யபுத்தியால், அதாவது அதில் நம்பிக்கையில்லாமையால், தர்ப்பணம் செய்யாவிட்டால் அவர்களுடைய தேஹத்திலிருந்தும் ரத்தத்தைப் பித்ருக்கள் உறிஞ்சுகிறார்கள். ஆகையால் தர்ப்பணம் கட்டாயம் செய்யவேண்டும்.

“ [illegible] ” ॥

தர்ப்பணம் செய்த பிறகு ஜலத்தில் புண்யதீர்த்தங்களால் சரீரத்தின் மலங்களைக் கழித்து ஜலத்தை அசுத்தம் பண்ணினதால் ஏற்பட்ட தோஷத்தைப் பரிஹாரம் செய்வதற்காக ஜலக்கரையில் யக்ஷ்மதர்ப்பணம் செய்யவேண்டும். அதற்குரிய மந்த்ரம்.

“ யந்மயா தூஷிதம் தோயம் ஶாரீரமலஸஞ்சயாத் ।
தத்தோஷபரிஹாரார்த்தம் யக்ஷ்மாணம் தர்ப்பயாம்யஹம் ” ॥

பிறகு ப்ராசீனாவீதியாக இருந்து ஜலக்கரையில் மௌனமாக நிற்கவேண்டும். சிகையின் பின்பக்கத்திலிருந்து விழுகிற ஜலம் கள்ளுக்கு ஸமமானது. முன் பக்கத்திலிருந்து விழுந்தால் கங்காஜலத்துக்கு ஸமமானது. ஆகையால் சிகையின் முன் பக்கத்திலிருந்து ஜலம் விழும்படி நிற்கவேண்டும். சிரஸிலிருந்து வரும் ஜலத்தைத் தேவர்களும், முகத்திலிருந்து வரும் ஜலத்தை பித்ருக்களும், சரீரமத்யத்திலிருந்து வரும் ஜலத்தை கந்தர்வர்களும், கீழ்பாகத்திலிருந்து விழும் ஜலத்தை ஸர்வ ப்ராணிகளும் சாப்பிடுகிறார்கள்.

ஸ்நாத்வா [illegible] கேசஸ் ப்ராசீநாவீதவாந் த்விஜ: ।
யாவத்ஸ்ரவந்தி கேசாம்பு [illegible] ॥
பிபந்தி ஶிரஸோ தேவா: பிபந்தி பிதரோ முகாத் ।
மத்யத: ஸர்வகந்தர்வா: அதஸ்தாத் ஸர்வஜந்தவ: ॥
[illegible] ।
[illegible] ॥

பிறகு வஸ்த்ரத்தை நாலாக மடித்து நிவீதியாகயிருந்து கொண்டு,

“ யே கே சாஸ்மத்குலே ஜாதா அபுத்ரா கோத்ரிணோ ம்ருதா: । தே க்ருஹ்ணந்து மயா தத்தம் வஸ்த்ரநிஷ்பீடநோதகம் ”॥

என்ற மந்த்ரத்தால் பிழியவேண்டும். வஸ்த்ரத்தைப் பிழிந்த ஜலம் புத்ரனில்லாமல் காலஞ்சென்ற தங்கள் குலத்திலுண்டானவர்களுக்குத் திருப்தியை அளிக்கின்றது.

“ [illegible] வாஸோ [illegible] ஸ்நாதோ நிஷ்பீடயேத் ஸுதீ: । யே கே சாஸ்மத்குலே ஜாதா இதி மந்த்ரேண மாநவ: ” ॥

வஸ்த்ரநிஷ்பீடனகாலத்தில் நிவீதியாக இருக்கவேண்டும்.

“ [illegible] தர்ப்பணே ஸ்நாநவஸ்த்ரநிஷ்பீடநே ததா ।
நிவீதீ து ஸவேத் [illegible] ததா [illegible] ” ॥

பிறகு உலர்ந்தவஸ்த்ரத்தை தரித்துக்கொண்டு அரையில் அணிந்த வேஷ்டியை நிவீதியாயிருந்துகொண்டு கரையில் பிழியவேண்டும். அதனால் உச்சிஷ்டத்தை சாப்பிடும் தாஸர்கள் என்ன, மற்றும் தம்மைச் சேர்ந்தவர்கள் வ்ருக்ஷம் முதலியவைகளாக இருப்பவர்கள் த்ருப்தியடைகிறார்கள். அதை பிழிவதின் மந்த்ரம்.

‘உச்சிஷ்டபாகிநோ தாஸா யே ம்ருதா யேऽக்நிதக்தகா: |
தேஷாம் தத்தேந ப்ரீதா: ஸந்து ஸம்பந்திநோ நரா: ||’

பிழிந்த வஸ்த்ரத்தை இடது மணிக்கட்டில் ப்ரகோஷ்டத்தில் வைத்துக்கொண்டு ஜலத்தில் ஒரு பாதத்தையும் ஸ்தலத்தில் ஒரு பாதத்தையும் வைத்துக்கொண்டு இரண்டு தடவை ஆசமனம் செய்யவேண்டும். இத்துடன் ஸ்நானம் என்கிற கர்மா முடிந்தது.

அவகாஹ ஸ்நானம் உயர்ந்தது. உஷ்ணோதக ஸ்நானம் உடம்பு சௌகரியமில்லாவிட்டால் செய்யவேண்டியது. இதற்கு வாருணஸ்நானம் என்று பெயர். இதுவே முக்கிய ஸ்நானம். அது நித்யம், நைமித்திகம், காம்யம், க்ரியாங்கம், மலாகர்ஷணம், க்ரியாஸ்நானம் என்று ஆறு வகைப்படும். (1) ப்ராதஸ்நானம் நித்யஸ்நானம், மாத்யாஹ்நிக ஸ்நானமும் நித்யம். அப்பொழுதுதான் ச்ருதிஸ்நாநம் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஸ்நானத்துக்குப் பதிலாக விபூதியை தரிப்பது வழக்கத்திலிருக்கிறது. (அது ஆக்னேய ஸ்நானமாகும்). (2) சண்டாள ஸ்பர்சாதிகள் ஏற்பட்டால் செய்யும் ஸ்நானம் நைமித்திகம். (3) ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில் சொல்லியபடி சில ஸமயங்களில் சில பலத்தைக்குறித்துச் செய்யும் ஸ்நானம் காம்ய ஸ்நானம். (4) பித்ருதர்ப்பணம், ச்ராத்தம் முதலிய கர்மாக்களுக்காக செய்யும் ஸ்நானம் க்ரியாங்கம். (5) எண்ணெய் தேய்த்து ஸ்நானம் தைலாப்யங்கம் மலகர்ஷணம். (6) ஸ்நானமே க்ரியையாகயிருப்பது க்ரியாஸ்நானம். க்ரியாஸ்நாநம் ஸமுத்திஷ்டம் ஸ்நாநம் தத்ர க்ரியா ஸதா |

கௌண ஸ்நானங்கள் உடம்புக்கு ஸ்வஸ்ததையில்லாத காலத்தில் செய்யக்கூடியவை. (1) தலையைத்தவிர ஸ்நானம்,

கழுத்தோடு குளித்தல், (2) இடுப்புவரையில் குளித்தல், (3) அதற்கும் சக்தியில்லாத காலத்தில் ஈரவேஷ்டியால் உடம்பு முழுவதையும் துடைத்துக்கொள்வது.

அஶிரஸ்கம் பவேத் ஸ்நாநம் கடிஸ்நாநமஶக்தித: ।
ஆர்த்ரேண வாஸஸா வாऽபி மார்ஜநம் காபிலம் ஸ்ம்ருதம் ॥

ஆர்த்ர வஸ்த்ரத்தால் உடம்பை துடைத்துக்கொள்வதையே காபிலஸ்நானம் என்று சொல்லுவார்கள். மேலும் பராசர மஹர்ஷி ஐந்துவித ஸ்நானங்களை நிரூபிக்கிறார். (1) ஆக்னேயம், (2) வாருணம், (3) ப்ராஹ்மம், (4) வாயவ்யம், (5) திவ்யம் என்று ஐந்துவித ஸ்நானம். விபூதி ஸ்நானம் ஆக்னேயம் அதற்கு விதானம் சொல்லப்பட்டிருக்கிறது. கடைசி பக்ஷமாக விபூதியை தரித்துக்கொள்வது ஆக்னேய ஸ்நானம். ஜலத்தில் அவகாஹ ஸ்நானம் வாருணம், ஆபோஹிஷ்டா முதலிய மந்த்ரங்களால் ப்ரோக்ஷணம் செய்துகொள்வது ப்ராஹ்ம ஸ்நானம், ப்ரணவம் மந்த்ரம், அதனால் செய்வதை மந்த்ரஸ்நானம் என்று சொல்லுவார்கள். கோக்களின் தூளிகள் காற்றுவீசி அடித்தால் அது வாயவ்ய ஸ்நானம். வெய்யிலிருக்கும்போது மழைபெய்தால் அதில் ஸ்நானம் செய்வது கங்காஸ்நான பலனைக்கொடுக்கும். அதற்கு திவ்யஸ்நானம் என்று பெயர்.

பாராஶர: —

ஸ்நாநாநி பஞ்ச புண்யாநி கீர்த்திதாநி மஹர்ஷிபி:
ஆக்நேயம் வாருணம் ப்ராஹ்மம் வாயவ்யம் திவ்யமேவ ச ॥

ஆக்நேயம் பஸ்மநா ஸ்நாநம் அவகாஹ்யம் து வாருணம் ।
ஆபோஹிஷ்டேதி ச ப்ராஹ்மம் வாயவ்யம் கோரஜ: ஸ்ம்ருதம் ॥

யத்து ஸாதபவர்ஷேண தத்ஸ்நாநம் திவ்யமுச்யதே ।
தத்ர ஸ்நாத்வா து கங்காயாம் ஸ்நாதோ பவதி மாநவ: ॥

இப்படிக்கு,
**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

---

Printed at Vaidika Vardhini Press, Kumbakonam. Published by Veda Dharmashastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 2,500, 8-10-1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

ப்ரசுரம் 28.

[விலை அணா ஒன்று.]

# ஔவையும், பண்டைத் தமிழ் நூல்களும், வேதமும் ஈசனும்.

---

ஔவை தமிழ்த் தாய்.

ஔவை என்ன சொன்னாள்?

"ஓதாம லொருநாளு மிருக்கவேண்டாம்" என்று சொன்னாள்.

"ஓதல்" என்றால் என்ன?

"ஓத்து" என்றால் வேதம்; ஓதல், அதனை அத்யயனம் செய்

"வேதமோதிய வேதியர்க்கோர் மழை" என்பது நால்மரபு.

திருக்குறள் ஆசிரியர் என்ன சொன்னார்?

"மறப்பினும் ஓத்துக்கொள்ளலாகும் பார்ப்பான்" என்றார்

அவ்வேதத்திலுள்ள அக்ஷரங்கள் உடலின் எப்பாகத்தி லிருந்து பிறப்பன?

உந்தியினின்றும் மூலாதாரத்தினின்றும் பிறப்பன.

இவ்விதம் எந்நூலில் சொல்லப்பட்டிருக்கிறது?

தமிழ் நூல்களுக்குள் முதன்மையான நூலில் சொல்லப்பட் டிருக்கிறது.

அது எது?

தொல்காப்பியம். தமிழ் நூல்களுக்குள் இதைவிடப் பழைய நூல் ஒன்றும் தெரியவில்லை. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் முத லாவது பிறப்பியலில்

"எல்லாவெழுத்தும் வெளிப்படக்கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுணர்ச்சிவாரத்
தகத்தெழுவளியிசை யரிறப நாடி
யளபிற்கோடலந்தணர் மறைத்தே
யஃதிவணுவலாதெழுந்து புறத்திசைக்கு
மெய்தெரிவளி யிசையளவு நுவன்றிசினே:.

என்று காணப்படுகின்றது.

இதன் பொருள்:—

எல்லா எழுத்துக்களும் பிறக்குமாறு முந்து நூற்கண்ணே கூறி வெளிப்படுக்கையினாலே, யானும் அவ்வாறே கூறிய எண் வகை நிலத்தும் பிறக்கின்ற பிறப்போடே அவ்வெழுத்துக்களைக் கூறுமிடத்து, யான் கூறியவாறு அன்றி, உந்தியில் தோன்றும் காற்றினது இரிதருங்கூற்றின்கண்ணே மாத்திரைக் கூட்டிக் கோடலும் மூலாதாரத்திலெழுகின்ற காற்றினோசையைக் சூற்ற மற நாடிக்கோடலும் பார்ப்பாரது வேதத்துளதே. அந்நிலைமை ஆண்டுணர்க. அங்ஙனம் கூறலை ஈண்டு கூறலாகாமையின் இந் நூற்கட்கூறாதே உந்தியிற்றோன்றி புறத்தே புலப்பட்டு ஒலிக் கும் பொருள் தெரியுங் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன். அவற்றினது மாத்திரையை உணர்க என்பதே.

இதனால் தமிழ் எழுத்துக்கள் உந்தியினின்றே பிறப்பன, வேத எழுத்துக்கள் உந்தியினின்றும் மூலாதாரத்தினின்றும் பிறப்பன என்பது தொல்காப்பியத்தினின்று பெறப்பட்டது.

அவ்வேதாக்ஷரங்கள் எவ்வளவு?

ஐம்பது. க்ஷ என்னும் மேரு அக்ஷரத்தைச் சேர்த்தால் ஐம்பத்தொன்று.

இக்கணக்கு எங்கு அறியப்படுகிறது?

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரும் பதினெண் ஸித்தர்களில் ஒருவருமான **திருமூலர்** திருவாக்கினின்றும்.

அத்திருவாக்கிற்கு என்ன பெயர்?

திருமந்த்ரம் என்று பெயர்.

இவ்விஷயத்தைக் கூறும் திருமந்த்ர வாக்குகள் எவை?

"ஐம்பதெழுத்தே அனைத்தும் வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்தாகமங்களும்
ஐம்பதெழுத்தேயு மாவ தறிந்தபின்
ஐம்பதெழுத்தும்போய் அஞ்செழுத்தாமே. (965)

அகார முதலாக ஐம்பத்தொன்றாகி
உகார முதலாக வோங்கி யுதித்து
மகார இறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகும் நந்திதன் நாமமே" (2699)

அவ்வேதங்கள் பகவானுடைய ஸ்வரூபமே.

யார் சொன்னார்?

எல்லா ஆழ்வார்களும் நாயன்மார்களும்.

"சந்தோகா - பௌழியா - தைத்திரியா - சாமவேதியனே - நெடுமாலே" என்றார் திருமங்கையாழ்வார். இங்கு "பௌழியா" என்றது ரிக்வேதியை. இன்னும் மலையாள நாட்டினர் ரிக்வேத ப்ரயோகத்தை "பௌழிய" மென்றே கூறுகின்றனர்.

"அங்கமாறும் வேதம் நான்குமாகி நின்றவற்றுள்ளே தங்குகின்ற தன்மையார்" என்றார் திருமழிசையாழ்வார்.

"நான்மறையோடாறங்கமாயினான்காண்" என்றார் திருநாவுக்கரசு.

"வேதமும் வேள்வியுமாயினார்க்கு" என்றார் மாணிக்கவாசக சுவாமிகள்.

"தயங்குசோதி சாமவேதா" என்றார் சம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

ஆதலால் ஒருவனுக்கே அரன், நாரணன் என்னும் இரு நாமங்களென்றார் ஆழ்வார். "அரன் நாரணன் நாமம்" என்பது பாசுரம்.

இவ்விஷயத்தில் தமிழ்த் தாயாகிய ஒளவை என்ன சொல்லியிருக்கிறாள்?

"அரனை மறவேல்" என்றாள். 'திருமாலுக் கடிமைசெய்' என்றாள்.

திருமால், அரன் என்ற இருவுருவங்களும் ஒரே பரமாத்மா என்ற கொள்கையை தமிழ்த்தாய் நாட்டினாள். ஓதாமலொருநாளுமிருக்கவேண்டாம் என்றும் சொன்னாள். அவளது திருவாக்கைப் பின்பற்றுவோமாக.

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 2,500, 20—10—1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

( Regd. )

கும்பகோணம்.

ப்ரசுரம் 29.

[ விலை அணு ஒன்று. ]

# நரகசதுர்தசீ மஹிமா.

𑍐 𑌨𑌮𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 ॥

𑌨𑌰𑌕𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍀 𑌮𑌹𑌿𑌮𑌾 ॥



𑌶𑍍𑌰𑍀 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑍈𑌵𑌰𑍍𑌤𑌪𑍁𑌰𑌾𑌣𑍇

𑌤𑍁𑌲𑌾𑌕𑌾𑌵𑍇𑌰𑍀𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑍇 𑌷𑌡𑍍𑌵𑌿𑌂𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌸𑌨𑌤𑍍𑌕𑍁𑌮𑌾𑌰 𑌉𑌵𑌾𑌚 —

𑌅𑌤𑌃 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸𑌾𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌪𑍍𑌰𑌦𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌦𑌂 𑌪𑌾𑌪𑌨𑌾𑌶𑌨𑌮𑍍 ॥௧॥

𑌶𑌿𑌵𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌵𑌾𑌯𑍁𑌸𑌤𑍀𑌰𑍍𑌥𑍈𑌰𑌨𑍇𑌕𑌕𑍋𑌟𑌿𑌭𑌿𑌃 ।
𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌵𑌹𑌤𑌿 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌹𑌿𑌤𑍇𑌚𑍍𑌛𑌯𑌾 ॥ ॥௨॥

𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ ॥௩॥

𑌸𑌨𑍍𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌸𑌮𑍍𑌭𑌵𑍇 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌤𑌰𑍇𑌷𑍁 𑌚 ।
𑌨𑌾𑌰𑍍𑌹𑌨𑍍𑌤𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌕𑌾𑌵𑍇𑌰𑍍𑌯𑌾𑌃 𑌷𑍋𑌡𑌶𑍀𑌂 𑌕𑌲𑌾𑌮𑍍 ॥

𑌕𑌾𑌵𑍇𑌰𑍀𑌤𑌿 𑌚 𑌯𑍋 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌤𑍍 𑌯𑍋𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 𑌶𑌤𑍈𑌰𑌪𑌿 ।
𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌿𑌮𑍁𑌤 𑌸𑍍𑌨𑌾𑌨𑌜𑌂 𑌫𑌲𑌮𑍍 ॥௪॥

𑌤𑌜𑍍𑌜𑌲𑌂 𑌮𑌾𑌧𑌵𑌾𑌣𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌦𑍁𑌗𑍍𑌧𑌂 𑌹𑌂𑌸𑌂 𑌹𑍍𑌯𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑌾𑌤𑍁𑌨𑌾𑌮𑍍 ।
𑌸𑌾𑌯𑌥𑌨𑌾𑌂 𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌾 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑍀 𑌶𑍍𑌰𑍀𑌦𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌾𑌯𑌿𑌨𑍀 ॥௫॥

[illegible] ।
[illegible] ॥
[illegible] । ௨௦॥

[illegible] ।
[illegible] ॥௨௧॥

[illegible] ।
[illegible] ॥ ॥௨௨॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥௨௪॥

𑌰𑌾𑌜𑌾 —

[illegible] ।
[illegible] ॥ ॥௨௫॥

𑌸𑌾𑌰𑌥𑌿𑌃 —

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥௨௬॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible]

[illegible] ॥
[illegible] ॥

𑌶𑌙𑍍𑌖𑌨𑌾𑌦𑍇𑌨 𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌸𑍂𑌦𑌯𑌾𑌨𑌿 𑌧𑌨𑍍𑌵𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌾𑌕𑌾𑌰𑌂 𑌮𑌣𑍍𑌡𑌯𑌾 𑌨𑍈𑌵 𑌨𑌿𑌰𑍍𑌬𑌿𑌭𑍇𑌦 𑌮𑌹𑌾𑌯𑌸𑌃 ॥ ॥௧௨॥

𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌧𑍍𑌵𑌨𑌿𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌯𑌾𑌦𑌵𑌾𑌗𑍍𑌰𑌾𑌸𑌨𑌿𑌸𑌙𑍍𑌗𑌿𑌷𑍁 ।
𑌦𑍂𑌰𑌾 𑌜𑌗𑌾𑌦𑍍𑌯𑍋𑌦𑍍𑌧𑌸𑍍𑌵 𑌚𑍇𑌦𑍍𑌯𑌾𑌃 𑌪𑌞𑍍𑌚𑌶𑌿𑌰𑌾 𑌜𑌯𑌾𑌯 ॥

𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌖𑌚𑌕𑍍𑌰𑌦𑍃𑌢 𑌸 𑌦𑌾𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑌣𑌃
𑌯𑌾𑌦𑌵𑌸𑌙𑍍𑌘𑌪𑍍𑌰𑌾𑌣𑌪𑌰𑌾𑌵𑌿𑌷𑌾𑌣𑌃 ।
𑌹𑍃𑌤𑍍𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑍋𑌰𑍍𑌜𑌿𑌤 𑌪𑌞𑍍𑌚𑌮𑌿𑌦𑍍𑌵𑌰𑍍𑌪𑍇𑌃
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌰𑌾𑌵𑍇 𑌤𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌦𑍍𑌵𑌯𑍋𑌯𑍋𑌰𑌾𑌮𑌃 ॥ ॥௧௪॥

𑌕𑍁𑌵𑌿𑌜𑍍𑌯 𑌶𑌙𑍍𑌖𑌂 𑌤𑌰𑌸𑌾 𑌮𑌰𑍍𑌤𑍍𑌤𑍀
𑌨𑌿𑌰𑌸𑍍𑌯 𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑍍𑌯𑌨𑌦𑌕𑌃 𑌸 𑌪𑌾𑌪𑌯𑍀𑌃 ।
𑌤𑌦𑌾𑌵𑌤𑌤𑌂 𑌶𑍍𑌰𑍀𑌶𑌿𑌵𑌂 𑌮𑌰𑍍𑌤𑍍𑌤𑍇𑌤
𑌹𑌰𑌿𑌪𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌾𑌂 𑌵𑍃𑌷𑌨𑌾𑌤𑌦𑌾𑌗𑍍𑌜𑌸𑌾 ॥ ॥௧௫॥

𑌦𑍇𑌵𑍇𑌷𑍁 𑌤𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌶𑌰𑍈𑌰𑍍𑌤𑌾𑌡𑌯𑌨𑍍
𑌤𑌦𑍍𑌦𑍇𑌹 𑌚 𑌬𑌾𑌣𑌾𑌸𑍁 𑌸 𑌬𑌾𑌹𑍁𑌭𑌿𑌰𑍍𑌦𑍂𑌰𑌤 ।
𑌤𑌾𑌦𑍃𑌵𑌤𑍇𑌜𑌂 𑌹𑌰𑌵𑌾𑌨𑍍𑌯𑍋 𑌮𑌦𑌾𑌂
𑌮𑌦𑌾𑌹𑍍𑌰𑍇𑌜𑍋 𑌨𑌿𑌰𑍍𑌬𑌿𑌭𑍇𑌦 𑌸𑌹𑌸𑍍𑌰𑌯𑌾 ॥ ॥௧௬॥

𑌉𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌯 𑌬𑌾𑌹𑍁𑌭𑌿𑌰𑍍𑌹𑌿𑌯𑌾𑌵𑌤𑌾𑌗𑍍𑌸𑍍𑌯
𑌶𑌿𑌰𑌾𑌂𑌸𑌿 𑌚𑌕𑍍𑌰𑍇𑌣 𑌜𑌹𑌾𑌰 𑌭𑍀𑌷𑌯𑌾 ।
𑌵𑍍𑌯𑌸𑌾𑌃 𑌪𑌪𑌾𑌤𑌾𑌂𑌹𑌸𑌿 𑌕𑍃𑌤𑍍𑌤𑌶𑍀𑌷𑌃
𑌨𑌿𑌕𑍃𑌤𑍍𑌤𑌶𑍃𑌙𑍍𑌗𑍋𑌽𑌦𑍍𑌰𑌿𑌰𑌿𑌵𑍋𑌗𑍍𑌰𑌤𑍇𑌜𑌸𑌾 ॥ ॥௧௭॥

𑌤𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌜𑌾𑌸𑍍𑌸𑍍𑌤 𑌪𑌿𑌤𑌾𑌵𑍃𑌯𑌾𑌤𑌾𑌰𑌾𑌃
𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌂 𑌕𑌤𑍃𑌦𑌯𑍋 𑌸𑌦𑍍𑌵𑍃𑌤𑌾𑌃 ।
𑌤𑌾𑌦𑍃𑌗𑌙𑍍𑌗𑌶𑌿𑌕𑍍𑌷𑌃 𑌶𑍍𑌰𑌵𑌣𑍋 𑌵𑌿𑌹𑌾𑌵𑌸𑌾𑌃
𑌵𑌸𑌾𑌨𑍃𑌹𑍍𑌵𑌾𑌨𑌰𑌾𑌣𑍍𑌵𑌾 𑌸𑌪𑍍𑌤𑌦𑌃 ॥ ॥௧௮॥

𑌪𑍀𑌠𑌂 𑌪𑌾𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍍𑌯 𑌚𑌦𑍍𑌕𑍍𑌰𑌵𑌤𑌿𑌂 𑌦𑍃𑌯𑍇
𑌹𑍃𑌦𑍍𑌪𑍍𑌰𑌯𑌾𑌕𑍍𑌷𑌾 𑌨𑌿𑌰𑌮𑌾𑌲𑍍𑌯𑌤𑌾𑌯𑌾𑌯𑌾𑌃 ।
𑌤𑌾𑌨𑍁 𑌪𑍀𑌠𑌦𑍇𑌵𑍍𑌯𑌾𑌨𑌨𑌯𑌦𑍍𑌵𑍀𑌕𑍍𑌷𑌯𑌂
𑌨𑌿𑌕𑍃𑌤𑍍𑌤𑌬𑌾𑌹𑍁𑌰𑌾𑌶𑌿𑌰𑍋𑌽𑌸𑍍𑌵 𑌚𑌦𑍃𑌣𑌃 ॥ ॥௧௯॥

௨

## ஸ்ரீப்ரம்ஹ கைவர்த்த புராணத்தில் துலாகாவேரீ மாஹாத்ம்யத்தில் இருபத்து ஆறுவது அத்யாயம் ஆரம்பிக்கப்படுகிறது.

# தீபாவளியின் மாஹாத்ம்யம்.



*ப்ரம்ஹகைவர்த்த புராணத்திலுள்ள துலாகாவேரீ மாஹாத்ம்யம் ஸுமந்து என்பவருக்கும் தேவசர்மா என்பவருக்கும் ஸம்வாதரூபமாய் அமைந்துள்ளது. ஸுமந்து என்பவர் தேவசர்மா என்பவருக்கு உபதேசிக்கின்றார்.*

**ஸுமந்து சொல்வதாவது:—**

*ஓ அரசனே! இனியும் காவேரியின் பெருமையைச் சொல்லுகிறேன். கேட்கக்கடவாய். அது கேட்போருக்குப் புத்திரர்களையும், பௌத்திரர்களையும் மற்றுமிஷ்டமான எல்லாப் பொருள்களையுமளிக்கக்கூடியது. எல்லா ஜனங்களுக்கும் ஹிதம் செய்ய விருப்பத்தால், பதினுன்கு உலகங்களிலுள்ள அனேக கோடி தீர்த்தங்களுடன் சேர்ந்து காவேரி ப்ரவஹிக்கின்றாள். இக்காவேரியின் பெருமையைக் கேட்பதால் திவ்யஜ்ஞானமுண்டாகும். பூமியிலும் மற்ற உலகங்களிலும் அனேக தீர்த்தங்களிருக்கின்றன. அவையெலாம் காவேரியின் கலைக்கும் (16-ல் ஒரு பாகம்) ஸமமாவதில்லை. பதினுயிரம் யோஜனை தூரத்திற்கப்புறமிருப்பவன்கூட 'காவேரீ' என்று சொன்னால் காவேரீ ஸ்நானபலத்தை அடைவான், ஸகல பாபங்களினின்றும் விடுபடுவான். அக்காவேரியில் ஸ்நானம் செய்வது மஹாபுண்யமானது, பாபிகளுக்குக் கிட்டாது. ஸாதுக்களுக்குச் சுலபமானவள், அண்டியவர்களுக்கு மோக்ஷமளிப்பவள் அக்காவேரீ. அக்காவேரியில் முழுகியவர்கள் பாபிகளாயினும் தம் தாய்தந்தைகளின் குலத்தில் பிறந்த ஆயிரம் பேர்களுடன் தேவலோகமடைவார்கள். வெகு தூரத்திலிருப்பவனும், நான் எப்பொழுது காவேரிக்குச் சென்று ஸ்நானம் செய்வேன் என்று ஆவலுற்றிருந்தால், ஸ்நானம் செய்யாவிடினும் ஸ்நான பலம் பெறுவான்.*

நரகபயமடைந்த மனிதர்கள், ஆச்வயுஜமாதத்தின் க்ருஷ்ண பக்ஷசதுர்தசியில் ஸூர்யோதயகாலத்தில் அப்யங்கஸ்நானம் (எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஸ்நானம்) செய்யவேண்டும். அன்று எண்ணெயில் லக்ஷ்மியும், ஜலத்தில் கங்கையும், ஸகல தேவர்களுமிருக்கின்றனர். ஆகையால் அன்று மனிதன் எண்ணெயிட்டுக்கொண்டு சூடான ஜலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். துலா (ஐப்பசி) மாஸத்தில் தீபாவளி தினத்தில் காவேரியில் ஸ்நானம் செய்பவனின் புண்யத்திற்குக் கணக்கே இல்லை. அந்த நரகசதுர்தசியில் ஸ்நானம் செய்யும் மனிதர்களைக் கண்டு பாபங்களும் நரகங்களும் பயப்படுகின்றன. இந்த நரகசதுர்தசீ தினத்தில் அருணோதய முதல் ஸங்கவம் (உதயாதி 6-நாழிகை) வரையில் 66-கோடி தீர்த்தங்களும் காவேரியில் இருக்கின்றன. அன்று அக்காவேரியில் ஸ்நானம் செய்து, காவேரியின் மாஹாத்ம்யத்தைக் கேட்பவனின் பாபமெலாம் அன்றே நசிக்கின்றது. அன்று, ஒன்று இரண்டு மூன்று நான்கு ப்ராம்ஹணர்களுக்கு நல்லெண்ணெயைத் தானம் செய்பவன் எண்ணெயின் துளிகளுக்குச் சமமான வருஷங்கள் வரையில் கைலாஸத்தில் ஸுகமாயிருப்பான். தீபாவளி தினத்தில் அப்யங்கஸ்நானம்செய்து அலங்காரம் செய்துகொண்டு தம்மாலியன்ற பொருள்களைத் தானம் செய்பவர்கள் மோக்ஷமடைகின்றனர். ஸம்சயமில்லை.

முற்காலத்தில் ஓரிடத்தில் பணக்காரர்களான ப்ராம்ஹண தம்பதிகள் வஸித்து வந்தனர். அவர்களுள் அந்த ப்ராம்ஹணிக்கு, துலா மாத க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியில் நடுநிசியில் தலைவலி உண்டாயிற்று. அதனால் மிகவும் வருந்திய அவள் வைத்யனை அழைத்து வந்து காண்பித்தாள். அந்த வைத்யன், வெகு நாளாய் எண்ணெய் தேய்த்துக்கொள்ளாததால் இத்தலைவலி உண்டாகியிருக்கிறது. இப்பொழுதே அப்யங்கஸ்நானம் செய்தால் தலைவலி நிவர்த்தித்து விடும் என்று இனிமையாய்ச்சொன்னான். அதைக்கேட்டு அவ்விருவரும் அருணோதய காலத்திலேயே எண்ணெய் தேய்த்துக்கொண்டு உஷ்ணோதகத்தால் ஸ்நானம் செய்து, வைத்யனுக்கு அரிசிமுதலியவைகளையும் பணத்துடன் தாம்பூலத்தையும் கொடுத்தனர். அப்புண்ய மஹிமையினால் அவ்விருவரும் காலாந்தரத்தில் முக்தியையுமடைந்தனர். ஓ அரசனே! ஆகையால் துலாமாஸத்தில் க்ருஷ்ண சதுர்தசியில்

ஸ்நானம் ஸகல பாபங்களைப்போக்குவதும் நரக பீடையை நிவர்த்திப்பதுமாகும்.

முற்காலத்தில் ஓர் வாணியனிருந்தான். அவன் நரக சதுர்தசி தினத்தில் அருணோதயகாலத்தில் எண்ணெய் விற்ப தற்காக எண்ணெய்க் குடத்தைத் தலையின்மேல் வைத்துக் கொண்டு வீதிகளில் சென்றான். அக்குடம் த்ருடமாயிருந் தும் அடியில் சிறிய ஒரு த்வாரம் இருந்தது. அதை அவன் அறியவில்லை. அச்சிறு த்வாரத்தின்வழியாய் எண்ணெய் கசிந்து நற்காலத்தால் அவன் தலையிலும், தேஹத்திலும் பர வியது. உடனே அவன் ஸ்நானமும் செய்தான். தற்செய லாய் ஒரு நல்ல வேதியனுக்கு அரிசி முதலியவையுடன் சிறிது பணமும் கொடுத்தான். அவ்விதம் செய்ததால் அந்த வாணி யன் ஸகல பாபங்களுமற்று, காலாந்தரத்தில் ஸ்வர்க்கலோக மடைந்தான்.

**தேவ சர்மா—**

ஓ முனி ச்ரேஷ்டரே! ஆச்வயுஜ க்ருஷ்ணபக்ஷ சதுர் தசிக்கு நரகசதுர்தசியென்ற பெயர் எப்படியுண்டாயிற்றென் பதை எனக்குக் கூற வேண்டுகிறேன்.

**ஸுமந்து முனிவர் சொல்லுகிறார்—**

முற்காலத்தில் மஹாபாபியாயும், மஹாபலிஷ்டனுயும், மஹாரதனுமாய் பூமியின் புத்ரனை நரகனென்றொரு அஸுர னிருந்தான். அவன் தவம்செய்து ப்ரம்ஹாவை ஆராதித்து அவரிடமிருந்து வரனை அடைந்தான். அந்த மூர்க்கன் வெகு கர்வமுடையவனாய் ப்ராக்ஜ்யோதிஷமென்னும் பட்டணத்தில் வஸித்துவந்தான். அந்தப் பாபி தேவர்களை வெகு காலம் பிடித்துவந்தான். தேவேந்த்ரனின் குடை, குண்டலங்கள், பந்துக்கள் இவைகளையும் அபஹரித்துக்கொண்டான். பிறகு ஏழையான இந்த்ரன் பூலோகம் சென்று ஸ்ரீ க்ருஷ்ணனிடம் நரகாஸுரனின் துஷ்டச்செயல்களைத் தெரிவித்துக்கொண் டான். க்ருஷ்ணனும் பாரியையுடன் கருடன் மேலேறி நரக னின் பட்டணத்தையடைந்தார். அப்பட்டணம் மலைக்கோட் டை, ஆயுதக்கோட்டை, ஜலம், நெருப்பு, காற்று இந்தக்

கோட்டைகளாலும், முரனென்னுமஸுரனின் பாசக்கோட்டையினுலும் சூழப்பட்டிருந்தது. க்ருஷ்ணன், தம் கதாயுதத்தினுல் மலையையும், பாணங்களால் ஆயுதக்கோட்டையையும், சக்ராயுதத்தால் அக்னி, ஜலம், வாயு இக்கோட்டைகளையும், கத்தியினுல் பாசக்கோட்டையையும், சங்கு நாதத்தால் வீரர்களின் மனங்களையும், கதையினுல் பிராகாரத்தையும் பிளந்தார். ப்ரளயகாலத்திலுண்டாகும் இடிபோன்ற சங்கத்வனியைக் கேட்டு அகழில் ஜலத்திற்குள் வஸிக்கும் ஐந்து தலையுள்ள முரன் என்ற அஸுரன் வேகமாய் வெளியில் வந்தான். ப்ரளய கால ஸூர்யன்போல் உக்ரமான காந்தியுடையவனும் பார்க்க முடியாதவனுமான அவன் சூலாயுதத்தை ஓங்கிக்கொண்டு ஐந்து வாய்களாலும் மூவுலகத்தையும் விழுங்குகிறவன் போன்று, கருடனைப் பாம்பு எதிர்ப்பதுபோல் கருடனை எதிர்த்து ஓடினுன். அந்தப்பாபியான அஸுரன் சூலத்தை சுழற்றி வேகமாய் கருடன்மேல் எறிந்து முகங்களால் கர்ஜித்தான். அப்பொழுது க்ருஷ்ணன் இரண்டு பாணங்களால் அச் சூலத்தைச் சீக்கிரமாய் வெட்டினுர். அவனுடைய முகங்களில் பாணங்களாலடித்து அவன்மேலும் அநேக பாணங்களை ப்ரயோகித்தார். பிறகு முரனுல் எறியப்பட்ட ஒரு கதாயுதத்தையும் பாணங்களால் பல துண்டுகளாய்க் கண்டித்தார். பிறகு பத்துக்கைகளையுமோங்கிக்கொண்டு ஓடிவரும் முராஸுரனின் ஐந்து தலைகளையும் சக்ராயுதத்தினுல் ஆயாஸமின்றி அறுத்து வீழ்த்தினுர். இந்த்ரனுல் அறுபட்ட சிகரங்களையுடைய மலை போல் அவ்வஸுரன் ப்ராணனிழந்து ஜலத்தில் விழுந்தான். அவன் வதத்தால் வருத்தமடைந்த அவன் புத்ரர்களான தாம்ரன், அந்தரிக்ஷன், ச்ரவணன், விபாவஸு, வஸு, நபஸ்வான், அருணன் என்ற ஏழுபேர்களும் பதில்பகாரம்செய்ய முயன்றவர்களாய் நரகாஸுரனுல் ஏவப்பட்டு, பீடன் என்ற ஸேநாபதியை முன்னிட்டு ஆயுதங்களைத்தரித்தவர்களாய் யுத்தத்திற்கு வந்தார்கள். பீடன்முதலிய அவ்வெல்லோரையும் க்ருஷ்ணன் தம் பாணங்களால் தலை, கை, கால், துடை, கவசம் இவைகளை அறுத்து யமலோகத்திற்கு அனுப்பினுர். பிறகு நரகாஸுரன் தன் ஸேநாபதிகள் எல்லோரும் க்ருஷ்ணனின் பாணங்களால் கொல்லப்பட்டதாய்க் கேட்டு, ஆயுதங்களைத்

தரித்து யுத்தத்திற்கு வந்தான். ஸூர்யமண்டலத்தின்மேல் நீலமேகம்போல் கருடன்மேல் பார்யையுடன் விளங்கும் க்ருஷ்ணனைப் பார்த்தான். வஜ்ராயுதம்போன்ற சக்தி என்னு மாயுதத்தால் க்ருஷ்ணனையுமடித்தான்.

புஷ்பமாலையாலடிக்கப்பட்ட யானைபோல் க்ருஷ்ணன் கொஞ்சமுமசையவில்லை. தன் யத்னம் வீணாகியதால் நரகா ஸுரன் க்ருஷ்ணனைக்கொல்ல சூலாயுதத்தை எடுத்தான். சூலத்தை எறிவதற்கு முன்பே க்ருஷ்ணன் யானையின்மேல் உள்ள நரகனின் தலையைக் கூரான சக்ராயுதத்தால் அறுத்தார். பிறகு வீரனான நரகனைக் கொன்றதால் வீரஹத்யா என்னும் பாபம் பெண்ணுருவத்துடன் க்ருஷ்ணனைத் தொடர்ந்தது. வீரஹத்யையால் தொடரப்பட்ட க்ருஷ்ணன் அதையொழிக்க விரும்பிக் கைலாஸம் சென்றார். அங்கே பரமசிவனைக்கண்டு அநேக ஸ்தோத்ரங்களால் ஸ்துதித்து நமஸ்கரித்து க்ருஷ்ணன் அறிவித்துக்கொண்டார். ஓ பகவன்! ஸர்வ லோகேச்வர! என்னைத் தொடர்ந்துவரும் வீரஹத்யையைச் சீக்கிரம் நிவர்த் திக்க ஒரு ப்ராயச்சித்தம் சொல்லவேண்டும். இவ்விதம் ப்ரார்த்திக்கப்பட்ட பரமேசன் விஷ்ணுவுடனும், தேவர்க ளுடனும் துலாமாஸத்தில் காவேரியின் கரையையடைந்தார். பிறகு காவேரியை க்ருஷ்ணனுக்குக் காண்பித்து, "இந்தத் துலாமாஸத்தில் க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியில் காவேரியில் ஸ்நா னம்செய்தால் உன்னைத் தொடரும் இந்த வீரஹத்யை நசித்து விடும், ஸம்சயமில்லை. துலாமாஸத்தில் க்ருஷ்ணபக்ஷ சதுர் தசியில் காவேரி நதி அறுபத்தாறுகோடி தீர்த்தங்களுடன் சேர்ந்திருக்கிறாள். ஆகையால் இக்காலத்தில் காவேரியில் ஸ்நானம் செய்தால் ஸகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்த பலனைப்பெறுவார்" என்றார். அந்த வார்த்தையைக் கேட்டுப் பகவானாகிய க்ருஷ்ணன் காவேரியில் ஸ்நானம் செய்தார். அந்த க்ஷணத்திலேயே வீரஹத்யையும் நசித்துவிட்டது.

இந்த ஆச்சரியத்தைக்கண்டு ப்ரம்ஹா முதலிய எல்லாத் தேவர்களும் எல்லா முனிவர்களும் தங்கள் பாபம் நிவர்த்திக்கக் காவேரியில் ஸ்நானம் செய்தார்கள். பிறகு பூமிதேவியானவள் ஈசன் முதலிய தேவர்களையும், முனிவர்களையும் நமஸ்கரித்து

வேண்டாம். நமக்குள்ள ஸங்கேதங்களையும் கஷ்டங்களையும் போக்கிக்கொள்வதற்காக நாம் பெரியவர்களிடம் போகிறோம்; புஸ்தகங்களை வாசிக்கிறோம்; நல்லவர்களிடம் உபதேசம் பெறுகிறோம்; மஹாக்ஷேத்திரங்களுக்குப் போகிறோம்; தீர்த்தாடனம் செய்கிறோம். அப்படிச் செய்வதால் மனது கொஞ்சங் கொஞ்சமாக சாந்தி அடைகிறது. முழுவதும் சாந்தி அடைந்தவர்கள் வெட்டினாலும், குத்தினாலும், பூஜித்தாலும், தூஷித்தாலும் ஆனந்தமாக இருக்கிறார்கள். புஸ்தகம் வாசித்தல், குரு தரிசனம் செய்தல் முதலியவற்றால் இந்த சாந்தி ஏற்படுகிறது. எல்லா ஜாதிகளிலும் மஹான்கள் கிளம்புகிறார்கள்; மனதில் சாந்தி அடைகிறார்கள். இந்த சாந்திக்குரிய மார்க்கத்தைத்தான் மதம் என்பது. இதன் பேர் தர்மம் என்று சொல்லுவார்கள். தர்மமானது சிரேயஸுக்கு ஸாதனம். அதுதான் மதம். தர்ம அர்த்த காமமோக்ஷங்களுக்கு ஸாதனமாக இருப்பது மதம். இந்த நான்கையும் புருஷார்த்தங்கள் என்று சொல்லுவார்கள்.

அர்த்தம் என்றால் என்ன? பணம் மட்டும் அல்ல. நெல் வீடு முதலிய எல்லாம் அர்த்தந்தான். இதைத் தமிழில் பொருள் என்று சொல்லுவார்கள். காமம், மோக்ஷம் என்பவைகளை இன்பம், வீடு என்பார்கள். இந்த இரண்டுந்தான் வாஸ்தவமான புருஷார்த்தம். புருஷார்த்தம் என்பது என்ன? அதில் அர்த்தம் என்னும் ஒரு வார்த்தை இருக்கிறது. முன்பு சொன்ன நான்கில் ஓர் அர்த்தம் இருக்கிறது. இவ்விரண்டும் என்ன? அர்த்தித்தல் என்றால் வேண்டுமென்று நினைத்தல். புருஷன், அதாவது இங்கே பிராணிகளாகப் பிறந்தவர்கள், வேண்டுமென்று எவைகளை நினைக்கிறார்களோ அவைகள்தாம் புருஷார்த்தங்கள். எதை மனிதன் வேண்டுமென்று நினைக்கிறான்? குறைவில்லாமல் ஸந்தோஷமாக இருக்கவேண்டுமென்று அவன் நினைக்கிறான். அந்த ஸந்தோஷம் இரண்டுவிதம். கொஞ்ச நாழிகை இருப்பது ஒரு விதம்; எப்பொழுதும் குறையாமலிருப்பது மற்றொரு வகை. கொஞ்ச நாழிகை ஸந்தோஷம் உண்டாவது, பின்பு குறைவது, அப்புறம் மறுபடியும் வருவது, இப்படித் திரும்பத்திரும்ப அழிந்தும் குறைந்தும் வருவது

தான் இன்பம், அல்லது காமம். வந்துவிட்டால் எந்தக் காலத்திலும் போகாதது மோக்ஷம். எதைக்காட்டிலும் பெரிய ஸந்தோஷம் இல்லையோ அதுதான் வீடு. அந்தப் பேரின்பத்தின் பெருமை தெரியாததால் இன்பந்தான் வேண்டுமென்று மனிதர்கள் நினைக்கிறார்கள். அது தெரிந்தால் இதை நினைக்கவே மாட்டார்கள்.

ஆகவே, நாம் வேண்டுமென்று நினைக்க வேண்டியது நான்காவதாகிய வீடு. இப்பொழுது வேண்டுமென்பதோ மூன்றாவதாகிய இன்பம். இன்பத்தை அடைவதற்கு ஸாதனமாக வேண்டுமென்று நினைப்பது பொருள். காமத்துக்கு ஸாதனமாக வேண்டுவது அர்த்தம். நாம் சாப்பிடுவதனால் ஆனந்தம் உண்டாகிறது; அது இன்பம். ஸங்கீதம் கேட்பதால் ஒரு ஸந்தோஷம் உண்டாகிறது; அது இன்பம். ஹைகோர்ட்டு ஜட்ஜாக இருந்தால் நிரம்ப ஸந்தோஷப்படுகிறோம். அதுவும் ஒருவகை இன்பம். நல்வரவு பத்திரம் வாசித்துக்கொடுத்தால் ஓர் ஆனந்தம்; அதுவும் இன்பந்தான். இப்படி லௌகிக ஸந்தோஷங்களைக் கொடுப்பதெல்லாம் இன்பம். இந்த இன்பம் கொஞ்ச நாழிகை இருக்கும். இந்தச் சில்லறை இன்பத்தை எதனால் ஸம்பாதிக்கிறோமோ அது பொருள். அது தானியமாக இருக்கலாம், பணமாக இருக்கலாம், வீடாகலாம், மனிதர்களாகலாம். பொருள் இன்பத்துக்குக் காரணம். அந்த இன்பம் துக்கத்தை நிறையத்தந்து, பளிச்சுப்பளிச்சென்று நடுவில் நடுவில் கொஞ்சம் ஸுகத்தைத் தருவது.

இதற்குமேல் ஒன்று வேண்டும் என்று இல்லாதது மோக்ஷம். அதுதான் வீடு. நாம் ஊரெல்லாம் சுற்றுகிறோம்; அலைந்து கஷ்டப்படுகிறோம். நாம் வந்து அடையவேண்டியது சொந்த வீடு. ஜயிலில் ஒருவன் இருக்கிறான். அதிலிருந்து விடுபட்டால் வீட்டுக்குப் போகிறான். வீடு என்பதற்கே விடுதலை என்பது அர்த்தம். விடுதலையான இடம் வீடு. அது போல நம்முடைய சொந்த இடம் மோக்ஷம். இப்பொழுது ஜயிலில் இருக்கிறோம். மாம்ஸமாகிற ஜயிலுக்குள் இருக்கிறோம். இந்த மாம்ஸம்—அதாவது இந்த உடம்பு—அழகாக

இருந்தால் நாம் அழகுள்ளவர்களென்று ஸந்தோஷப்படுகிறோம். இளைத்துப்போனால், "ஐயோ இளைத்துப்போய் விட்டோமே!" என்று வருத்தப்படுகிறோம். இந்த உடம்பில்தான் நாம் இருக்கிறதாக எண்ணி இருக்கிறோம். நாம் நம்முடைய சொந்த இடத்தில் இருக்கவேண்டும், அதாவது வீட்டில் இருக்கவேண்டும். அந்த வீடுதான் எல்லையற்ற இன்பம். மற்ற இன்பங்களெல்லாம் எல்லைக்குள் அகப்பட்டவை. கால தேச மாறுபாடுகளால் பாதிக்கப்படுபவன. ஒரு காலத்தில் இன்பமாக இருப்பது மற்றொரு காலத்தில் துன்பமாக இருக்கிறது. கோடை காலத்தில் காற்று ஸுகமாக இருக்கிறது. அதே காற்று குளிர் காலத்தில் கஷ்டமாக இருக்கிறது. இப்படியே ஒரு தேசத்தில் இன்பமாக இருப்பது மற்றொரு தேசத்தில் துன்பமாக இருக்கிறது. வஸ்துக்களிலும் இப்படியே பிரிவுபட்டிருக்கிறது இந்த இன்பம். காலம், தேசம், வஸ்து இந்த மூன்றிலும் குறையாமல் நிறைந்து இருப்பது பேரின்பம். சிற்றின்பம் கொஞ்சம் சந்தோஷம் கொடுத்துப் பின்பு துக்கத்தைத் தரும்.

இன்பத்துக்குப் பொருள் ஸாதனமாக இருப்பதுபோல், பொருளுக்குத் தர்மம் ஸாதனமாக இருக்கிறது. முன் ஜன்மத்தில் நாம் அர்த்தத்தை மற்றவர்களுக்குக் கொடுத்து வைத்தால் அது மறு ஜன்மத்தில் நமக்குக் கிடைக்கும். தர்மத்தினுடைய பிரயோஜனமே பொருள்.

தர்மம் என்பது நல்லது கிடைக்கவேண்டிச் செய்யப்படுவது. எந்தக் காரியம் செய்தால் நல்லதோ அது தர்மம். என்ன மாதிரி கொடுத்தால் நாம் பின்னால் ஸௌக்கியமாக இருக்கலாமோ அது தர்மம்.

தர்மம் அர்த்தத்துக்கு ஸாதனம்; அர்த்தம் இன்பத்துக்கு ஸாதனம். ஆகவே தர்மமானது அர்த்தத்தின் மூலமாக இன்பத்திற்கு ஸாதனமாக இருக்கிறது.

நாம் செய்யும் தர்மத்தை, 'இந்த அர்த்தம் வேண்டாம் ஈச்வரன் நினைத்ததைக் கொடுக்கட்டும்' என்று அவனுக்கு

அர்ப்பணம் செய்துவிட்டால் நம்மிடத்திலுள்ள அழுக்குப் போய் பேரின்பம் கிடைக்கும். அந்தத் தர்மமே அப்பொழுது வீட்டிற்கு ஸாதனமாய் விடும். நிஷ்காம்யமாகத் தர்மம் செய்து வந்தால் அது மோக்ஷத்தைக் கொடுக்கும். சித்தவ்ருத்தி யடங்கும். அப்படி இல்லாமல் காம்யமாக அர்த்தத்தை அபேக்ஷித்துச் செய்தால் இந்த ஜன்மத்துக்கு மட்டும் உபயோகப் படும். இப்படி தர்மமானது பொருளுக்கு ஸாதனமாகவும் அதன் மூலம் இன்பத்துக்கு ஸாதனமாகவும் நிஷ்காம்யமாகச் செய்யப் பட்டால் வீட்டிற்கு ஸாதனமாகவும் ஆகின்றது. அர்த்தம் தர்மம் செய்ய ஹேதுவாக இருக்கின்றது. இன்பத்தைப் பெறு வதற்கு ஸாதனமாக இருக்கிறது. நிஷ்காம்ய தர்மம் செய்வதின் மூலமாக மோக்ஷத்திற்கு ஸாதனமாகிறது. இன்பம் ஒன்றுக் கும் ஸாதனமில்லை. அது மணலில் போட்ட ஜலம்போல் இருக்கிறது. ஸங்கீதம், ஸாஹித்யம் என்னும் இரண்டுக்கும் உள்ள வித்யாஸத்தைச் சொல்லும் ஒரு ச்லோகம் இருக்கிறது.

**कर्णं गतं शुष्यति कर्ण एव सङ्गीतकं सैकतवारिरीत्या ।**
**आनन्दयत्यन्तरनुप्रविश्य सूक्तिः कवेरेव सुधा सगन्धा ॥**

-சிவலீலார்ணவம்

இந்தச் சுலோகத்தில் ஸாஹித்தியம் உயர்ந்தது என்பதைச் சொல்லுகிறார். மருந்தின் மேலே வெல்லம் தடவிக் கொடுப் பதுபோல, ஸாஹித்தியத்தை எல்லோரும் கேட்பதற்காக ஸங்கி தம் உபயோகப்படுகிறது.

கவியினுடைய நல்ல வார்த்தைகள் அம்ருதத்தைப் போன் றவை. அம்ருதம சாகாது. கவியின் பாவத்தை ஹ்ருதயத்தில் வாங்கினால், அது சாகாது. உள்ளுக்குள்ளே இருந்து நினைக்க நினைக்க இன்பத்தைத் தரும். ஸங்கீதமோ கேட்ட அப் பொழுதுதான் இன்பத்தைத் தரும். அப்புறம் பாட்டுக்கச்சேரி எங்கே நடக்கிறது, டிராமா எங்கே நடக்கிறது என்று தேடிக் கொண்டு போகச் சொல்லுகிறது. அது கேட்டபொழுதே செத்துப்போகின்றது; திருப்பித்திருப்பிக் கேட்க வேண்டியிருக் கிறது. ஸாஹித்தியத்தினுடைய பாவமோ மனதில் இருந்து கொண்டே மேலும் மேலும் இன்பத்தைக் கொடுத்துக் கொண்டேயிருக்கிறது.

ஸங்கீதம் காதிலே கேட்டால் காதிலே வற்றிப்போகிறது. காய்ந்த மணலில் தீர்த்தத்தை விட்டால் விழுந்ததைப் பார்ப்பதற்குள் சுவறிவிடும்; அதுபோல, ஸங்கீதம் கேட்டமாத்திரத்திலே காதுக்குள்ளே வற்றிவிடும்.

இன்பம் அதைப் போன்றதுதான். அப்படி அப்படியே சுவறிவிடும்.

தர்மம் பின்பு க்ஷேமமாக இருக்கவேண்டி அநுஷ்டிப்பது. பின்பு இது வேண்டும் என்ற ஆசையில்லாவிட்டால் அது மோக்ஷத்தைத் தரும். அதுதான் தர்மம். அதுதான் மதம். அது எது என்று தெரிந்துகொள்ளவேண்டுமானால் ஒரு புஸ்தகத்தைப் பார்க்கவேண்டும். அப்படிப்பட்ட புஸ்தகத்தைத் தர்மப்பிரமாணம் என்று சொல்லுவார்கள். பிரமாணம் என்பது ஸாக்ஷியம். இதுதான் தர்மம் என்று ஸத்தியமாகத் தெரிவிக்கிறதுதான் தர்மப் பிரமாணங்கள்.

வேறே உள்ள மதப்புஸ்தகங்கள் எல்லாம் மனிதன் அடையவேண்டியது பரலோகமென்று சொல்லுகிறது. மோக்ஷத்தைப் பரலோகமென்றே சொல்லுகின்றன. ஆனால் நம்முடைய புஸ்தகங்களில் பரலோகம் என்று வேறு இல்லை. இங்கேயே மோக்ஷத்தை அடையலாம். இங்கேயே அடையப்படுவது அது என்று சொல்லப்படுகிறது. அந்தத் தர்மத்தைச் சொல்லும் புஸ்தகங்கள் எவை? அவை இன்னவென்பது நமது சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

अङ्गानि वेदाश्चत्वारो मीमांसा न्यायविस्तरः ।
पुराणं धर्मशास्त्रं च विद्या ह्येताश्चतुर्दश ॥

(மனுஸ்ம்ருதி)

पुराणन्यायमीमांसाधर्मशास्त्राङ्गमिश्रिताः ।
वेदाः स्थानानि विद्यानां धर्मस्य च चतुर्दश ॥

(யாக்ஞவல்க்யஸ்ம்ருதி)

அந்தப் பிரமாணக் கிரந்தங்கள் பதினான்கு. அறிவு ज्ञानं இந்த பதினான்குக்குள் அடங்கியிருக்கிறது. அதனால் இவைகளுக்கு வித்தியாஸ்தானங்கள் என்று பெயர். அறிவிற்கு இடம் என்பது அதன் அர்த்தம்.

**அந்த பதினுன்காவன:—** ஆறு அங்கங்கள், நான்கு வேதங்கள், மீமாம்ஸை, ந்யாயம், புராணம், தர்மசாஸ்த்ரம் என்பவைகள். வேதத்தைப்பற்றியும் ஆறு அங்கங்களைப் பற்றியும் பெரும்பாலும் எல்லோரும் கேட்டிருப்பார்கள்.

"வேதமோ டாறங்க மாயினானை"

என்று தேவாரம் சொல்லுகிறது. இந்தப் பத்தும் ஈச்வர ஸ்வரூபம் என்று அதிற் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தச் சதுர்தச வித்தைகளை நளன் கற்றுக்கொண்டான், என்று நைஷதத்தில் சொல்லி இருக்கிறது. அங்கே சிலேஷையாக அந்த விஷயம் சொல்லப்படுகிறது. நளன் சதுர்தச வித்தைகளுக்குச் சதுர்தசையைக் கொடுத்தான். அதாவது இந்தப் பதினான்கு வித்தைகளுக்கும் தெரிந்துகொள்ளுவதற்காக நான்கு தசைகளைக் கொடுத்தான். நான்கு தசைகளாவன:- படிப்பது, படித்ததைத் தெரிந்துகொள்ளுவது, படித்தபடி நடப்பது, மற்றவர்களை நடக்கச் செய்வது என்பவைகள்.

अधीतिबोधाचरणप्रचारणैर्दशाश्चतस्रः प्रणयन्नुपाधिभिः ।
चतुर्दशत्वं कृतवान् कुतः स्वयं न वेद्मि विद्यासु चतुर्दशस्वपि ॥

(நைஷதகாவ்யம் 1—4)

இந்தப் பதினான்கு வித்தைகளிலே அறிவு அடங்கி இருக்கிறது. இன்னும் நான்கு வித்தைகள் இருக்கின்றன. அவைகளையும் சேர்த்துக்கொண்டால் பதினெட்டாகும். அந்த அஷ்டாதச வித்தைகளில் அடங்காதது ஒன்றுமேயில்லை. லோகத்திலுள்ள ஸகல வித்தைகளும் அவைகளுக்குள்ளே அடங்கிவிடும். நேராகத் தர்மத்தைச் சொல்லுவன முன்பு சொன்ன பதினான்காகும்.

தர்மத்துக்கு ஸ்தானம் இந்தப் பதினான்கு க்ரந்தங்களும். வித்தியாஸ்தானம் என்றும் இவற்றைச் சொல்லுவார்கள். ஆத்ம லோகத்தில் இன்பத்தை அடைவதற்கு ஏற்பட்ட ஸாதனங்கள் இவை.

இந்தப் பதினுன்கிலும் ப்ரதானம் வேதம். அது நான்கு பிரிவுடைத்து; அதற்கு அங்கங்கள் ஆறு; மற்ற நான்கும் உபாங்கங்கள் என்று சொல்வார்கள்.

धर्मज्ञसमयः प्रमाणं वेदाश्च ।

—ஆபஸ்தம்பதர்மஸூத்ரம்

நேரான தர்மப்பிரமாணம் வேதம். ஸாங்கோபாங்கமாக வேதாத்தியயனம் செய்ததாகச் சொல்லும் வழக்கம் இருக்கிறதல்லவா? அங்கங்களோடும் உபாங்கங்களோடும் வேதங்களைத் தெரிந்து கொண்டான் என்பது அதன் அர்த்தம்; அதாவது, இந்தப் பதினுன்கையும் தெரிந்துகொண்டான் என்று அர்த்தம்.

**ஆறு அங்கங்கள்:—** சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பவைகள்.

**சிக்ஷை**

சிக்ஷை என்பது வேதப்பிரதம அங்கம். சீக்ஷா என்று சொல்லுவார்கள். அது பல மகரிஷிகளால் செய்யப்பட்டிருக்கிறது. பாணினி என்பவர் ஒன்று பண்ணியிருக்கிருர். அது விசேஷமாகப் பிரசாரத்தில் இருந்து வருகிறது. பாணினீயம் என்னும் வ்யாகரணம் பண்ணினவரும் அவரே. வேதத்தின் சிக்ஷையை வேதமே சொல்லியிருக்கிறது.

अथ शीक्षां व्याख्यास्यामः । वर्णः स्वरः । मात्रा बलं । साम सन्तानः ।

—தைத்திரீயோபநிஷத்

வேதம் முழுவதும் மந்த்ரங்கள். மந்த்ரங்களில் எழுத்துக்கும் அதன் ஸ்வரத்துக்கும் அதிக யோக்கியதை உண்டு. அர்த்தத்தைவிட எழுத்துத்தான் விசேஷம். தேள் கொட்டு மந்த்ரம் இருக்கிறது. அதற்கு அர்த்தம் சொல்லக்கூடாது. அதில் அந்த எழுத்துக்குத்தான் யோக்கியதை உண்டு. சிலவகையான சப்தங்களுக்குச் சில சக்தி உண்டு. ச்ராத்த மந்த்ரங்களை

ஸம்ஸ்க்ருதத்திலே ஏன் சொல்லவேண்டும்? இங்கிலீஷிலாவது தமிழிலாவது சொன்னால் என்ன? அப்பொழுது சப்தம் வேறாய் விடுகிறது. அந்தச் சப்தந்தான் ப்ரதானம். பில்லி சூனியம் வைக்கிறவர்களுடைய பல்லைக் கட்டிவிட்டால் அவர்கள் செய்கிறது பலிக்காது. ஏனென்றால் பல் போனபின்பு உச்சாரணத்தில் தப்பு ஏற்படும். உச்சாரணம் இல்லாவிட்டால் அது பலிக்காது. உச்சாரணம் வேதத்துக்குப் பிரதானம். அது ஸரியாக இருக்க என்ன செய்வது? அதன் லக்ஷணத்தைச் சொல்லுவதுதான் சிக்ஷை என்பது.

ஒரே விதமான மந்த்ரங்களை ஒவ்வொரு தேசத்தார் ஒவ்வொரு விதமாக உச்சரிக்கிறார்கள். வங்காளத்தில் ஒரு விதம்; மஹாராஷ்டிரத்தில் ஒரு விதம்; அப்புறம் தெலுங்கு தேசத்தில் ஒரு விதம்; தமிழ் தேசத்தில் ஒரு விதம். இப்படி இருந்தால் யாருடையது ஸரி என்று சண்டை உண்டாகும் அல்லவா?

உத்திர தேசத்தில் பகாரத்துக்கு வகாரமும, யகாரத்துக்கு ஜகாரமும் உபயோகப்படுத்துகிறார்கள். வங்கவாஸி என்பதை **व** ங்க **वा** ஸி (பங்கபாஸி) என்று சொல்லுவார்கள். இப்படிச் சொல்லுவது பிழை என்பதை அவர்களே அறிந்து கொண்டார்கள். வங்காள தேசத்தில் இந்தத் தப்பைத் திருத்த ஒரு பரிஷத் ஏற்படுத்தினார்கள். வங்க பரிஷத் என்பது அதன் பெயர். இனிமேல் பதிப்பிக்கும் புஸ்தகங்களிலெல்லாம் பகாரம் உள்ள இடங்களிலெல்லாம் வகாரமாகத் திருத்தவேண்டுமென்று நினைத்து அப்படியே செய்து வந்தார்கள். அப்படிச் செய்ததில் ஸ்வபாவமாக பகாரம் இருக்கவேண்டிய இடத்திலும் வகாரமாக மாற்றிவிட்டார்கள். 'பந்து' என்பதைக்கூட 'வந்து' என்று திருத்திவிட்டார்கள்.

அவர்கள் வகாரத்தை பகாரமாக மாற்றி உச்சரிப்பதற்குக் காரணம் என்ன? பிராதிசாக்கியத்தில் இப்படிச் சொல்லவேண்டுமென்று இருக்கிறது. அந்த விதியை எல்லாவற்றிற்கும் உபயோகப்படுத்திக்கொண்டார்கள். இதனால் ஏற்படுவது என்னவென்றால் வேதத்தில் பிழை இல்லாமல் சொல்லவேண்டுமென்ற எண்

ணம் எங்கும் இருந்தது என்று தோன்றுகிறது. வேதத்தில் சொன்ன விதிகள் இந்தத் தேசம் முழுவதும் ஒருகாலத்தில் சிரத்தையாக அனுஷ்டிக்கப்பட்டு வந்தது என்று தெரிகிறது.

சிக்ஷா என்பது எழுத்துக்களின் உச்சாரணம், மாத்திரை முதலியவற்றை வரையறுப்பது. பலம், ஸமம், ஸந்தானம் முதலியவற்றைச் சொல்லும். எழுத்துக்களின் உற்பத்தியைப் பற்றிச்சொல்லும். இன்ன இன்ன எழுத்துக்கள் இன்ன இன்ன இடத்தில் பிறப்பவை; இன்ன இன்ன முயற்சியால் உண்டாகின்றவையென்று சொல்லப்பட்டிருக்கிறது. உதடுகளைச் சேர்த்தால் இன்ன எழுத்து உண்டாகின்றது என்பது போன்ற பல விஷயங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றால் உச்சாரணம் இதுதான் என்று நிச்சயமாகிறது. ஒருவர் கிரோஷ்ட ராமாயணம் என்று ஒன்று செய்திருக்கிறார். எச்சப்படாமற் பாராயணம் பண்ணுவதற்கு உபயோகப்படுமென்று நினைத்தார் போலிருக்கிறது.

**मन्त्रो हीनः स्वरतो वर्णतो वा मिथ्याप्रयुक्तो न तमर्थमाह ।**
**स वाग्वज्रो यजमानं हिनस्ति यथेन्द्रशत्रुः स्वरतोऽपराधात् ॥**

எழுத்துக்களின் ஸ்வரம் தவறினால் விபரீதமான பலன் உண்டாகும். த்வஷ்டா என்று ஒருவர் வ்ருத்திரனை உண்டுபண்ணுவதற்காக ஹோமம் பண்ணினார். ஒரு ஸ்வரம் தவறிப்போய்விட்டது. அதனால் அவருக்குத் துன்பம் உண்டாயிற்று. நாம் ஸந்த்யாவந்தனத்தை ஸ்வரம் தப்பிச்செய்கிறோம். அதற்குத் தக்கபடிதான் பலனும் இருக்கிறது.

இன்ன எழுத்துக்கு இன்ன ஸ்வரமென்பது வேதத்தின் ப்ரதமாங்கமாகிய சிக்ஷையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்கிருதத்தில் 51 அக்ஷரங்கள் இருக்கின்றன. மாத்ருகா என்று அவற்றிற்குப் பெயர். இந்த அக்ஷரங்கள் அம்பாள் ஸ்வரூபம். இன்ன இன்ன அங்கம் இன்ன இன்ன அக்ஷரம் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆத்ம க்ஷேமத்துக்கு உபயோகமாகின்றவைகள் இந்த ஐம்பத்தொரு அக்ஷரங்கள்தாம். லோகத்தில்

பலவிதமான சப்தங்கள் இருந்தாலும் ச்ரேயஸுக்கு ஸாதனமாக உள்ள அக்ஷரங்களைப் பொறுக்கிச் சேர்த்து வேதமாக்கி வைத்திருக்கிறார்கள்.

சிக்ஷை வேதபுருஷனுக்கு நாஸிகையாகும். அதாவது ப்ராணஸ்தானம். இப்படியே ஒவ்வோரங்கமும் வேத புருஷனுக்கு ஒவ்வோரங்கமாகும்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 2,500, 29—12—1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

கும்பகோணம்.

---

ப்ரசுரம் 33.

[விலை அணா ஒன்று.]

# தனுர்மாதம் - மஹாவ்யதீபாதம்

மார்கழி மாதம் அம்பிகையை பூஜை செய்ய வேண்டிய மாதம். ஸ்ரீமத் பாகவதத்தில் தசம ஸ்கந்தத்தில் கோகுல ப்ருந்தாவன கன்னிகைகள் எல்லோரும் ஹேமந்த ருதுவின் முதல் மாதமான இம்மாதத்தில் குளிரில் விடியுமுன் நீராடி காத்யாயனி தேவியை பூஜித்து தங்களுக்கு உத்தமமான பதி கிடைக்க வேண்டுமென்று பிரார்த்தித்து சுத்தமான பொங்கல் நைவேத்யம் செய்து அதையே உண்டு வ்ருத நிஷ்டர்களாக இருந்தார்கள். ஸ்ரீவில்லிப்புத்தூரில் அவதரித்த ஆண்டாளும் "மார்கழித்திங்கள் மதி நிறைந்த நன்னாளில்" என ஆரம்பித்து "சிற்றஞ்சிறு காலே வந்துன்னை சேவித்து" என கண்ணனை இம்முப்பது நாளும் சிறு காலையில் சேவிக்க தோழிமார்களை எல்லாம் எழுப்பிக்கொண்டு வைகறை குளிரில் நீராடி வழிபடும் பாசுரங்களே திருப்பாவை எனப் பெயர் சூட்டப்பட்டு இன்றும் இம்மாதத்தில் விஷ்ணு ஆலய வழிபாடுகளில் த்வனிக்கப்படு கின்றன. "மார்கழி மாதம் திருவாதிரைநாள் வரப்போகுது ஐயே" எனும் நந்தனார் வாக்கு த்வனிக்காத காது தமிழ்நாட்டில் அரிது. மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும் திருப்பள்ளி யெழுச்சியும் இம்மாதம் சிவாலயம் செல்லுவோர்க்கு புத்துணர்ச் சியைத் தருகின்றது. இம்மாதம் சிவபெருமான் தேவி திருமால் என மூன்று ஜோதிகளாய்ப் பிரிந்த பரம்பொருளை அதிகாலையில் பயறுடன்கூடிய ஹவிசைக்கொண்டு வழிபட்டு சித்தசுத்தியை அடைய உரியமாதம். இன்றும் சேரமான் பெருமானின் மலை நாட்டில் சிறு பெண்கள் காலை மூன்றுமணிக்கு எழுந்து கையில் குருத்துக்களை ஏந்தி கூட்டங் கூட்டமாக குளிர் நடுங்க ஆறு குளங்களை அடைந்து கண்ணன் திருவவதாரப் பாடல்களை உயர்ந்த குரல்களில் சேர்ந்து பாடி நீராடி ஈர வஸ்த்ரத்துடன்

நாவில் பரம்பொருளின் புகழ்களுடன் விடியுமுன் வீடு திருப்புவதைக் காணலாம்.

**மார்கழி மாதம்:—** ம்ருகசீருஷம் என்று ஒரு நக்ஷத்திரம் இருக்கிறது. இதற்கு அடுத்த நக்ஷத்திரத்திற்கு ஆர்த்ரா என்று பெயர். ஆர்த்ரா என்றால் நனைந்தது என்று பொருள். இந்த நக்ஷத்திரத்தையே தமிழில் திருவாதிரை என்கிறோம். இந்த மிருகசீருஷத்திற்கும் திருவாதிரைக்கும் இடையில் பூர்ணிமைச் சந்திரன் இம்மாதத்திலேயே வருகிறான். ஆதலால் தான் இம்மாதத்திற்கு மார்கசீர்ஷ என்று பெயர். இத்திங்களை மார்கசீர்ஷி அல்லது சுருக்கி மார்கழி என்று வழங்குகிறோம். இம்மாதம் முழுவதுமே பனியினால் உலகம் நிறைந்திருக்கிறது. இம்மாதத்தில் திருவாதிரையன்று பூர்ண சந்திரனும் சேரும் போது பனியுடன் கூடிய மதியின் கிரணங்களாலும் உலகம் குளிர்கிறது. வெனிற் காலத்தில் காய்ந்த உலகம் தாபத்தை யெல்லாம் போக்கிக்கொள்ளுகிறது. இவ்வியக்கையைப்போல் பாபத்தினால் தாபமடைந்த உள்ளங்களெல்லாம் ஈசனை இம்மாதத்தில் குளிரக் குளிர அபிஷேகம் செய்து அவ்வபிஷேகத்துடன் கூடிய சிவலிங்கத்தை உள் நிறுத்தி உள்ளிருக்கும் பாபமாம் தாபங்களை போக்கிக் கொள்ளுகின்றன. மார்கழி மாதத்திற்கு ஆக்ரஹாயணிகம் என்று ஒரு பெயர் நிகண்டுவில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்பெயரைக்கொண்டு பார்த்தால் வருஷத்தின் முதல் மாதம் அதுவே என்று ஏற்படுகிறது. ஹாயனம் என்றால் வருடத்திற்குப் பெயர். அக்ரம் என்றால் முதல் எனப் பொருள்படுகிறது. மேனாட்டாருடைய முதல் மாதமாகிய ஜனவரி மாதம் இம்மார்கழி மாதத்திலேயே பிறக்கிறதல்லவா? அவர்கள் முறைக்கும் நமது பழைய நிகண்டுவே மூலம். தேவ லோகத்திற்கு நமது ஒரு வருஷம் ஒரு நாளாகிறது. இதுவே தேவமானம் எனப்படும். தேவர்களுக்கு உத்தராயணம் ஆறுமாதமும் பகல். தக்ஷிணாயனம் ராத்திரி. நம்முடைய பூமியில்கூட வடக்கு த்ருவஸ்தானத்தில் இதே நிலைமைதான் என்று ப்ரத்யக்ஷமாய் அறியலாம். வடக்கு த்ருவமே மேரு சிகரம் என்று நம் ஜோதிஷ சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மேரு சிகரத்திற்கு நேராகவே சுவர்க்க லோகம் அமைந்திருப்பதாக புராணங்களின் அபிப்ராயம். ஒவ்வொரு அண்டத்திற்கும் இதுபோலவே. ஆதலால் தேவர்களுக்கும் ஆறுமாதம் பகல் ஆறுமாதம் இரவு. தை மாதத்தில் உத்தராயணம் ஆரம்பம். தை மாதத்தில் அவர்களுக்கு சூர்ய உதயம். மார்கழிமாதம் அவர்களுக்கு வைகறை அதாவது உஷ: காலமாகிறது. அவர்களுடைய உஷ: காலமும் மானிடர்

களான நம்முடைய உஷ: காலமும் இரண்டும் சேருவது மார்கழி மாதத்தின் ஒவ்வொரு நாளும் சூரிய உதயத்திற்கு முன்னதான உஷ: காலம்.

ஒருவன் தனியாக பஜனை செய்கிறான். அவனே மற்றொரு சமயம் நூறு பக்தர்களுடன் கூடிய பஜனை செய்கிறான். தனியாக பஜனை செய்வதைவிட நூறு பக்தர்களுடன் சேரும் காலத்தில் நம்மை அறியாமலேயே நாம் பக்தியில் இழுக்கப்படுகிறோம். விடியற்காலம் எல்லோரும் பகவானை ஸேவிக்கும் காலம். பெரியோர்களெல்லாம் துயில் விட்டெழும்போதே பகவத்ஸ்மரணையுடன் எழுந்திருப்பார்கள். மானிடரை விட கோடி மடங்கு மஹிமை வாய்ந்த வானவரும் அவர்களுடைய வைகறையில் பரம்பொருளை வழிபடும்பொழுது நாமும் நமது வைகறையில் அவ்வழிபாட்டில் சேர்ந்து அநுகூலமான காற்றுள்ளபோது படகோட்டி படகைச் செலுத்தி கரையை அடைவதுபோல் நாமும் பகவானுடைய அருளை சுலபமாக அடைய முடியும். இதனாலேயே கண்ணன் கீதையில்

“மாஸானாம் மார்கசீர்ஷோஹம்” என்றார்.

மார்கழி மாதத்திலும் அதிக விசேஷமான புனித நாள்கள் திருவாதிரையும், மஹாவ்யதீபாதமும். திருவாதிரையைப்பற்றி எல்லோரும் அதிகமாய்க் கேட்டிருக்கிறோம். மஹாவ்யதீபாதத்தைப்பற்றி அவ்வளவு கேள்விப்பட்டதில்லை. ஆனாலும் மஹாவ்யதீபாதம் புராணங்களிலும் ஆகமங்களிலும் மிக்க புனிதமான நன்னாளாகக் கூறப்பட்டிருக்கிறது. (ஆயினும் சிவாலயங்களில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் அன்று நடத்தப்படுகின்றன. இப்பொழுதும் வாக்கிம கிராமங்களில் அன்றைய தினம் பிராமண போஜனம் விசேஷமாக நடக்கிறது.)

**வ்யதீபாதம்:—** திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் என்னும் இவ்வைந்து அங்கங்களும் சேர்ந்து பஞ்சாங்க நூல் ஏற்படுகிறது. இவைகளில் திதியாவது:- ஒவ்வொரு நாளும் சந்திரன் ஆகாச வீதியில் செல்லும் தூரத்தினின்று சூரியன் செல்லும் தூரத்தைக் கழித்துவந்த மிகுதியே திதி எனப்படுகிறது. ஒவ்வொரு நாளும் சூரியன் செல்லும் கதியுடன் சந்திரன் செல்லும் கதியைக் கூட்டி வந்த தொகையே யோகமெனப்படுகிறது. யோகம் என்ற பதத்திற்கு கூட்டுத்தொகை என்று பொருள். இவ்விதமான யோகங்கள் நக்ஷத்திரங்களைப்போல் 27.

**நக்ஷத்திரம்:—** பூமியிலிருந்து பார்ப்பவர்களால் எந்த தினத்தில் எந்த நக்ஷத்திரத்திற்கு சமீபமாக இருப்பதாக சந்திரன் பார்க்கப்படுகிறதோ அந்த தினத்தில் அந்த நக்ஷத்திரம் சொல்லப்படுகிறது.

**கரணம்:—** ஒவ்வொரு திதியை இரண்டாகப் பிரித்து ஒவ்வொரு பகுதியும் ஒரு கரணம் எனப்படுகிறது.

**வாரம்:—** நவக்கிரஹங்களில் ராகுவையும் கேதுவையும் தவிர மற்ற ஏழு கிரஹங்களுக்கும் பிரதிதினம் ஆக்ஷி முகூர்த்தங்கள் மாறி மாறி வருகின்றன. அப்படி வருவதில் எந்த தினத்தில் சூரியோதய காலத்தில் யாருடைய ஆட்சி வருகிறதோ அந்த கிரஹத்தின் பெயர் அந்த வாரத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த நியாயப்பிரகாரம் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்று கிழமைகள் ஏற்பட்டிருக்கின்றன. பூலோகத்தில் எல்லாத் தேசங்களிலும் எல்லா பாஷைகளிலும் இந்தக் கிரமத்தை அனுசரித்தே வாரங்களின் பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த கிரமத்திற்குக் காரணம் இதர நாடுகளில் தெளிவாக இல்லை. நமது நாட்டு ஜோதிஷ சாஸ்த்ரத்தில் இக்கிரமத்திற்கு மேற்சொன்ன படி காரணம் கூறப்பட்டிருக்கிறது. **உலகத்திலுள்ள மனித வர்க்கங்களின் நாகரீகங்கள் எல்லாம் ஒரே மூலத்தினின்று வளர்ந்தவை என்பதற்கு இவ்வாரங்களின் கிரமம் எங்கும் ஒரே முறையாக இருப்பது ஒரு பெரிய சான்று ஆகும்.**

நக்ஷத்திரங்கள் ஒவ்வொன்றிற்கும் ஆட்சி புரியும் வானவரை வேதம் குறித்துள்ளது, (காண்டம் 4. பிரச்னம் 4. அனுவாகம் 10). அதில் திருவாதிரை நக்ஷத்திரத்திற்கு ருத்ரன் அதாவது சிவன் தேவதை என சொல்லப்பட்டுள்ளது. அவ்விதமே 27 யோகங்களுக்கும் ஆட்சி தெய்வங்கள் அடியில் காட்டியபடி ஜோதிஷ ரத்னகரத்தில் நாரதரால் கூறப்பட்டுள்ளது.

| யோகம் | | அதிதேவதை |
|---|---|---|
| விஷ்கம்பம் | ... | யமன் |
| ப்ரீதி | ... | விஷ்ணு |
| ஆயுஷ்மான் | ... | இந்து (சந்திரன்) |
| சௌபாக்யம் | ... | தாதா |

| யோகம் | | அதிதேவதை |
|---|---|---|
| சோபனம் | ... | ஜீவ (பிரஹஸ்பதி) |
| அதிகண்டம் | ... | நிசாசர (நிருதி) |
| சுகர்மா | ... | இந்திர |
| த்ருதீ | ... | அப்பு |
| சூலம் | ... | அஹி |
| கண்டம் | ... | வன்னி (அக்னி) |
| விருத்தி | ... | அர்க்கன் |
| த்ருவம் | ... | பூமி |
| வ்யாகாதம் | ... | மருத்துக்கள் |
| ஹர்ஷணம் | ... | பவன் (சிவன்) |
| வஜ்ரம் | ... | வருணன் |
| ஸித்தி | ... | கணேசன் |
| வ்யதீபாதம் | ... | ருத்ரன் |
| வரியான் | ... | குபேரன் |
| பரிகம் | ... | த்வஷ்டா |
| சிவம் | ... | மித்ரன் |
| ஸித்தம் | ... | ஷடானனன் |
| ஸாத்யம் | ... | சாவித்ரி |
| சுபம் | ... | கமலா |
| சுப்ரம் | ... | கௌரீ |
| ப்ராம்ஹம் | ... | அச்வனீ தேவதைகள் |
| மாஹேந்திரம் | ... | பித்ருக்கள் |
| வைத்ருதீ | ... | அதிதி |

மேற்கூறிய பிரமாணங்களால் திருவாதிரை நக்ஷத்ரம் வ்யதீபாத யோகம் இவ்விரண்டிற்கும் சாட்சாத் சிவபெருமானே ஆட்சி தெய்வம் என முடிவு ஏற்படுகிறது. வ்யதீபாத யோகம் மாதம் ஒரு முறை வரினும் தேவலோகத்தின் உஷ: காலமான மார்கழி மாத வ்யதீபாதத்திற்கு மஹா வ்யதீபாதமெனப் பெயர் ஏற்பட்டுள்ளது.

சைவபூஷணம் என்ற ஆகம நூலில் இவ் வ்யதீபாத புண்ய காலத்திற்கு ப்ராதஸங்கிரமம் என்ற மற்ற ஒரு பெயரும் சொல்லப்பட்டு அக்காலத்தில் விசேஷமான சிவபூஜை செய்யப் படவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸூத ஸம் ஹிதையில் தீர்த்த மாஹாத்ம்ய கண்டத்தில் ஸௌராஷ்டிர தேசத்தில் உள்ள ஸோமநாத க்ஷேத்திரமும், திருவாரூர் க்ஷேத்திரமும், ராமேச்வர க்ஷேத்திரமும் வ்யதீபாதத்தில் வழி படவேண்டிய ஸ்தானங்களாக கூறப்பட்டுள்ளன. இந்த மஹா

வ்யதீபாத யோகத்திற்கு பொதுவாக யோகராஜா என்ற பெய ரும் உள்ளது.

**திருக்குளம்பியம் அல்லது திருக்கோழம்பம்:—** ஒவ்வொரு சிவஸ்தலத்திலும் பிரம்மோத்ஸவம் பிரதானமாக ஒரு புண்யகாலத்தை ஒட்டி ஏற்பட்டிருக்கிறது. சிதம்பரத்தில் திருவாதிரையிலும், திருவிடைமருதூரில் தை பூசத்திலும் திருக் குடந்தையில் மாசி மகத்திலும், திருவண்ணாமலையில் கார்த்திகை யிலும், மாயூரத்தில் துலா ரவியிலும், திருவாவடுதுறையில் ரத ஸப்தமியிலும் பிரம்மோத்ஸவங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இம் மஹா வ்யதீபாதத்தை ஒட்டி பிரம்மோத்ஸவம் ஏற்பட்ட க்ஷேத்திரம் திருக்கோழம்பம் எனப் பாடல்பெற்ற திருக்குளம் பிய க்ஷேத்திரம். இது கோமுக்தீச்வரம் என்னும் திருவாவடு துறைக்கு ஒரு மைல் தூரத்தில் தெற்கே யுள்ளது. இதற்கு கோகுலேச்வரம் எனப் புராணப் பெயர். குளம் என்ற பதத் திற்கு குளம்பு எனப்பொருள். இந்த க்ஷேத்திரத்தில் மது தீர்த்தம் என ஒரு தீர்த்தம் இருக்கிறது. இந்த க்ஷேத்ர புரா ணத்தின்படி சந்தன் என்னும் ஓர் யக்ஷன் தனது அபசாரத் தால் ஏற்பட்ட ஓர் சாபத்தின் பலனாக குயில் ஜன்மத்தை அடைந்து மார்கழி மஹாவ்யதீபாத புண்ய காலத்தில் வைகறை யில் மது தீர்த்தத்தில் நீராடி அப்பிறவி நீங்கப்பெற்றான்.

**தனுர்மாஸ புராணம்:—** பன்னிரண்டு மாதங்களிலும் வரும் புண்ய காலங்களையும் செய்ய வேண்டிய நற்காரியங்களையும் தெளிவாகச் சொல்லும் மாஸ புராணங்கள் 12 உள்ளன. அவை களில் துலா புராணம், வைசாக மஹாத்மியம், கார்த்திகை மஹாத் மியம் என்ற இம்மூன்று புராணங்களையும் சிலர் கேட்டிருப் பார்கள். இதர புராணங்கள் பிரசாரத்தில் குன்றிப்போயிருக் கின்றன. ஏட்டுப் பிரதிகள் அபூர்வமாக கிடைக்கக்கூடியவை. அவைகளில் தனுர்மாஸ புராணம் ஒன்று. அதில் 5, 6 அத்யா யங்கள் மஹாவ்யதீபாதத்தைப் பற்றி கூறுகின்றன.

இவ்விரு அத்யாயங்களும் கண்ணனுக்கும் ததிபாலன் என் னும் இடையனுக்கும் சம்பாஷணை ரூபமாகவும் மார்க்கண்டேய ருக்கும் தர்மபுத்ரருக்கும் சம்பாஷணை ரூபமாகவும் அமைந் துள்ளன. பகவான் தத்தாத்ரேய யோகியாக அவதரித்தது மஹா வ்யதீபாதத்திலேயே என்று கண்ணன் கூறுகிறார். இந்த மஹா வ்யதீபாதத்தில் திரிமூர்த்தி ஸ்வரூபமான தத்தரை தத்த தத்த என்று ஸ்மரிப்பவர்களுக்கு தத்வஞான முண்டாகுமென்று கண்ணன் கூறுகிறார். இம்மஹா வ்யதீபாத தினத்தில் பகவா

னுக்கு முத்கான்னம் (பயற்றுப் பொங்கல்) நைவேத்யத்துடன் உஷ: காலத்தில் பூஜை செய்யவேண்டியது. பித்ருக்களை உத்தேசித்து தர்ப்பணங்களை செய்யவேண்டியது. (ஷண்ணவதி என்கிற 96 ச்ராத்தங்களில் 13 வ்யதீபாதங்களும் சேர்ந்தவை. அதில் மஹாவ்யதீபாதம் விசேஷம். அநேக கயா ச்ராத்தங்களின் பலனை அளிக்கக்கூடியது). யோக ராஜாவான வ்யதீபாத புருஷனை உத்தேசித்து அர்க்யத்தையும் கொடுக்கவேண்டியது என்றும் கூறுகிறார். அர்க்ய ச்லோக ஆரம்பம் பின் வருமாறு:-

வ்யதீபாத-மஹாபாஹோ—ஸர்வபாப ப்ரணாசன
ஸஹஸ்ரபாஹோ-விச்வாத்மன்-க்ருஹாணார்க்யம் நமோஸ்து தே

தாஸிக்கும் பூஜை செய்து பயற்றுப் பொங்கல் நைவேத்யம் செய்ய வேண்டியது என்றும் கூறுகிறார்.

**மார்க்கண்டேயரால் உபதேசிக்கப்பட்ட வ்ரத அனுஷ்டான முறை:—** இந்த வ்ரதம தனுர்மாத வ்யதீபாத தினத்தன்று ஆரம்பித்து ஒரு வருஷம் அனுஷ்டித்து முடிக்க வேண்டியது. வ்ரதத்தை அனுஷ்டிப்பவர்கள் காலையில் குளம் அல்லது நதிக்குச் சென்று முறைப்படி நீராடி நித்ய கடன்களை முடித்து எள் நிறைந்த வெண்கலப் பாத்திர தானம்செய்து பிறகு பூஜை ஆரம்பிக்க வேண்டும். ஒரு பலமோ அரைப் பலமோ அல்லது கால் பலமோ எடை உள்ள பிரதிமை தயாரித்து காராம் பசுவின் பால் நிறைந்த வெண்கல கும்பத்தின்மேல் பிரதிமையை வைத்து முறைப்படி பக்தியுடன் பூஜிக்கவேண்டியது. சர்க்கரையும் நெய்யும் கூடிய பயற்றுப்பொங்கல் பாயசம் முதலியவைகள் நிவேதனம் செய்து அவரவர்களுடைய ஆபீஷ்டத்தை பிரார்த்திக்கவேண்டியது. பிறகு அர்க்யம் கொடுக்க வேண்டியது. 108 முறை எள்ளினால் ஹோமம் செய்ய வேண்டியது. பிராமண போஜனம் செய்துவைக்க வேண்டியது. குருவிற்கு பிரதிமை தானம் செய்யவேண்டியது. வ்யதீபாத தினத்தில் செய்யப்பட்ட தானம் அளவற்ற பலனைக் கொடுக்கும். இம்மாதிரி ஒரு வருஷம் அனுஷ்டித்து வரவேண்டியது. வருஷ முடிவில் விரத உத்யாபனம் செய்யவேண்டியது. உத்யாபன தினத்தன்று வ்யதீபாத தேவதையின் பிம்பத்தை சர்க்கரை நிறைந்த கும்பத்தில் வைத்து வீட்டின் மத்தியிலோ பசுமாட்டுக் கொட்டிலிலோ அதை பூஜை செய்யவேண்டியது. பிறகு கோதானம் செய்யவேண்டியது.

விச்வஸகா என்ற பணக்கார வைசியன் ஒருவன் வ்யதீபாத தினத்தில் பசியால் மன்றாடி தன்னை யாசித்த ஓர் அந்தணனை லோபத்தினால் ஒன்றும் கொடுக்காமல் திருப்பி அனுப்பிவிட்ட

தினால் அடுத்த ஜன்மத்தில் பூர்வ ஸ்மரணையோடு கூடிய காட்டுப் பன்றியாகப் பிறந்தான். காட்டுத்தீயில் அகப்பட்டுக் கொண்டு அவனுடைய பாதி உடலும் எரிந்தது. அப்பொழுது அவ்வழியாகச் சென்ற ஹர்யச்வன் என்ற ஓர் அரசன் தான் வ்யதீபாத தினத்தன்று செய்த ஸ்நான பூஜா பலன்களை அப்பன்றிக்குக் கொடுத்து அப்பிறவி நீங்கி திவ்ய சரீரமடையும்படி செய்தான்.

மற்றும் புராணத்தில் வ்யதீபாதத்தின் உற்பத்தியைப்பற்றி ஓர் கதை சொல்லப்பட்டிருக்கிறது. சந்திரன் தாரையை தூக்கிச் செல்லும்பொழுது சூரியன் அதர்மம் செய்யும் அவனைக் கடிந்து நோக்க அவ்விருவருடைய உஷ்ண திருஷ்டிகளும் ஒன்று சேர்ந்தபொழுது புழுக்கத்தினால் புழு உண்டாவதுபோல அக்கோப உஷ்ணத்திலிருந்து ஓர் புருஷன் உண்டானான். அவனுக்கே வ்யதீபாதன் என்று பெயர். இக்கதை சந்திர சூரியர்களுடைய கதியோகத்தால் யோகமேற்படுகிறது என்ற ஜோதிட தத்வத்தை நிரூபிக்கிறது. வ்யதீபாதம் என்ற சொல்லிற்கு குறுக்கே நேரிடுதல் என்ற பொருளும் உண்டு.

இவ்வியதீபாத அனுஷ்டானத்தால் நமது பித்ருக்களுக்கு விசேஷ திருப்தி ஏற்படுவதைத் தவிர, சந்தன் என்ற இடக்கனுக்கு ஏற்பட்டதுபோல அஹம்பாவ தோஷ நிவர்த்தியும் விச்வஸகாவிற்கு ஏற்பட்டதுபோல லோப தோஷ நிவர்த்தியும் கெட்ட நடவடிக்கைகளை கடியும் தூயத்தன்மையும் தத்தாத்ரேயரைப்போல் யோக தத்வ ஞானமும் ஏற்படக்கூடியது.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

Printed at Sarada Vilasa Press, Kumbakonom Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam
Copies, 2,600 31—12—1948.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

(Regd.)

**கும்பகோணம்.**

ப்ரசுரம் 34.

[விலை அணா ஒன்று.]

# உபநயனம்

உத்தராயணம் பிறந்துவிட்டது. மாக மாதம் முதல் ஐந்து மாதங்கள் வஸந்த மாதங்கள். உபநயனம் ஆகாத குழந்தைகளுக்கு எல்லாம் உபநயனம் செய்துவிடுங்கள். ஒவ்வொரு ஊரிலும் நாலுபேர் ஆஸ்திகர்கள் சேர்ந்து அவ்வூரில் ஏழு வயதுக்கு மேற்பட்டவர்கள் உபநயனம் ஆகாமல் இன்னும் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் என்று கணக்கு எடுக்கவேண்டும். கணக்கு எடுத்து அவர்கள் எல்லோருக்கும் இவ்வருஷத்தில் பாக்கி இல்லாமல் உபநயனம் ஆகும்படி செய்துவிடவேண்டும். அதற்கு என்ன என்ன வழியோ அவைகளை அங்கங்கு, அந்தந்த ஆஸ்திகர்களோடு ஆலோசித்து எப்படியாவது கார்யத்தைப் பூர்த்தி செய்யவேண்டும் அடுத்த வருஷம் ஏழு வயதிற்கு மேற்பட்ட குழந்தைகள் உபநயனம் ஆகாமல் இருக்கக்கூடாது. ஹ்ருதயத்தில் காமம் ப்ரவேசிப்பதற்கு முன்னாலேயே காயத்ரி தேவி ப்ரவேசித்தால்தான் அந்த சரீரத்தில் ப்ரும்ம தேஜஸ் விளங்கும். ப்ரும்மதேஜஸ் இருந்தால்தான் உலகத்தில் உள்ள எல்லா மக்களுக்கும் உண்மையான உபகாரம் செய்யமுடியும். ஆகையால் அடுத்த வருஷத்தில் ஏழுவயதுக்கு மேற்பட்ட

எந்தப் பையனும் உபநயனம் ஆகாமல் இராமல் இவ்வருஷமே ஜாக்கிரதையாக பார்த்துக்கொள்வது முதற்கடமை ஆகும். அவ்விதம் ஏற்பாடு செய்வ தில் தனித்தனியான உபநயனங்களோ அல்லது கூட்டம் கூட்டமான தர்மோபநயனங்களோ நடப் பதற்கு நாலுநாள் முன்னதாகவே ஒரு தர்மக்ஞ வித்வானையோ அல்லது கிருஹ்யக்ஞ வித்வானையோ வரவழைத்து உபநயன மந்த்ரங்களின் அர்த்தத்தை விபரமாக சொல்லிவைத்து அவ் வர்த்தத்தை உபந யன குழந்தைகளும் பெற்றோர்களும் கேட்கும்படி செய்வது நிரம்பவும் அவசியமாகும். தர்மக்ஞ, கிருஹ்யக்ஞ வித்வான்களுக்கு ஸம்பாவனை செய்ய வேண்டும்.

ஓம் தத்ஸத்

இப்படிக்கு,

வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.

Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.
Copies, 2,500, 31—1—1949.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

[Regd.]

கும்பகோணம்.

ப்ரசுரம் 35.

[விலை அணா ஒன்று.]

# விவாஹம்

அடியிற்கண்ட கடிதம் ஸ்ரீமதாசார்யாளுக்கு ஒரு சிஷ்யரால் அனுப்பப்பட்டிருக்கிறது. அதை வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை ப்ரசுரமாகப் போடும்படி எனக்கு ஆக்ஞையாகியிருக்கிறது.

வெ. ஸுப்ரஹ்மண்யன்,
கார்யதர்சி.

தேவரீர் ஆசார்ய ஸ்வாமிகளுக்கு உள்ளன்புடன் நமஸ்காரம். நமது ப்ராஹ்மண வகுப்பானது உத்யோகங்களினின்றும் தொழில்கலாசாலைகளினின்றும் விலக்கப்பட்டிருப்பதால் பிழைக்கும் வழியின்றி க்ஷீணித்துவருகிறது. ப்ராஹ்மணர்களின் தெய்வ பக்தி, குருபக்தி, ஒழுக்கம் இவைகளும் குறைந்து வருகின்றன. ப்ராஹ்மணர்கள் கல்யாணங்கள் தெய்வத்தன்மை மாறி கேவலம் வ்யாபார விஷயமாக நடக்கின்றன. அகவிலைகள் தலைவிரித்து ஆடும் இந்தக் கடுமையான காலத்தில் மாப்பிள்ளைகள் தங்கள் மாமனார்களைப் படுத்தும்பாடு மிகவும் அருவருக்கத்தக்கது.

கல்யாணத்துக்கு முன்னும் பின்னும் அவர்கள் ஆயிரக் கணக்கில் வரதக்ஷிணையும், வைர நகைகள், தங்க நகைகள், வெள்ளி பித்தளை பாத்திரங்கள், பட்டு ஜரிகைப் புடவைகள் இவைகளை மாமனாரின் சக்திக்கு மிஞ்சி பலாத்காரமாகத் தண்டிக் கொள்ளுகிறார்கள். படித்தவர்களும், தனவான்களுங்கூட இப்படிச் செய்கிறார்கள். கேட்ட சீர்களை கொடுக்கவில்லை யென்றால் பெண்ணை அழைத்துக்கொள்ள மாட்டோமென்றும், மறு விவாஹம் செய்துகொள்வோ மென்றும் பயமுறுத்து கிறார்கள். இந்த மாப்பிள்ளைகளின் பேராசையினாலும் அட்டூழி யங்களினாலும் ஆயிரக்கணக்கான பெண்கள் மனமுடைந்து விடுகிறார்கள். மாமனார்கள் அழிந்து விடுகிறார்கள்.

உதாரணமாக நான் என் மாப்பிள்ளைக்கு ரூ. 5,000 வரை யில் வரதக்ஷிணையும், சீரும் கொடுத்திருக்கிறேன். ரூ. 1,500 கலியாணத்திற்கு செலவு செய்தேன். நான் ஆயுள் பூராவும் சேர்த்துவைத்த பணத்தையெல்லாம் செலவு செய்துவிட்டேன். இன்னும் தங்கள் பேராசைப்படி ரூ. 1,500 க்குமேல் சீர்கள் வற்புறுத்திக் கேழ்க்கிறார்கள். கொடுக்கும் வரையில் பெண்ணை அழைக்கமாட்டோ மென்கிறார்கள். நாங்கள் மனமுடைந்து நிற்கிறோம். இந்தக் கொடிய வழக்கத்தினால் எண்ணற்ற குடும் பங்கள் நிலைகுலைந்து அழிந்து விடுகின்றன. ஆகையால் இந்தக் கொடிய வழக்கத்தை சீக்கிரத்தில் ஒழிக்க வேண்டும். இது தெய்வ விரோதமும் ஸமூக விரோதமுமான வழக்கமாகையால் தாங்கள் முன்னிட்டு இதைச் சீர்திருத்தவேண்டுமாகக் கோரு கிறேன்.

தங்களைத் தரிசிக்க வரும் கனவான்கள், தனவான்கள், செல் வாக்குடையவர்கள் மூலமாயும், பத்திரிகைகள் மூலமாயும் தங்கள் ப்ரஸங்கங்களிலும் இந்த வழக்கத்தைக் கடுமையாகக் கண்டிக்க வேண்டும். தங்கள் கவனத்திற்கு நேரிலாவது எழுத்து மூலமாகவாவது கொண்டுவரப்படும் மாப்பிள்ளைகளின் துர் நடத் தைகளை தாங்கள் கடிதமூலமாகக் கண்டிக்கவேண்டும். தங்களிடம் எல்லாரும் குருபக்தி வைத்திருக்கிறபடியால் தங்கள் புத்தி மதியை அங்கீகரித்து சீர்திருந்துவார்கள். எண்ணற்ற பெண்

களும் மாமனூர்களும் எக்காலத்திலும் நன்றி பாராட்டி தங்களை தெய்வமாக வணங்குவார்கள்.

தங்களுக்கு உசிதமென்று தோன்றினால் என் மாப்பிள்ளைக்குக் கடிதம் எழுதி புத்தி மதி புகட்டலாம். அதனால் அவன் கட்டாயம் சீர்திருந்துவான் என்று நம்புகிறேன்.

தங்களுக்கு உசிதப்படாவிட்டால் வேண்டாம். இந்த விஷயத்தில் எந்தமட்டில் உதவி செய்யமுடியுமென்று தெரிவிக்கும்படி வணக்கமாய் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தங்கள் வணக்கமுள்ள,
**சிஷ்யன்,**
சேலம் ஜில்லா.

"கௌரி கல்யாணம் வைபோகமே" என்ற ந்யாயப்படி ஒவ்வொரு கல்யாணமும் தெய்வத்தன்மை பொருந்தியதாக இருக்க வேண்டும். பெண்ணின் தகப்பன் ஸரியானபடி பணம் கொடுக்கவில்லை என்கிற காரணத்தினால் கல்யாணமான ஒரு பெண்ணை வாழவிடாமலிருப்பது ஒரு பெரிய பாபமென்பதை வெகு வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## இதைத்தவிர

விவாஹமான தினம் விவாஹ அக்னியை கல்யாணப்பெண் வீட்டிலிருந்து பிள்ளை வீட்டுக்கு எடுத்துக் கொண்டுபோய், அங்குபோய்ச் சேர்ந்த பிறகு ஸாயங்காலம் ப்ரவேச ஹோமம், அதாவது 'ப்ரவிச்ய ஹோமம்' செய்து, அங்கு ஒரு வருஷம் வரையில் ப்ரும்மசர்ய நியமத்துடனிருந்து, அவ்வக்னியிலேயே ஔபாஸனம் செய்துகொண்டுவந்து, அவ்வருஷத்தின் முடிவில் சேஷஹோமம் செய்யவேண்டுமென்பது முக்கியபக்ஷம். ப்ரவிச்ய ஹோமத்திற்குப் பிறகு ஆறுமாதமாவது நியமத்துடன் ஔபாஸனம் செய்து, பிறகு சேஷஹோமம் செய்யவேண்டுமென்பது அடுத்தபக்ஷம். கடைசிபக்ஷமாக வரனுடைய க்ரு

ஹூத்தில் ப்ரவிச்ய ஹோமம் செய்து, மூன்று நாட்கள் நியமத்துடன் ஔபாஸனம் செய்து, பிறகு சேஷஹோமம் செய்ய வேண்டுமென்று ஆபஸ்தம்பர் முதலிய ஸூத்ரக்காரர்கள் விதித்திருக்கிறார்கள். சென்ற 20-வருஷ காலமாக விவாஹதினத்தின் மத்தியானத்திலேயே ப்ரவேச ஹோமம், ஔபாஸனம், சேஷஹோமம் எல்லாவற்றையும் முடித்துவிடுகிறோம். இப்படிச் செய்வதினால் விவாஹத்திற்கு தெய்வீகத் தன்மை ஸித்திக்காமல் போய்விடுகிறது. அக்னியும் ஸித்திப்பதில்லை. இந்த மூன்று நாட்களாவது ஔபாஸனம் செய்து சேஷஹோமம் செய்தால் தான் தம்பதிகளுக்கு விவாஹாக்னி ஸான்னித்யம் ஏற்படுகிறது. பின்னர் செய்யும் ஔபாஸனங்களெல்லாம் அப்போது தான் ப்ரயோஜனமுடையதாகும். ச்ராத்த காலத்தில் செய்யும் ஔபாஸனமும் ப்ரயோஜனமற்றதாகப் போய்விடும். நமது மரணகாலத்தில் செய்யப்படும் அக்னி ப்ரதானமும் வெறும் நெருப்பேயாகிவிடும். இவ்விதம் விவாஹாக்னி ஸித்தியில்லாமல் போய்விடுவதால் இப்போது பிறக்கும் ஸந்ததிகளுக்கும் முன்னுள்ளவர்களைவிட ப்ரும்மதேஜஸ் எவ்வளவோ குறைவாக இருப்பதைக் காண்கிறோம். ஆதலால் இன்னும் அடியோடு குறையு முன்னம் இவ்விஷயத்தில் **சற்று கவனம் செலுத்தி** இவ் வருஷம் முதல் நடத்தும் விவாஹங்களிலெல்லாம் பிள்ளை வீட்டுக்காரர் இறங்கியிருக்கும் ஜாகையிலாவது மூன்று நாட்கள் ஔபாஸனம் செய்து, பிறகு சேஷ ஹோமம் நடக்கும்படி பந்துமித்ரர்கள் உபாத்தியாயர் எல்லோரும் போதித்து ஏற்பாடு செய்யவேண்டும். கல்யாணப்பிள்ளைகளும் தாமும் தன்னுடைய ஸந்ததிகளும் நமது மதத்தில் உபதேசிக்கப்பட்ட ச்ரேயஸ்ஸை அடையவேண்டி இவ்விஷயத்தில் முன் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

நாம் விவாஹகாலத்தில் சொல்லும் மந்த்ரங்களில் அநேகமாக பாதிக்குமேல் விவாஹாக்னியை அணையாது பெண் வீட்டிலின்று பிள்ளையின் சொந்த வீட்டிற்கு எடுத்துக்கொண்டு போகும் ப்ரயாணத்தைப்பற்றியும் இடையில் வாஹனம், நதி தாண்டுதல், ஓடத்தில் ஏறல், வழியில் இடையூறுகள் நிவர்த்தி முதலிய சந்தர்ப்பங்களில் ஜபிப்பதற்காக ஏற்பட்டன. ஆதலால்,

விவாஹத்தை பெண்ணின் வீட்டில் முடித்துக்கொண்டு, அன்று மத்தியானமே விவாஹாக்னியை எடுத்துக்கொண்டு அந்த அக்னி அணையாமல் ஆசாரத்திற்கும் பங்கமில்லாமல் வரனுடைய சொந்த வீட்டிற்கு கொண்டுவந்து சேர்க்கமுடியுமானால் அங்கு கொண்டுவந்து, வீட்டில் சேரும் தினம் ஸாயங்காலத்தில் ப்ரவேசஹோமம் செய்யவேண்டியது. ப்ரவேசஹோம பர்யந்தம் தம்பதிகள் உபவாஸத்துடனிருக்கவேண்டியது.

ப்ரவிச்யஹோமம் ஆனபிறகு த்ருவ நக்ஷத்ரத்தையும் அருந்ததி நக்ஷத்ரத்தையும் மந்த்ரபூர்வமாக தர்சனம் செய்துவிட்டு பிறகு போஜனம் செய்யவேண்டியது. அருந்ததி நக்ஷத்ரம் ஸப்த ரிஷி நக்ஷத்ரங்களில் வஸிஷ்ட நக்ஷத்ரத்திற்கு வெகு ஸமீபத்தில் தெரிந்தும் தெரியாமலும் முணு முணு என்று ஒளித்துக் கொண்டிருக்கும். தன் கணவனுக்கு ப்ரகாசத்தைக் கொடுத்து தன் ப்ரகாசத்தை அதிகமாய் காட்டிக்கொள்ளாமல் கணவனைவிட்டு அகலாமல் இருக்கும் அனுக்ரஹத்தைப் பெறுவதற்காகத்தான் உபவாஸமிருந்து அருந்ததி தர்சனம் செய்யவேண்டும். எல்லா நக்ஷத்ரங்களும் சலிக்கும் பொழுதும் சலிக்காமலிருப்பது த்ருவநக்ஷத்ரம். அதுபோல் உலகமெல்லாம் சலித்தாலும் தான் சலிக்காமலிருக்கும் அனுக்ரஹத்திற்காகவே த்ருவதர்சனம் விதிக்கப்பட்டிருக்கிறது. அருந்ததி நக்ஷத்ரத்தை தர்சனம் செய்விப்பதைக் குறித்து ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளும் பாஷ்யத்தில் ஸ்தூலாருந்ததி ந்யாயம் என்று ஒரு ந்யாயத்தை த்ருஷ்டாந்தமாக நிரூபிக்கும்பொழுது ப்ரஸ்தாபித்திருக்கிறார்கள். ஸாயங்காலத்தில் ப்ரவிச்யஹோமம் ஆனவுடன் வதூவரர்கள் இவ்விரு நக்ஷத்ரங்களையும் தர்சனம் செய்ய வேண்டிய அவச்யத்தை ஆபஸ்தம்பர், ஆச்வலாயனர், போதாயனர், காத்யாயனர் முதலிய அநேக ஸூத்ரக்காரர்கள் ஒரே முகமாக உபதேசித்திருக்கின்றனர். ஆதலால் கடைசிபக்ஷமாக விவாஹ முகூர்த்தமானவுடனேயே கல்யாண வீட்டிலிருந்து விவாஹாக்னியை பிள்ளை வீட்டுக்காரர்கள் இறங்கியிருக்கும் ஜாகையிலாவது கொண்டுவந்து வைத்து, ப்ரவிச்யஹோமம் செய்து, அருந்ததி தர்சனம் செய்யவேண்டியது. அன்று முதல் மூன்று நாட்கள் உப்புகாரம் இல்லாமல் ஆகாரம் செய்துகொண்டு,

ப்ரம்மசர்ய நியமனத்துடனிருந்துகொண்டு, ஔபாஸனம் செய்ய வேண்டியது. பிறகு நாலாவது நாள் நிசியில் சேஷஹோமம் செய்யவேண்டியது.

அருந்ததி நக்ஷத்ரம் முன்னிரவில் உத்தராயணத்தில்தான் தெரியும். இதனாலேயே விவாஹம் உத்தராயணத்தில்தான் நடத்தவேண்டியது என்பது ஸூத்ரக்காரர்களின் அபிப்பிராயம் என்பதும் தெரிகிறது.

இனி பிறக்கும் ஸந்ததிகளுக்கு ப்ரும்மதேஜஸ்ஸாம், செய்யப்படும் தேவ பித்ரு கார்யங்களின் ப்ரயோக ப்ரயோஜனமும் ஸித்திக்க இந்த மூன்று நாட்கள் ஔபாஸனத்தில் ஏற்பட்ட அக்னிஸித்தியே காரணம். சாத்தியமான இடங்களில் வேத தர்மசாஸ்த்ர ஸபையில் பரீக்ஷை கொடுத்து தேறிய தர்மக்ஞ க்ருஹஸ்தர்களை விவாஹத்திற்கு நாலுநாள் முன்னதாகவே வரவழைத்து இரண்டு நாள் வைத்துக்கொண்டு நடக்கப்போகும் விவாஹத்தில் ஜபிக்கப்படும் மந்த்ரங்களுக்கெல்லாம் அர்த்தம் தெரியும்படி வரனுக்கு உபதேசம் செய்விப்பது இனி வரப் போகும் ஸந்ததிகளுடைய ப்ரும்மதேஜஸிற்கு விதைமுதலாகும்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

**Printed at Sarada Vilasa Press, Kumbakonam. Published by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam.**
**Copies, 2,500, 10—2—1949.**

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

[Regd.]

**கும்பகோணம்.**

ப்ரசுரம் — 36

[விலை அணா ஒன்று.]

## ஸந்த்யை, ஸ்நானம், ஜபம், ஹோமம், பூஜை, ஆதித்யம், வை

த்விஜனாய்ப் பிறந்தவன் ஸம்ஸ்காரத்தினாலேயே சாஸ்த்ரத்தில் சொல்லிய கர்மாக்களை அனுஷ்டிக்க அர்ஹனாகிறான். ஸம்ஸ்காரமில்லாமல் செய்யும் எந்தக் கர்மாவும் ஸார்த்தகமாவதில்லை. அதாவது நினைத்த காரியம் கைகூடுவதில்லை. த்விஜனாய்ப் பிறந்தவன் ஒவ்வொரு நாளும் அனுஷ்டிக்கவேண்டிய அவச்யமான கர்மாக்கள் ஆறு. நாம் செய்யும் ஒவ்வொரு கர்மாவும் நித்யம், நைமித்திகம் என்று இரண்டு விதம். சில கர்மாக்களைச் செய்தால் விசேஷ புண்யம் உண்டு. சில கர்மாக்களைச் செய்யாவிடில் பாபம் நேரிடும்.

ஸந்த்யா ஸ்நானம் ஜபோ ஹோமோ தேவதாநாம் ச பூஜநம் ।
ஆதித்யம் வைச்வதேவம் ச ஷட் கர்மாணி தினே தினே ॥

மேலே சொல்லிய ஆறு கர்மாக்களும் செய்யாவிடில் பாபமேற்படக்கூடியவை. மேலேகண்ட 6 காரியங்களையும் தவறுகளில்லாமல் சாதாரணமாகச் செய்துவர தினம் 2-மணி அவகாசம் போதுமானது. ரொம்பவும் அவகாசமில்லாதவர்கள் ஒரு மணி நேரத்திலும் செய்துவிடலாம். மனிதனாயும் அதிலும் த்விஜனாயும் பிறந்தவன் 24 மணியுள்ள ஒரு நாளில் தனக்காக ஒரு மணி அவகாசம் செலவழிக்காமல் இதரப் பிராணிகள்போல் காரியம் செய்து வருவது மிகவும் துக்கிக்கக்கூடிய விஷயம். ஒரு வேளை ஸந்த்யாவந்தனம் விட்டவன் ப்ராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும். எப்பொழுதும் செய்யாதவனைப்பற்றி என்ன சொல்வது? ஒரு க்ரஹஸ்தன் 12 நாள் ஔபாஸனம் செய்யாமலிருந்துவிட்டால் ஸத்கர்மாக்கள் செய்ய யோக்கியதை குறைந்துவிடுகிறது. யாரும் ஸ்நானம் செய்யாமலிருப்பதில்லை. அதை காலத்தில் விதிவத்தாய்ச் செய்தால் இஹம் பரம் இரண்டுக்கும் ப்ரயோஜனமாகிறது. அதாவது ஸூர்ய உதயத்திற்குமுன் எழுந்து ஸ்நானம், அர்க்கியம் இரண்டும் செய்வது காலத்தில்

செய்வதாகும். ஸூர்ய உதயத்துக்கு ஒரு மணிக்குமுன் எழுந்திருந்தால் ஸ்நானம், ஸந்தி, ஜபம், ஔபாஸனம் முதலிய காரியங்களை ஒரு மணி நேரத்தில் நன்றாகச் செய்துவிடலாம்.

த்விஜனாகப் பிறந்த ஒவ்வொருவனும் மேலேகண்ட ஆறு கர்மாக்களையும் தினந்தோறும் அவச்யம் காலந்தவறாமல் செய்து வரவேண்டும். அப்படிச் செய்து வருபவன்தான் ச்ரௌத ஸ்மார்த்த கர்மாக்கள் செய்ய அர்ஹனாகிறான். மேலேகண்ட ஆறு கர்மாக்களையும் செய்யாமல் காம்யமாகவோ அல்லது நிஷ்காம்யமாகவோ செய்யும் எந்தக் கர்மாவும் ஸபலமாவதில்லை என்பது சாஸ்த்ர ஸித்தாந்தமும் அநுபவ ஸித்தமும். "செய்வன திருந்தச்செய்" என்கிற பழமொழிப்படி விஸ்தாரமாகச் செய்ய அவகாசமில்லாதவர்கூடக் கொஞ்சம் செய்தாலும் எந்தக் காலத்தில் எதை எப்படிச் செய்யவேண்டுமென்று தெரிந்து செய்ய வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையாகும்.

கொஞ்சகாலமாக நாம் அவச்யம் செய்யவேண்டிய மேலே கண்ட காரியத்தில் சிரத்தையில்லாததால் பழக்கமே அற்றுப் போய்விட்டதால் இந்த ஸமயம் ஒவ்வொருவரும் தனித்தனியாக விஷயங்களைத் தெரிந்து செய்வது அஸாத்யமாயிருக்கும் என்று நினைத்து 'வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையார்' அநேக பண்டிதர்களை க்ராமங்களுக்குப்போய் நாம் அவசியம் செய்ய வேண்டிய காரியத்தை மஹா ஜனங்களுக்குச் சொல்லும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அதன்படி பண்டிதர்கள் அநேக கிராமங்களுக்குப் போய்ச் சொல்லி வந்துகொண்டிருக்கிறார்கள். அப்படித் தங்கள் கிராமத்திற்கு வரும்போது ஏதோ என்னமோ சொல்லுகிறார்கள் என்று ஆலஸ்யமாயிராமல் கிராமத்திலுள்ள எல்லாரும் பண்டிதர்கள் வரும்போது உபன்யாஸம் நடக்கும் இடத்துக்கு வந்து அவர்கள் சொல்வதை ச்ரத்தையாகக் கேட்டுக் கூடுமானவரையில் எல்லாக் கர்மாக்களையும் ச்ரத்தையாய் அனுஷ்டித்து க்ருதார்த்தர்களாகும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையிலிருந்து வெளியிடப்படும் 26-வது ப்ரசுரத்தில் ஷட்கர்மாவைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

---

Printed at Sarada Vilasa Press, Kumbakonam Published
by Veda Dharma Shastra Paripalana Sabha, Kumbakonam
Copies, 2,500 28—4—1949.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபை,

**( Regd. )**

**கும்பகோணம்.**

**ப்ரசுரம் 37.**

**[ விலை அணா ஒன்று. ]**

# ஸ்ரீ சங்கர ஜயந்தி.

வைசாக சுக்லபஞ்சமி தினம் ஸ்ரீ சங்கர ஜயந்தி. அந்த தினம் நிகழும் விரோதி-ௗ சித்திரை-மீ 21-உ (3-5-49) செவ்வாய்க்கிழமை வருகிறது.

"சங்கரர்" என்ற பதத்திற்கு எல்லா மக்களுக்கும், ஸகல உயிர்களுக்கும் க்ஷேமத்தையும், மங்களத்தையும் கொடுப்பவர் என்று அர்த்தம். பெயருக்கேற்றபடி ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் மஹோபகாரத்தைச் செய்தருளிய ஸ்ரீமத் பகவத் பாதர்களை, ஜயந்தி தினத்தன்று மஹோத்ஸவத்தைக் கொண்டாடி ஸ்மரிக்க கடமைப்பட்டிருக்கிறோம். சங்கர விஜயத்திலுள்ள "ஸ்ரீ சங்கர அவதார" கட்டத்தின் க்ரந்த மூலத்தையும் அதன் தமிழுரையையும் வாசகர்களின் உபயோகத்திற்காக போடப்

**ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் ஸாக்ஷாத் கைலாஸபதியின் அவதார புருஷர். ஸகல சாஸ்த்ரங்களையும் கசடறக் கற்றறிந்த ஞானி. ஸர்வக்ஞர். 32 வயதுதான் பூத உடலைத் தாங்கி நின்றார். புகழ் உடம்பை என்றென்றும் அழியாதவண்ணம் இருக்கும்படியாகச் செய்துள்ளார். ஸேதுமுதல் ஹிமயமலைவரை தேசமெங்கும் ஸன்யாஸ ஆச்ரமம் பூண்டு, யாத்திரைசெய்து, பிற மத பண்டிதர்களுடன் வாதம் செய்து, அவர்களை ஜெயித்து, பரம்பராகம்மான அத்வைத வேதாந்தத்தை நிலைநாட்டி, காஞ்சீ முதலான பல**

இடங்களில் மடங்களை நிறுவி, அதில் சிஷ்ய பரம்பரைகளை ஸ்தாபித்து, புதிய தேவாலயங்களை அமைத்து, பழைய கோவில்களிலிருந்த குறைபாடுகளைக் களைந்து, சுத்தமான பூஜை நடவடிக்கைகளை ஏற்படுத்தி, அக்ஞானத்தினாலுண்டான துர்மதக்கொள்கைகளைக் கண்டித்து, வைதிக தர்மத்தை நிலைநிறுத்தி, பத்தியமான ஞானமார்க்கத்தை உபதேசித்து, தெய்வப்பற்றிற்கும், மதப்பற்றிற்கும், வேதாந்த ப்ராசாரத்திற்கும், பல வழிகளில் தான் ஸ்தாபித்த மடங்கள் பயன்படுவதற்கான மார்க்கத்தைக் காட்டி, சிஷ்யகோடிகள் உய்யுமாறு பல அற்புதமான க்ரந்தங்களை இயற்றி, தன் அத்வைத வேதாந்தத்தை அனுபவத்தில் காட்டி, இது போன்ற அமானுஷ்யமான செய்கைகளினால் லோகத்துக்குப் பரமோபகாரம் செய்துள்ளார்.

இப்படிக்கு,

**வேத தர்மசாஸ்த்ர பரிபாலன ஸபையோம்.**

உ

# ஸ்ரீசங்கர பகவத்பாதாசாரியர் அவர்களின் அவதார கட்டம்.

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபஶாந்தயே ॥ ॥௧॥

முதாகராத்தமோதகம் ஸதா விமுக்திஸாதகம்
கலாதராவதம்ஸகம் விலாஸிலோகரக்ஷகம் ।
அனாயகைகநாயகம் விநாஶிதேபதைத்யகம்
நதாஶுபாஶுநாஶகம் நமாமி தம் விநாயகம் ॥ ॥௨॥

குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மஹேஶ்வர: ।
குரு: ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம தஸ்மை ஶ்ரீகுரவே நம: ॥௩॥

நாராயணம் பத்மபவம் வஸிஷ்டம்
ஶக்திம் ச தத்புத்ரபராஶரம் ச ।

𑌵𑍍𑌯𑌾𑌸𑌂 𑌶𑍁𑌕𑌂 𑌶𑍌𑌨𑌕𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌕𑌂
𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌨𑌾𑌰𑌦𑌪𑌰𑌾𑌶𑌰𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌨𑍍 ॥ ॥௪॥

𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌾𑌯 𑌪𑌰𑌾𑌶𑌰𑌾𑌯 𑌚
𑌪𑌾𑌦𑌂 𑌚 𑌭𑌕𑍍𑌤𑌾𑌗𑌮𑌕𑌂 𑌚 𑌶𑌿𑌷𑍍𑌯𑌮𑍍 ।
𑌤𑌂 𑌧𑌾𑌟𑌕𑌂 𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌯𑌕𑌲𑌾𑌰𑌭𑌦𑍍𑌰𑌾
𑌨𑌮𑌸𑍍𑌕𑌰𑍋𑌮𑍍𑌯𑌸𑍍𑌤 𑌭𑌾𑌨𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 𑌚 ॥ ॥௫॥

𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌯 𑌕𑌰𑍁𑌣𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌮𑌾𑌨𑍀 𑌸𑌦𑌾 𑌸𑌵𑍍𑌯𑌾𑌧𑌰𑌂 𑌤𑌤𑍍𑌤𑌾𑌰𑌂 𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌮𑍍 ॥ ॥௬॥

---

## 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌅𑌵𑌤𑌾𑌰𑌵𑌰𑍍𑌣𑌨𑌮𑍍 ॥
## (𑌶𑍍𑌰𑍀 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌲𑍀𑌯 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌵𑌿𑌜𑌯𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌲𑍀)

𑌵𑍍𑌯𑌾𑌜𑌾𑌤𑍍 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌵𑌾𑌕𑌾𑌯𑌤𑌵𑌤𑌾 ।
𑌦𑍃𑌷𑍍𑌟𑌾 𑌪𑍍𑌰𑌿𑌯𑌸𑌮𑌾𑌯𑌾𑌤𑌾 𑌹𑌾𑌨𑌿𑌰𑌾𑌯𑌾𑌂 𑌚 𑌧𑌰𑍍𑌮𑌿𑌣𑍀𑌮𑍍 ॥
𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌮𑍇𑌵𑌂 𑌸𑌤𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌲𑌮𑌤𑌸𑌾 ।
𑌦𑌯𑌾𑌸𑌕𑍍𑌤𑌾𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌶𑌂𑌭𑍋 𑌦𑍀𑌨𑌦𑍇𑌹𑌾𑌵𑌿 𑌭𑌕𑍍𑌤𑌵𑌿 ॥ ॥௮॥
𑌵𑌪𑍁𑌷𑌿 𑌸 𑌪𑌯𑌸𑌾𑌶𑌿𑌃 𑌪𑌦𑍍𑌮𑌿𑌨𑍀𑌨𑌾𑌯𑌿𑌕 𑌦𑌶𑌨𑌾𑌕𑌃 ।
𑌤𑌤𑌸𑍍𑌤𑌾 𑌦𑌶𑌦𑌿𑌶𑌾𑌸𑌿 𑌸𑌂𑌪𑌦𑍍𑌨𑌶𑌮𑌕𑍍𑌷𑌣𑍇 ॥ ॥௯॥
𑌨𑌿𑌵𑍇𑌶𑌯𑌤𑍍𑌸𑌵 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵 𑌪𑍍𑌰𑌭𑌵𑌣𑌮𑍇 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑍍𑌤 𑌵𑌾𑌸𑌿𑌜𑌿𑌨𑌾𑌭𑍋𑌗𑌦𑍀𑌪𑍍𑌤 𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌯𑌾 𑌯𑌦𑌿 ॥
𑌉𑌦𑌯𑌾𑌚𑌲𑌵𑍇𑌲𑍇𑌵 𑌮𑌾𑌤𑌜𑌭𑌗𑌂 𑌭𑌗𑌵𑌾𑌜𑌸𑍍 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍀 𑌤𑌨𑌯𑌂 𑌸𑌾𑌧𑍍𑌵𑍀 𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌤𑍀 𑌷𑌟𑍍𑌕𑌾𑌨𑌨𑌮𑍍 ॥ ॥௧௧॥
𑌜𑌯𑌨𑍍𑌤𑍀𑌵 𑌪𑍌𑌲𑍋𑌮𑍀 𑌵𑍍𑌯𑌾𑌸𑌂 𑌸𑌤𑍍𑌯𑌵𑌤𑍀 𑌯𑌥𑌾 ।
𑌤𑌮𑌲𑌾𑌰𑌦𑍍𑌯𑌤𑌿𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌮𑍁𑌦𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂 𑌦𑌿𑌨𑌾𑌧𑌿𑌪𑌮𑍍 ॥ ॥௧௨॥
𑌚𑌤𑍁𑌷𑍍𑌷𑌷𑍍𑌟𑍍𑌯𑌧𑌿𑌕𑌸𑌹𑌸𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌯𑌵𑌤𑌾𑌰𑌯𑍇 ।
𑌪𑌿𑌙𑍍𑌗𑌲𑌾𑌬𑍍𑌦𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌾𑌮 𑌮𑍇𑌷𑌂 𑌸𑌿𑌤𑌿𑌤𑌂 𑌦𑌿𑌨𑌮𑍍 ॥
𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑌿𑌥𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑍋𑌽𑌪𑌿 𑌶𑍋𑌭𑌨𑌃 ।
𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑍋 𑌭𑌾𑌗𑍍𑌯𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌵𑌿𑌜𑌯𑌾 𑌤𑌿𑌥𑌿 ॥ ॥௧௩॥

𑌕𑌿𑌂 𑌕𑌿𑌂 𑌕𑌿𑌰𑍀𑌟𑌚𑌾𑌪𑌲𑍍𑌯𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍇𑌷𑍍𑌵𑍇𑌵 𑌚𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌮𑍍 ।
𑌸𑌾𑌰𑌂 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌸𑌾𑌧𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌤𑌿 𑌶𑍍𑌲𑌯𑌮𑍍 ॥ ॥௧௫॥

𑌉𑌦𑍀𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑌿𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌕𑌾𑌨𑍍𑌤𑌂 𑌕𑌾𑌨𑍍𑌤𑌾𑌯𑌾𑌞𑍍𑌜𑌿 ।
𑌸𑌸𑍍𑌯𑌜𑌾𑌃 𑌪𑌾𑌦𑍍𑌵𑌷𑌟𑍍𑌕𑌾𑌣𑌿 𑌦𑍇𑌵𑌾 𑌮𑌾𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌶𑌿𑌕𑍍𑌷𑌰𑌾𑌃 ॥௧௬॥

𑌕𑌸𑍍𑌤𑍂𑌰𑌿𑌕𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌗𑍍𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑍋𑌚𑌾𑌰𑌕𑌾𑌵𑌲𑍀 ।
𑌶𑌿𑌰𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌾𑌕𑌾𑌰𑌾𑌃 𑌸𑌾 𑌯𑌾𑌰𑌾 𑌸𑌾𑌧𑌾𑌰𑌾 𑌬𑌭𑍌 ॥ ॥௧௭॥

𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 𑌪𑍍𑌰𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌜𑍍𑌵𑌾𑌲𑌾 𑌜𑌜𑍍𑌵𑌲𑍍𑌯𑌜𑍍𑌜𑍍𑌵𑌾𑌲𑌕𑌾𑌃 ।
𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌚𑌮𑌚𑍍𑌛𑌤𑍍𑌤𑌂 𑌸𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌪𑌤𑌾𑌂𑌚𑌲𑍀 ॥ ॥௧௮॥

𑌇𑌤𑍍𑌥𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌧𑍀𑌰𑍋𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌲𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌰𑍀𑌤𑌾 𑌵𑌿𑌨𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾 ।
𑌵𑍍𑌯𑌷𑍍𑌟𑌾𑌂𑌗𑌮𑍋𑌹𑌂 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌰𑌾𑌧𑍍𑌯𑍈𑌤 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌕𑌾 ॥ ॥௧௯॥

𑌸𑍍𑌵𑌾𑌚𑌿𑌨𑍍𑌤𑍁 𑌦𑌶𑌯𑌾𑌯 𑌚𑍇 𑌶𑍀𑌘𑍍𑌰𑌾 𑌬𑌾𑌲𑌮𑌾𑌵𑌕𑍍𑌰𑍋𑌚𑌿𑌤𑌾𑌃 ।
𑌇𑌤𑍍𑌥𑌂 𑌸𑌾 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌾𑌚𑌸 𑌸𑌾𑌧𑍍𑌵𑍀 𑌮𑌹𑌿𑌷𑍀 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌵𑌰𑌮𑍍 ॥௨௦॥

𑌤𑌤𑌃 𑌕𑌿𑌶𑍋𑌰𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑍇𑌸𑍍𑌵𑌲𑍀 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌯𑌰𑌃 । .
𑌤𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 𑌵𑌰𑌣𑍈 𑌸𑍍𑌥𑍂𑌲𑍈 𑌰𑍋𑌰𑍋𑌦𑍇𑌷𑍇 𑌕𑍍𑌷𑌣𑌾𑌦𑍍𑌵𑌸𑍈 ॥

𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾 𑌸𑌾𑌽𑌲𑍀 𑌤𑌦𑍇𑌵𑌾𑌸𑍀𑌤𑍍 𑌚𑌾𑌯𑌾𑌚𑍋𑌲𑌿𑌤𑌚𑌾𑌨𑌸𑌾 ।
𑌜𑌗𑍍𑌨𑍋𑌮𑌕𑌃 𑌚𑌾𑌯𑌾 𑌚𑍇𑌲𑌶𑌿𑌤𑌾 𑌰𑌨𑍀𑌦𑍃𑌶𑍀 ॥ ॥௨௨॥

𑌤𑌤𑍍𑌰𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌥𑌾 𑌜𑌨𑌾 𑌨𑌾𑌯𑌕𑌾 𑌨𑌾𑌵𑌿𑌨𑍍𑌦𑌨𑍍 𑌵𑍍𑌯𑌤𑍀𑌚𑍀𑌦𑍃𑌶𑌮𑍍 ।
𑌬𑌾𑌲𑌕𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰 𑌪𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑍋𑌨𑍍𑌨𑌾𑌬𑌿𑌂𑌬𑌚𑌿𑌵𑍋𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌮𑍍 ॥ ॥௨௩॥

𑌤𑌤𑍍𑌰𑌤𑍍𑌯𑌾 𑌵𑍍𑌯𑌜𑌨𑌾𑌯𑌕𑍀 𑌯𑌦𑍋𑌵𑌿𑌤𑌚𑌦𑍋𑌵𑌰𑌨𑍍 ।
𑌤𑌤𑌸𑍍𑌪𑍃𑌕𑌾 𑌵𑌿𑌤𑌾 𑌦𑍇𑌵𑍀 𑌨𑌿𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌦𑍇𑌵𑍍𑌯𑌵 𑌨𑌿𑌲𑍀𑌨𑌃 ॥

𑌚𑌾𑌚𑌾𑌦𑍇 𑌨𑌿𑌤𑌰𑌾𑌂 𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 𑌵𑌿𑌤𑍍𑌤𑍇𑌶𑌂 𑌨𑌾𑌮𑍍𑌯𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌤 ।
𑌪𑍍𑌰𑌵𑌿𑌮𑍍𑌲𑌾𑌵𑌂 𑌤𑌾 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌶𑌂𑌸𑌾𑌨𑍍𑌲𑌾𑌬𑍋𑌯𑌯𑌚𑍍𑌚 𑌸𑌾 ॥௨௫॥

𑌸𑌾𑌕𑌾 𑌶𑌿𑌵𑌗𑌾𑌰𑌾𑌯𑌜𑍍𑌵𑌾 𑌯𑌜𑍍𑌵𑌨𑌾𑌚𑌗𑍍𑌰𑌣𑍀𑌸𑍍𑌵𑌤𑌃 ।
𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌨𑌾𑌕𑌾𑌰𑌯𑌾𑌚𑌾𑌸 𑌪𑌾𑌰𑌨𑍀𑌰𑌵𑌿 𑌸𑌵𑌲𑍍𑌤𑌃 ॥ ॥௨௬॥

𑌤𑌦𑍋𑌤𑍍𑌸𑌵𑍋 𑌚𑌮𑌾𑌨𑌾𑌸𑍀𑌤𑍍 𑌪𑌾𑌰𑍇 𑌸𑌦𑍃𑌨𑌿 𑌸𑌞𑍍𑌜𑌤𑌮𑍍 ।
𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌰𑌾𑌶𑌿𑌂 𑌚𑌵𑌿𑌹𑍍𑌯𑌾𑌸𑍍𑌸𑌵𑍈 𑌵𑌿𑌦𑍇𑌹𑍍𑌯𑌾 𑌮𑌾𑌲𑌯𑌃 𑌪𑍍𑌰𑌦𑌤𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 ॥
𑌯𑌨𑌾𑌨𑍍𑌯𑌿 𑌮𑌣𑌿 𑌵𑌿𑌪𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍍𑌭𑍍𑌯𑌾 𑌧𑌿𑌦𑍇𑌶 𑌸𑌃 ।
𑌵𑌾𑌸𑌾𑌂𑌸𑌿 𑌮𑌣𑌿𑌯𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑌮𑌾𑌨𑌿 𑌪𑍍𑌰𑌦𑌤𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 ॥௨௭॥

पुरन्ध्रीणां च [illegible] ।
[illegible] ॥௨௯॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥ ॥௩௧॥

[illegible] ।
[illegible] ॥ ॥௩௨॥

[illegible] ।
[illegible] ॥௩௩॥

[illegible] ।
[illegible] ॥ ॥௩௪॥

[illegible] ।
यायं यायं [illegible] श्रीकृष्ण इव गोपिका ॥௩௫॥

[illegible] ।
[illegible] ॥
[illegible] ॥ ॥௩௬½॥

श्रीः ॥

श्रीमच्छङ्करभगवत्पादकृतम्

श्रीकनकधारास्तोत्रम् ॥

---

अङ्गं हरेः पुलकभूषणमाश्रयन्ती
भृङ्गाङ्गनेव मुकुलाभरणं तमालम् ।
अङ्गीकृताखिलविभूतिरपाङ्गलीला
माङ्गल्यदास्तु मम मङ्गलदेवतायाः ॥ ॥௧॥

मुग्धा मुहुर्विदधती वदने मुरारेः
प्रेमत्रपाप्रणिहितानि गतागतानि ।

𑌮𑌾𑌲𑌾 𑌦𑍃𑌶𑍋𑌰𑍍𑌮𑌧𑍁𑌕𑌰𑍀𑌵 𑌮𑌹𑍋𑌤𑍍𑌪𑌲𑍇 𑌯𑌾
𑌸𑌾 𑌮𑍇 𑌶𑍍𑌰𑌿𑌯𑌂 𑌦𑌿𑌶𑌤𑍁 𑌸𑌾𑌗𑌰𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌯𑌾𑌃 ॥ ॥௨॥

𑌆𑌮𑍀𑌲𑌿𑌤𑌾𑌕𑍍𑌷𑌮𑌧𑌿𑌗𑌮𑍍𑌯 𑌮𑍁𑌦𑌾 𑌮𑍁𑌕𑍁𑌨𑍍𑌦𑌮𑍍
𑌆𑌨𑌨𑍍𑌦𑌕𑌨𑍍𑌦𑌮𑌨𑌿𑌮𑍇𑌷𑌮𑌨𑌙𑍍𑌗𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌮𑍍 ।
𑌆𑌕𑍇𑌕𑌰𑌸𑍍𑌥𑌿𑌤𑌕𑌨𑍀𑌨𑌿𑌕𑌪𑌕𑍍𑌷𑍍𑌮𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍
𑌭𑍂𑌤𑍍𑌯𑍈 𑌭𑌵𑍇𑌨𑍍𑌮𑌮 𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌶𑌯𑌾𑌙𑍍𑌗𑌨𑌾𑌯𑌾𑌃 ॥ ॥௩॥

𑌬𑌾𑌹𑍍𑌵𑌨𑍍𑌤𑌰𑍇 𑌮𑌧𑍁𑌜𑌿𑌤𑌃 𑌶𑍍𑌰𑌿𑌤𑌕𑍌𑌸𑍍𑌤𑍁𑌭𑍇 𑌯𑌾
𑌹𑌾𑌰𑌾𑌵𑌲𑍀𑌵 𑌹𑌰𑌿𑌨𑍀𑌲𑌮𑌯𑍀 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ।
𑌕𑌾𑌮𑌪𑍍𑌰𑌦𑌾 𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌪𑌿 𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌮𑌾𑌲𑌾
𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌮𑌾𑌵𑌹𑌤𑍁 𑌮𑍇 𑌕𑌮𑌲𑌾𑌲𑌯𑌾𑌯𑌾𑌃 ॥ ॥௪॥

𑌕𑌾𑌲𑌾𑌮𑍍𑌬𑍁𑌦𑌾𑌲𑌿𑌲𑌸𑌿𑌤𑍋𑌰𑌸𑌿 𑌕𑍈𑌟𑌭𑌾𑌰𑍇𑌃
𑌧𑌾𑌰𑌾𑌧𑌰𑍇 𑌸𑍍𑌫𑍁𑌰𑌤𑌿 𑌯𑌾 𑌤𑌡𑌿𑌦𑌙𑍍𑌗𑌨𑍇𑌵 ।
𑌮𑌾𑌤𑍁𑌃 𑌸𑌮𑌸𑍍𑌤𑌜𑌗𑌤𑌾𑌂 𑌮𑌹𑌨𑍀𑌯𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃
𑌭𑌦𑍍𑌰𑌾𑌣𑌿 𑌮𑍇 𑌦𑌿𑌶𑌤𑍁 𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑌨𑌨𑍍𑌦𑌨𑌾𑌯𑌾𑌃 ॥ ॥௫॥

𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌂 𑌪𑌦𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌤𑌃 𑌖𑌲𑍁 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌤𑍍
𑌮𑌾𑌙𑍍𑌗𑌲𑍍𑌯𑌭𑌾𑌜𑌿 𑌮𑌧𑍁𑌮𑌾𑌥𑌿𑌨𑌿 𑌮𑌨𑍍𑌮𑌥𑍇𑌨 ।
𑌮𑌯𑍍𑌯𑌾𑌪𑌤𑍇𑌤𑍍𑌤𑌦𑌿𑌹 𑌮𑌨𑍍𑌥𑌰𑌮𑍀𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌧𑌮𑍍
𑌮𑌨𑍍𑌦𑌾𑌲𑌸𑌂 𑌚 𑌮𑌕𑌰𑌾𑌲𑌯𑌕𑌨𑍍𑌯𑌕𑌾𑌯𑌾𑌃 ॥ ॥௬॥

𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑌦𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑌦𑌾𑌨𑌦𑌕𑍍𑌷𑌮𑍍
𑌆𑌨𑌨𑍍𑌦𑌹𑍇𑌤𑍁𑌰𑌧𑌿𑌕𑌂 𑌮𑍁𑌰𑌵𑌿𑌦𑍍𑌵𑌿𑌷𑍋𑌽𑌪𑌿 ।
𑌈𑌷𑌨𑍍𑌨𑌿𑌷𑍀𑌦𑌤𑍁 𑌮𑌯𑌿 𑌕𑍍𑌷𑌣𑌮𑍀𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌧𑌮𑍍
𑌇𑌨𑍍𑌦𑍀𑌵𑌰𑍋𑌦𑌰𑌸𑌹𑍋𑌦𑌰𑌮𑌿𑌨𑍍𑌦𑌿𑌰𑌾𑌯𑌾𑌃 ॥ ॥௭॥

𑌇𑌷𑍍𑌟𑌾 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌮𑌤𑌯𑍋𑌽𑌪𑌿 𑌯𑌯𑌾 𑌦𑌯𑌾𑌰𑍍𑌦𑍍𑌰—
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌪𑌪𑌦𑌂 𑌸𑍁𑌲𑌭𑌂 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 ।
𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌟𑌕𑌮𑌲𑍋𑌦𑌰𑌦𑍀𑌪𑍍𑌤𑌿𑌰𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍍
𑌪𑍁𑌷𑍍𑌟𑌿𑌂 𑌕𑍃𑌷𑍀𑌷𑍍𑌟 𑌮𑌮 𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌰𑌾𑌯𑌾𑌃 ॥ ॥௮॥

𑌦𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌦𑌯𑌾𑌨𑍁𑌪𑌵𑌨𑍋 𑌦𑍍𑌰𑌵𑌿𑌣𑌾𑌮𑍍𑌬𑍁𑌧𑌾𑌰𑌾𑌮𑍍
𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌕𑌿𑌞𑍍𑌚𑌨𑌵𑌿𑌹𑌙𑍍𑌗𑌶𑌿𑌶𑍌 𑌵𑌿𑌷𑌣𑍍𑌣𑍇 ।
𑌦𑍁𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑌘𑌰𑍍𑌮𑌮𑌪𑌨𑍀𑌯 𑌚𑌿𑌰𑌾𑌯 𑌦𑍂𑌰𑌮𑍍
𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌪𑍍𑌰𑌣𑌯𑌿𑌨𑍀𑌨𑌯𑌨𑌾𑌮𑍍𑌬𑍁𑌵𑌾𑌹𑌃 ॥ ॥௯॥

கீர்தேவதேதி கருடத்வஜஸுந்தரீதி
ஶாகம்பரீதி ஶஶிஶேகரவல்லபேதி ।
ஸ்ருஷ்டிஸ்திதிப்ரலயகேலிஷு ஸம்ஸ்திதாயை
தஸ்யை நமஸ்த்ரிபுவனைககுரோஸ்தருண்யை ॥க0॥

ஶ்ருத்யை நமோஸ்து ஶுபகர்மபலப்ரஸூத்யை
ரத்யை நமோஸ்து ரமணீயகுணார்ணவாயை ।
ஶக்த்யை நமோஸ்து ஶதபத்ரநிகேதனாயை
புஷ்ட்யை நமோஸ்து புருஷோத்தமவல்லபாயை ॥

நமோஸ்து நாளீகநிபானநாயை
நமோஸ்து துக்தோததிஜன்மபூம்யை ।
நமோஸ்து ஸோமாம்ருதஸோதராயை
நமோஸ்து நாராயணவல்லபாயை ॥ ॥கஉ॥

நமோஸ்து ஹேமாம்புஜபீடிகாயை
நமோஸ்து பூமண்டலநாயிகாயை ।
நமோஸ்து தேவாதிதயாபராயை
நமோஸ்து ஶார்ங்காயுதவல்லபாயை ॥ ॥கங॥

நமோஸ்து தேவ்யை ப்ருகுநந்தனாயை
நமோஸ்து விஷ்ணோருரஸி ஸ்திதாயை ।
நமோஸ்து லக்ஷ்ம்யை கமலாலயாயை
நமோஸ்து தாமோதரவல்லபாயை ॥ ॥கச॥

நமோஸ்து காந்த்யை கமலேக்ஷணாயை
நமோஸ்து பூத்யை புவனப்ரஸூத்யை ।
நமோஸ்து தேவாதிபிரர்சிதாயை
நமோஸ்து நந்தாத்மஜவல்லபாயை ॥ ॥கரு॥

ஸம்பத்கராணி ஸகலேந்த்ரியநந்தனானி
ஸாம்ராஜ்யதானவிபவானி ஸரோருஹாக்ஷி ।
த்வத்வந்தனானி துரிதாஹரணோத்யதானி
மாமேவ மாதரனிஶம் கலயந்து மான்யே ॥ ॥கசு॥

யத்கடாக்ஷஸமுபாஸனாவிதி꞉
ஸேவகஸ்ய ஸகலார்தஸம்பத꞉ ।

ஸந்தநோதி வசநாங்கமாநஸை:
த்வாம் முராரிஹ்ருதயேஶ்வரீம் பஜே ॥ ॥கஎ॥

ஸரஸிஜநிலயே ஸரோஜஹஸ்தே
தவலதமாம்ஶுககந்தமால்யஶோபே ।
பகவதி ஹரிவல்லபே மநோஜ்ஞே
த்ரிபுவநபூதிகரி ப்ரஸீத மஹ்யம் ॥ ॥கஅ॥

திக்ஹஸ்திபி: கநககும்பமுகாவஸ்ருஷ்ட—
ஸ்வர்வாஹிநீவிமலசாருஜலப்லுதாங்கீம் ।
ப்ராதர்நமாமி ஜகதாம் ஜநநீமஶேஷ—
லோகாதிநாதக்ருஹிணீமம்ருதாப்திபுத்ரீம் ॥ ॥கசு॥

கமலே கமலாக்ஷவல்லபே த்வம்
கருணாபூரதரங்கிதைரபாங்கை: ।
அவலோகய மாமகிஞ்சநாநாம்
ப்ரதமம் பாத்ரமக்ருத்ரிமம் தயாயா: ॥ ॥உ0॥

ஸ்துவந்தி யே ஸ்துதிபிரமூபிரந்வஹம்
த்ரயீமயீம் த்ரிபுவநமாதரம் ரமாம் ।
குணாதிகா குருதரபாக்யபாகிந:
பவந்தி தே புவி புதபாவிதாஶயா: ॥ ॥உக॥

இதி ஶ்ரீமத்பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யஸ்ய
ஶ்ரீகோவிந்தபகவத்பூஜ்யபாதஶிஷ்யஸ்ய
ஶ்ரீமச்சங்கரபகவத: க்ருதௌ
ஶ்ரீ கநகதாராஸ்தோத்ரம் ஸம்பூர்ணம் ॥
ஶுபம் ॥

---

# ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யர் அவர்களின் அவதார கட்டம்.

அப்போது (தவத்தினால் ஸ்ரீ விருஷாசலேசரின் அருளைப் பெற்றபொழுது) ஆரியாம்பிகை (ஸ்ரீ சங்கராசாரியர்களின் தாய்) முற்றிலும் சிவன்பாற் செலுத்திய மனத்தையுடையவளாய் விளங்கினள்.

வேள்விகளை யியற்றும் அச்சிவகுருவும் (ஸ்ரீ சங்கராசாரியர்களின் தந்தை) தம் இல்லாளாகிய ஆரியாம்பாள் கர்ப்பிணியாயிருப்பதைக்கண்டு விருஷாசலேசரை உறுதியான மனத்தால் இடைவிடாது நினைத்துக்கொண்டும், தாழ்ந்த நிலைமையை யடைந்தோரென்றும், உயர்நிலையினரென்றும் வித்யாஸம் பாராட்டாமல் ஈசன் கருணை புரிவதைப் புகழ்ந்துகொண்டும், முழுமதியைக் கண்ட கடல்போல் பொங்கினர். (அளவற்ற மகிழ்வெய்தின ரென்பது கருத்து)

பிறகு கற்புடையவளான அவ்வாரியாம்பிகை கர்ப்பத்தின் பத்தாவது மாதத்தில், வளர்ந்த காலத்தில் ஐந்து கிரஹங்கள் உச்சஸ்தானத்தை யடைந்திருக்க நற்குறிப்புகள் நிறைந்த ஓர் நாளில், நடுப்பகலில், திருவாதிரை நக்ஷத்திரத்துடன் கூடிய அபிஜித முஹூர்த்தமென்னும் சிறந்த வேளையில், உதயகிரிக்கரை ஒளிமிகுந்த சூரியனைப்போலும், பார்வதீ தேவியார் ஆறுமுகனைப் போலும், இந்திராணி ஜயந்தனைப்போலவும், ஸத்தியவதி வியாஸ முனிவரைப் போலவும், அதிப்பிரகாசமுள்ள மகனைப் பெற்றாள்.

அப்போதே இவ்வாரியாம்பிகை நான்கு கைகளையுடையதும், முக்கண் படைத்ததும், சிரத்தில் சந்திரனைத் தாங்கியதும், சூரிய கிரணம்போன்று வெண்ணிறமும், சிறிது செந்நிறமும் கலந்த கண்களைக் கூசுவிக்கும் தன்னொளிகளால் பத்து திசைகளையும் பிரகாசிக்கச் செய்வதுமான ஒரு உருவைத் தன்முன் கண்டு, ஆச்சரியமுற்று, பயத்தினால் பிரஸவ வேதனையை யநுபவித்தாற் போல் மெய்சோர்ந்து, "இஃதென்ன விந்தை! யான் விரும்பியதோ வேறு, இங்கு தோன்றியிருப்பது மற்றொன்று" எனத்

தன்[illegible]த்து எழுந்து வணங்க அவாவுற்று நிமிர்ந்து பார்க்கையில் தேவர்கள் வானத்தினின்று பூமியில் மலர்மாரி பொழிந்தனர்.

அச்சமயம் செந்தாமரை மொட்டின் மணம் நிறைந்த காற்று வீசியது. எத்திசையிலும் ஆகாயம் பிரகாசமாக இருந்தது. பூமி எங்கும் செழித்திருந்தது. யாகாக்நிகள் பெரும்பாலும் வலமாகச் சுழலும் ஜுவாலைகளுள்ளனவாய் ஜுவலித்தன. இதுகாறும் துன்மதங்களின் கொடுமையால் மிக வருந்திய ஸாதுக்களின் மனமும் தெளிந்தது.

அக்குலமாது தான் விரும்பியதல்லாத மற்றோருருவைக் காணினும், தன் முன் தோன்றிய அவ்வுருவம் ஸ்ரீ விருஷாசலேசரெனத் தீர்மானித்து, விநயத்துடனும், சுறுசுறுப்புடனும் வணங்கிநின்று "ஸ்வாமி! இளமைப் பருவத்திற்குரிய லீலைகளை யான் காணுமாறு அருள்புரிக" என்று மீண்டும் மீண்டும் ஸ்ரீ பரமேசுவரரை வேண்டினள்.

பிறகு அங்கு தம் சுயரூபத்துடன் தோன்றியிருந்த அச்சிவ பெருமான் நொடிப்பொழுதில் ஓரிளங்குழவியாகமாறி அம்மகவு உதடுகளைச் சிறிதசைத்து கால் கைகளை உதறிக்கொண்டு அழுதது.

அப்பொழுதே இவ்வாரியாம்பிகையும் தான் இதுகாறும் கண்ட காட்சியின் நினைவை முற்றிலுமிழந்தவளாய் மாயையின் வயப்பட்ட மனதை யுடையவளானாள். உலகனைத்தையும் மயங்கச்செய்யும் மஹேசனது மாயையும் இதற்கீடாகவில்லை.

அங்கிருந்த மடந்தையரோவெனில் முன் கூறியவாறு ஈசனது ஸ்வரூபம் தோன்றியதையோ பின் இளங்குழவியாக மாறினதையோ நிகழ்ந்த எதையுமே அறிந்தாரில்லை. பின்னோ வளரும் சந்திர பிம்பம்போல் பிரகாசிக்கும் ஓர் குழந்தை பிறந்ததாகவே நினைத்தனர்.

அங்கிருந்த வயது சென்ற மாதர்கள் அச்சமயம் செய்ய வேண்டியனவற்றைச் செவ்வனே செய்து முடித்தனர்.

அங்கவதரித்த ஸ்ரீ சங்கரரின் தந்தையாகிய அச்சிவகுருவும் தமக்குப் புதல்வன் பிறந்த செய்தியைக் கேட்டு வறிஞன் புதையல் கிடைக்கப்பெற்று மகிழ்வதுபோல் அளவற்ற மகிழ்ச்சியை யடைந்தனர். தாம் இச்சிறந்த புத்திர பாக்கியம் பெற்ற பெருமையினால் ஸகல பாக்கியமும் பெற்ற குபேரனையும் மதித்தாரில்லை.

அவ்வாரியாம்பிகை ஸ்ரீ சிவபெருமானே அவதரித்தாரென்று தானறிந்தனளேயன்றி மற்றவர்க்கறிவிக்க வில்லை.

பிறகு தீக்ஷித சிரோமணியாகிய சிவகுரு நீராடி பலவிடங்களினின்றும் அந்தணர்களையும், உத்தம ஸ்திரீகளையும் வரவழைத்தனர். அப்போது அவ்வூரில் ஒவ்வொரு வீட்டிலும் இடைவிடாது பெருந்திருநாளாக இருந்தது. சிவகுரு கற்றறிந்த தீக்ஷிதர்களுக்குத் தான்னியக் குவியல்களை ஏராளமாகக் கொடுத்தனர். வேத முணர்ந்த அந்தணர்களுக்கு அளவற்ற பொருள்களை யீந்தனர். மேலும் தேவர்களுக்குரிய சிறந்த வஸ்திரங்களையும், பழங்களையும் அளித்தனர். உத்தம ஸ்திரீகளுக்கும் அளவற்ற பல பொருள்களை இடைவிடாது கொடுத்தனர். குடம் போன்ற மடிகளைத் தாங்கிய எண்ணிறந்த பசுக்களை முறைப்படி அலங்கரித்து தக்ஷிணைகளோடு தானம் செய்தனர். இந் நன்கொடைகளையெல்லாம் தன் நலம் கோராது ஸ்ரீ விருஷாசலேசர் எப்போதும் பிரீதியடைவாராகவென்றே தத்தம் செய்தனர். இவ்வாறு அறிஞரான சிவகுரு பிராம்மணர்களை முன்னிலும் மேலாக திருப்தியடைவித்துத் தம் சுற்றத்தாருடன் ஸந்தோஷமாய் வாழ்ந்திருந்தனர்.

அழகிய இலக்ஷணங்களுடையவளான அவ்வாரியாம்பிகையும் நீண்ட கண்களும், அகண்ட மார்பும், முழந்தாள் வரையில் தொங்குகின்ற இரு கைகளும், அழகிய அகண்ட நெற்றியும், தாமரையை இகழும் சிறிது சிவந்த கடைக்கண்ணும், பூர்ணிமைச் சந்திரனை யவமதித்த முகத்தினொளியும், வரவர உயர் நோக்கி வரும் கதிரவனின் காந்திபோன்ற நாற்புறமும் பரவுகின்ற வெண்ணிறமான மெய்யொளியும், திருவடித்தாமரையில் சங்கு சக்கிரம் கொடி இவற்றினுருவாயமைந்த இரேகைகளும், இவ்விதம் முப்பத்திரண்டு இலக்ஷணங்களும் அமைந்த மின்னலுக் கொப்பான

திருமேனி யடைந்தவனும், பார்த்தவளவிலேயே பார்ப்பவர்களுக்கு மிகக் களிப்பை யளிப்பவனும், இளமைப் பருவத்திலுள்ளவனுமாகிய பாலருந்தும் தன் மைந்தனை அன்புடன் கண்களாலருந்தியருந்தி (பார்த்துப் பார்த்து) கண்ணனைக் கண்டுகளிக்கும் யசோதைபோலும், சந்திரனைக் கண்டானந்திக்கும் சகோரப்பேடுபோலும், நொடிப்பொழுது காணாதிருக்கவும் மனந்தாளாதவளாய் அருமையாய்ச் சீராட்டிக்கொண்டுச் சுகமாயிருந்தனள்.

இவ்விதம் ஆசார்ய மூர்த்தி அவதாரம்செய்து அனேக பால லீலைகளையியற்றி ஐந்தாவது வயதில் உபநயனமாகி, குருகுலத்தை யடைந்து வேதமோதி வருகையில், ஒரு துவாதசியன்று ஒரு ஏழை இல்லத்திற்கேகி பிக்ஷை கேட்க, அவ்வீட்டம்மை பிக்ஷைகொடுக்க வேறொன்றுமில்லாமல் வறுமையினால் வருந்தி, தன்னில்லத்திருந்த ஒரு நெல்லிக்கனியை மாத்திரம் பிக்ஷையளிக்க ஸ்ரீ ஆசார்ய மூர்த்தியின் மனங்கரைந்து, மஹாலக்ஷ்மியை நோக்கி "கல்யாண வ்ருஷ்டிஸ்தவம்" அல்லது "கனகதாராஸ்தவம்" என்ற ஸ்தோத்ரத்தை விக்ஞாபனம் செய்ய, மஹாலக்ஷ்மி ப்ரஸன்னமாகி அவ்வேழை வீட்டில் தங்க நெல்லிக்கனிகளைச் சொரிந்தருளினாள்.



**Printed at Vaidika Vardhini Press, Kumbakonam. Published by Veda Dharmashastra Paripalana Sabha, Kumbakonam.**

**Copies 2,500, 29—4—1949.**